# சங்க இலக்கிய அகப்பாடல்களில் குறியீடுகள்

பாரதிதாசன் பல்கலைக்கழகத் தமிழியல் முனைவர்

பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

மு. ஜோதி

ஆய்வு நெறியாளர்

பேராசிரியர் முனைவர் இராதா செல்லப்பன்





தமிழியல் துறை

பாரதிதாசன் பல்கலைக்கழகம்

திருச்சிராப்பள்ளி - 620 024

ஏப்ரல் 2008

# தமிழியல் துறை
# பாரதிதாசன் பல்கலைக்கழகம்
# திருச்சிராப்பள்ளி - 620 024

---

**திருமதி மு. ஜோதி**
ஆய்வாளர்

30.04.2008

## ஆய்வாளர் உறுதிமொழி

**‘சங்க இலக்கிய அகப்பாடல்களில் குறியீடுகள்’** என்னும் தலைப்பில் பாரதிதாசன் பல்கலைக்கழகத் தமிழியல் துறையில் மேற்கொள்ளப்பட்ட இம்முனைவர் பட்ட ஆய்வு, என் சொந்த முயற்சியால் உருவானது என்பதோடு, வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதி அளிக்கிறேன்.

ஆய்வாளர் கையொப்பம்
**(மு. ஜோதி)**

சான்றொப்பம்

3/4

**(இராதா செல்லப்பன்)**
ஆய்வு நெறியாளர்
**பேராசிரியர் & துறைத்தலைவர்,**
தமிழியல் துறை,
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
திருச்சிராப்பள்ளி - 620 024.



**தமிழியல் துறை**
**பாரதிதாசன் பல்கலைக்கழகம்**
**திருச்சிராப்பள்ளி - 620 024**

***முனைவர் இராதா செல்லப்பன்***
*பேராசிரியர் & தலைவர்*

## சான்றிதழ்

**'சங்க இலக்கிய அகப்பாடல்களில் குறியீடுகள்'** என்னும் தலைப்பில் பாரதிதாசன் பல்கலைக்கழகத் தமிழியல் துறையில் மேற்கொள்ளப்பட்ட இம்முனைவர் பட்ட ஆய்வு, **திருமதி மு. ஜோதி** என்ற இவ் ஆய்வாளரால் என் மேற்பார்வையில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்பதோடு, இவ் ஆய்வின் மீது வேறு எந்த ஆராய்ச்சிப்பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்படவில்லை என்று சான்றளிக்கிறேன்.

30/4

**(இராதா செல்லப்பன்)**
ஆய்வு நெறியாளர்
பேராசிரியர் & துறைத் தலைவர்,
தமிழியல் துறை,
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
திருச்சிராப்பள்ளி - 620 024.

திருச்சிராப்பள்ளி – 24
30.04.2008

# நன்றியுரை

தமிழியல் துறையில் ஆய்வு மேற்கொள்ள எனக்கு அனுமதி வழங்கிய பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வின் முழு வெற்றி என்பது ஆய்வு நெறியாளரின் சிறப்புப் பண்புகளைப் பொறுத்தே அமைகிறது என்றால் அது மிகையாகாது. சங்க இலக்கியத்தில் ஆய்வுகள் பொதுவாக நிறைவடைந்துவிட்டதாக ஒரு கருத்து ஆய்வாளர்களுக்கிடையே பரவலாக நிலவி வரும் இவ்வேளையில், சங்க இலக்கியம் பெரிய ஆழ்கடல் என்றும் மனிதகுலம் உள்ளவரை சங்க இலக்கியத்தில் புதுப்புது ஆய்வுகள் நிகழும் என்றும் எனக்கு உணர்த்தி, என்னைத் தன்னுடைய ஆய்வாளராக ஏற்றுக்கொண்டு சங்க இலக்கியத்தில் ஆய்வு மேற்கொள்ள எனக்கு வாய்ப்பு நல்கி, இவ்வாய்வு செம்மையாக அமையத் துணைநின்று, ஆய்வுக்காலத்தில் நான் மனந்தளர்ந்த பொழுதெல்லாம் என்னை ஊக்கப்படுத்தி, ஆய்வின்போது ஏற்பட்ட தடைகளை படிக்கற்களாக செவ்வனே செதுக்கி ஆய்வின் வெற்றிக்கு என்னை எளிதாக அழைத்துச்சென்ற என் ஆய்வு நெறியாளர் பேராசிரியர் முனைவர் **இராதா செல்லப்பன்** அவர்களுக்கு நான் என் வாழ்நாள் முழுதும் நன்றியுடையவளாகிறேன்.

இவ்வாய்வின் ஆய்வுக்குழு உறுப்பினராக இருந்து தகுந்த கருத்துக்களை வழங்கி உதவிய தமிழ்ப் பல்கலைக்கழகம், சமூகவியல் துறை, பேராசிரியர் முனைவர் **இராபர்ட் சத்ய ஜோசப்**, அவர்களுக்கு என்னுடைய மனம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாய்வு செவ்வனே அமைய அவ்வப்போது அரிய கருத்துக்களை வழங்கிய பாரதிதாசன் பல்கலைக்கழகத் தமிழியல் துறைப் பேராசிரியர்கள்

அனைவருக்கும், ஆய்வு மாணவர்களுக்கும் மற்றும் அலுவலக உதவியாளர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வேடு செம்மையாக அமைய உதவி செய்த முனைவர் **காசி மாரியப்பன்**, இணைப்பேராசிரியர், பெரியார் ஈ.வெ.ரா. அரசு கலைக் கல்லூரி, திருச்சிராப்பள்ளி அவர்களுக்கு என் மனம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என்னுடைய ஆய்விற்கு உறுதுணையாக நின்ற நூல்களை வழங்கிய பாரதிதாசன் பல்கலைக்கழக பொது நூலகம், தமிழியல் துறை நூலகம், அரசு கலைக் கல்லூரி நூலகம், கரூர், மாவட்ட மைய நூலகம், திருச்சிராப்பள்ளி ஆகிய நூலகங்களில் பணியாற்றும் நூலகர்கள் மற்றும் உதவியாளர்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவிக்கின்றேன்.

என்னுடைய ஆய்விற்கு பல்வேறு வழிகளில் உதவிபுரிந்த என் சக ஆய்வாளர்கள் திரு. இரா. செந்தில்குமார், திரு. மு. ஞானதீபன், செல்வி சு. திவ்யா ஆகியோருக்கு நன்றி கூற கடமைப்பட்டுள்ளேன். இவ்வாய்வேட்டினை செவ்வனே அச்சுப்படி செய்து உதவிய செல்வி இராஜ ரீனாவிற்கு என் நன்றி.

திருச்சிராப்பள்ளி - 24 — **மு. ஜோதி**
நாள்: 30.04.2008

# பொருளடக்கம்

# 1. குறியீட்டியல் - ஓர் அறிமுகம்

# 1. குறியீட்டியல் - ஓர் அறிமுகம்

## முன்னுரை

இலக்கியத்தின் நிலைத்த வாழ்வுக்கும் உணர்வைத் தூண்டிப் பொருள் நலம் சுரக்கும் அதன் ஆற்றலுக்கும் அடிப்படை அதன் குறிப்புப் பொருள் வளம் ஆகும். குறிப்பாகப் பொருள் உணர்த்தும் இலக்கிய உத்திகளில் தலைசிறந்ததாகக் குறியீடு உள்ளது. அண்மைக் காலமாகத் தமிழ் ஆய்வுலகில் பரவலாகச் சிந்திக்கப்பட்டு வரும் ஆய்வுத் தளங்களில் குறியீடும் ஒன்றாகும். குறியீட்டின் பொருண்மையானது பல நிலைகளைக் கொண்டதாக உள்ளது. இப்பல்நிலைப் பொருண்மை அமைப்பினைக் குறியீட்டியலின் பின்னணியில் புரிந்து கொள்வது குறியீட்டை இனங்காணுவதற்கு உதவுவதாக இருக்கும்.

பழங்கால மனிதன் உடல் உறுப்புகளின் அசைவுகளாலும், ஒலிகளாலும் தன் கருத்தை வெளிப்படுத்த முயன்ற போதே குறியீடும் தோன்றிவிட்டது எனலாம். தொடக்க கால மனிதன் தன் எண்ணங்களை ஓவியங்களாக வெளிப்படுத்தினான். பின்னர் வந்த பேரரசர் காலங்களில் சின்னங்கள் குறியீடுகளாகச் செயல்பட்டன. இவ்வாறு குறியீடு படிப்படியாக மக்கள் வாழ்க்கையில் இடம்பெற்று வளர்ச்சி அடைந்துள்ளது. சமுதாயத்தைப் பிரதிபலிக்கக்கூடிய இலக்கியத்திலும் குறியீடுகள் இடம்பெற்றுள்ளன.

### 1.1 குறி-சொற்பொருள் விளக்கம்

பொருண்மைகளை வெளிக்கொணரும் ஆய்வுமுறையான குறியீட்டியல் தனது ஆய்வுச் செயல்பாட்டின் அடிக்கூறாகக் 'குறி' என்ற அடிப்படை

அலகினைக் கொண்டு அமைகிறது. அதாவது “உயிரியல் செல் (Cell) என்ற அலகினையும், கணிதவியல் சூத்திரம் (Formula) என்ற அலகினையும், இயற்பியல் இயக்கம் (Motion), அணுவியல் அணு (Atom) என்ற அலகினையும் கொண்டிருப்பது போல குறியீட்டியல் ‘குறி’ (Sign) என்ற அலகினைக் கொண்டுள்ளது” என்பர் (ரவி, 1992:1).

‘அடையாளம்’ ‘இலச்சினை’ ‘குறி’ முதலிய பல பொருண்மைகளை உள்ளடக்கியது சிம்பலான் (Symbolon) என்ற கிரேக்கச் சொல். இதனடியாக உருவாக்கப்பட்ட ‘சைன்’ (Sign) என்னும் ஆங்கிலச் சொல்லானது ஒரு கருத்து அல்லது பொருண்மையைத் தெரிவிக்கும் குறி என்பது உட்படப் பல பொருண்மைகளைக் கொண்டதாக விளங்குகிறது (J.A. Cudden, 1977:30).

‘சைன்’ என்னும் ஆங்கிலச் சொல்லுக்குத் தமிழில் ‘குறி’ என்னும் சொல் ஆளப்படுகிறது. “‘குறி’, ‘அடையாளம்’, ‘அறிகுறி’, ‘அடையாளக் குறிப்பு’, ‘அறிவிப்புக்குறி’, தெரிந்த எழுத்துக்குப் பதிலாக மேற்கொள்ளப்படும் தெரியவரா எழுத்து” என்பன உட்பட முப்பத்து நான்கு பொருண்மைகளைக் கொண்டதாய் தமிழில் இச்சொல் வழக்குப் பெறுகிறது (Chidhambaranatha Chettiar, 1965:935).

குறி என்பது சைகையின் மூலமாக செய்திகளைத் தெரிவிக்கப் பயன்படுத்தும் முறை கையசைவு, உடலசைவு, முகத்தின் சுளிப்பு, விரிப்பு மூலமாகச் செய்திகளைத் தெரிவிக்கப் பயன்படுத்தும் முறை என்கிறது

பிரிட்டானியக் கலைக்களஞ்சியம் (1977:49). நடைமுறைத் தமிழிலும் பேச்சு வழக்கு, எழுத்து வழக்கு எனும் இரு வழக்குகளிலும் அடையாளம், இலக்கு, நோக்கம் என்றாற்போல பல பொருண்மைகளைக் கொண்டதாகவே இச்சொல் வழங்கப்படுகிறது. சான்று (1) கையொப்பம் (Signature) (2) குறிதவறிவிட்டது (3) குறிக்கோளுடன் வாழ வேண்டும் என்ற சான்றுகள் முறையே அடையாளம், இலக்கு, நோக்கம் என்ற பொருண்மைகளைப் பெற்றிருத்தலைக் காணலாம்.

தமிழ் மொழியின் எழுத்து வழக்கைப் பொறுத்தவரையில் தொல்காப்பியத்திலிருந்தே குறி என்ற சொல்லின் பயன்பாட்டினைக் காணமுடிகிறது. தொல்காப்பியத்தில் இச்சொல்லின் பயன்பாட்டுச் சூழலை நோக்க 'அடையாள ஒலி' 'அடையாள இடம்' 'அடையாளச் சொல் குறித்தல், (பெயரிடல்), 'குறிப்பு' என்னும் நான்குவிதமான பொருண்மைகளை இச்சொல் உணர்த்துதலை அறிய முடிகிறது.

*குறியெனப் படுவது இரவினும் பகலினும்*
*அறியத் தோன்றும் ஆற்றது என்ப*

தொல்:களவி: 40

என்னும் களவியல் நூற்பாவைப் பொறுத்தவரையில் குறி என்ற கலைச் சொல்லானது அடையாள இடம் என்றே பொருள் பெறுகின்றது என்பதை அறியமுடிகிறது. குறியிடத்தில் தலைவன் தான் வந்ததைப் புள்ளெழுப்பியும் புன்னைக்காய் வீழ்த்தியும் தெரிவிப்பான். இது இருவரும் சந்திப்பதற்கான அடையாள ஒலியாகும்.

*அன்னை வாழியோ வன்னைநம் படப்பை*
*மின்னென நுடங்கிடைக் கின்னழ லாகி*
*புன்னை மென்காய் போகுசினை யிரிய*
*ஆடுவளி தூக்கிய வசைவிற் கொல்லோ*
*தெண்ணீர் பொய்கையுள் வீழ்தென*
*எண்ணினை யுரைமோ வுணர்குவல் யானே*

என்ற இப்பாடல், காற்றால் புன்னைக்காய் பொய்கையில் வீழ்ந்ததைக் குறிப்பிடுகிறது. இப்பாடலை அல்லகுறிப் பட்டதற்குக் காட்டாக அகப்பொருள் விளக்க உரையாசிரியர் கூறுகிறார் (1992:156).

இதுபோன்றே சங்க இலக்கியங்களில் குறி, குறிப்பு என்னும் சொற்கள் பல இடங்களில் ஆளப்பட்டுள்ளன. இவ்விடங்களில் இச்சொற்கள் பல்வேறு பொருண்மைகளை உள்ளடக்கியதாகவே ஆட்சி பெற்றுள்ளன. குறி என்பது குறியிடம், அடையாள ஒலி (குறுந்: 121:5), (கலி: 33:12), குறித்த காலம் (அகம்: 25:13), (ஐங்: 494:4), இசைவுச் சமிஞை (குறுந்: 299:4), விழுப்புண் (அகம்: 35:9), கோடு வரைதல் (அகம்: 351:10) போன்ற பொருளிலும், குறிப்பு என்பது செயலின் மூலம் வெளிப்படுத்தும் குறிப்பு, உள்ளக் கருத்து என்ற பொருளிலும் வருகின்றன. இவற்றை எல்லாம் நோக்க தமிழில் ‘குறி’ என்ற சொல்லானது பல்பொருள் பொதிந்த கலைச் சொல்லாகவே திகழ்வதை உணரலாம்.

குறி என்பது உணர்வுகளுக்கும் அறிவிற்கும் சில குறிப்புகளை உணர்த்தும் ஓர் அடையாளம் என்று கூறலாம். பல பொருள்களிடையே கலந்திருப்பதொன்றைப் பிரித்து அறிவதற்குக் குறி பயன்படுகிறது. அது பெயராகவோ, வண்ணமாகவோ, வடிவமாகவோ இருக்கலாம். எந்த ஒரு

புலப்படுத்தக் கருவியையும் 'குறி' (Sign) என்னும் பொதுப்பெயரால் அழைக்கலாம். குறி என்பது குறிப்பான் (Signifier), 'குறிப்பீடு' (Signified) என்ற இரு பகுதிகள் கொண்டது என்கிறார் பியர்ஸ். ஒரு சொல்லின் சப்தவடிவத்தை "சிக்னிபியர்" (Signifier) என்றும் அது சுட்டும் கருத்தாக்கத்தை "சிக்னிபைடு" (Signified) என்றும் சசூர் அழைக்கிறார். இது சொற்குறிக்கு மட்டுமே பொருந்துவதாக உள்ளது. படக்குறி, பொருள்குறி, சுட்டுக் குறி, உருவக்குறி போன்றவற்றிற்கு இது பொருந்துவதாக இல்லை.

குறியின் உண்மையான பொருண்மை அது பயன்படுத்தப்படும் சூழலாலேயே தீர்மானிக்கப்படுகிறது எனக் கொள்ளலாம். + எனும் குறி கணிதத்தில் கூட்டல் என்ற பொருளைத் தருகிறது. இக்குறியே சிவப்பு வண்ண வட்டத்திற்குள் வெண்ணிறக் கூட்டல் குறியாக அமையும்போது, மருத்துவச் சேவை அமைப்பையும் வெள்ளை வண்ண வட்டத்திற்குள் சிவப்பு வண்ணக் கூட்டல் குறியாகும் போது செஞ்சிலுவைச் சங்கத்தையும் அவசர ஊர்தியையும் குறிக்கும். ஊதா வண்ணத்தில் இருக்கும்போது விலங்கு, பறவை வதைத் தடுப்பு அமைப்பையும் குறிக்கிறது.

### 1.1.1 மூவகைக் குறிகள்

குறிகள் பல வகைப்படும். குறியின் பொருண்மைப் புலப்பாட்டின் அடிப்படையில் அமெரிக்க அறிஞர் பியர்ஸ் அவற்றை மூன்று வகைக்குள் அடக்கிக் காட்டுகிறார். அவை

1. உருவக்குறி - Iconic sign
2. சுட்டுக்குறி - Indexical sign
3. குறியீட்டுக்குறி - Symbolic sign என்பனவாகும்.

"**உருவக்குறி** (Iconic Sign) என்பது குறிப்பான், குறிப்பீட்டிற்கு இடையிலான உருவ ஒப்புமையின் அடிப்படையில் அறியப்படுவதாகும்" (Keir Elam, 1980:210). சான்றாக, புகைப்படம், ஓவியம், சித்திரம் ஆகியவற்றைக் கூறலாம். மேலும், இலக்கியத்தில் இடம்பெறும் பாடல்களைச் சான்றாகக் காட்டலாம்.

*தாமரை புரையும் காமர் சேவடி*
*பவழத் தன்ன மேனி திகழொளி*
*குன்றி னேய்க்கும் உடுக்கைக் குன்றின்*
*நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேல்*
*சேவலங் கொடியோன் ……*

குறுந்: 1

என்ற குறுந்தொகைப் பாடலில் முருகக் கடவுளின் உருவ அமைப்பினை வடித்துக் காட்டியிருக்கிறார் பெருந்தேவனார்.

*பச்சைமா மலைபோல் மேனி*
*பவளவாய்க் கமலச் செங்கண்*

என்ற தொண்டரடிப் பொடியாழ்வாரின் பாடல் திருமாலின் உருவ அமைப்பினை மனக்கண் முன் காட்டுகிறது.

"**சுட்டுக்குறி** (Indexical Sign) என்பது ஒன்றின் வழி தொடர்ச்சியாய் ஒரு கருத்தினைப் பெறுவதாகும்" (Keir Elam, 1980:210). ஓர் இடத்தையோ, நபரையோ சுட்டுவதற்கு ஆட்காட்டி விரலைப் பயன்படுத்துகிறோம். இக்காலத்தில் பேருந்து, கழிப்பிடம் ஆகிய இடங்களில் எழுதப்பட்டுள்ள

ஆடவர், மகளிர் என்ற சொற்கள் போன்றவை சுட்டுக்குறிப் பண்புடையன என்று கூறலாம்.

**குறியீட்டுக்குறி** (Symbolic sign) என்பது ஒரு பொருளின் கருத்திற்கு ஈடான பிறிதொரு கருத்தினை அளிப்பதாகும். "ஒரு குறிப்பீடு வேறொரு குறிப்பீட்டுக்குப் பதிலாக நிற்பது குறியீட்டுக்குறி ஆகும்" என்று டெரான்ஸ் ஹாக்ஸ் குறிப்பிடுகிறார் (1977:128). "உருவக்குறியில் ஒரு குறிப்பான் ஒரு குறிப்பீட்டின் பௌதிகக் கூறினை மட்டும் பிரதிபலித்துக் காட்டுகிறது. சுட்டுக்குறியில் ஒரு குறிப்பான் ஒரே குறிப்பீட்டைப் பெறுவதற்கான வழியாகச் செயல்படுகிறது. ஆனால் குறியீட்டுக் குறியிலோ ஒரு குறிப்பான் ஒன்றுக்கும் மேற்பட்ட குறிப்பீடுகளைத் தருவதாக உள்ளது" என்பர் (இளம்பரிதி, 2006:28).

சங்க இலக்கியப் பாடல்களிலும் குறியீட்டுக் குறியின் பயன்பாடு நிரம்பவே உள்ளது.

*...... ...... ......... வாழைக்*
*கொழுமுதல் ஆய்கனி மந்தி கவரும்*
நன்மலை நாடனை

நற்: 251:2-4

என்ற நற்றிணைப் பாடலில் குரங்கு கனியை உண்ணுதல் என்ற இயற்கை வருணனையில் 'வாழைக்கனி' 'குரங்கு' என்ற இரண்டு குறிபொருள்கள் உள்ளன. முதல் நிலையில் முறையே ஒருவகைக் கனி 'ஒருவகை விலங்கு' என்ற கருத்தைத் தருகிறது. பிறகு அது அதற்கடுத்த நிலையில் 'தலைவி',

'தலைவன்' என்ற கருத்துகளைத் தருகிறது. இதில் குரங்கு தலைவனாகவும் வாழைக்கனி தலைவியாகவும் குறியீட்டாக்கம் பெறுகின்றன. இதன் மூலமாக குறியீட்டுக் குறியில், ஒரு நிலையிலான உறவு மற்றொரு நிலைக்கு இடப்பெயர்ச்சி செய்யப்படுகிறது என்பதைப் பெறமுடியும். ஒரு குறிபொருளின் மேற்தளத்தில் உள்ள உடனடிப்பொருண்மையை அல்லது, அதன் உள்ளார்ந்த நிலையில் உறைந்துள்ள வேறோர் பொருண்மையை வெளிப்படுத்துவதே குறியீட்டுக்குறியின் நோக்கம் ஆகும். ஆய்வேட்டின் இனி வரும் பகுதிகளில் குறிப்பிடப்படும் 'குறியீடு' என்ற சொல் குறியீட்டுக் குறியையே குறிக்கும்.

### 1.1.2 குறி – உறவுநிலைகள் (Sign Relations)

குறியீடு தோன்றுவதற்குக் காரணமாக சில உறவுகள் அமைகின்றன. "இரு பொருட்களிடையே சேர்க்கை காரணமாகத் தோன்றும் ஒட்டுறவும் (Association by Contiguity), ஒப்புமை காரணமாகத் தோன்றும் ஒப்புறவும் (Association by Similarity) குறியீடு தோன்றக் காரணமாகின்றன" என்கிறார் அப்துல் ரகுமான் (2006:18).

ஒட்டுறவு இயற்கையாகவும் செயற்கையாகவும் தற்செயலாகவும் ஏற்படுகிறது.

புகை – நெருப்பை இயற்கையுறவாலும்
தேசியக் கொடி – நாட்டை செயற்கையுறவாலும்
போதி மரம் – பௌத்தத்தைத் தற்செயல் உறவாலும்

குறியீடுகளாகிச் சுட்டுவதைக் காட்டலாம். தூரத்தில் இருக்கும் இரு பொருள்களை இணைக்கும் சிந்தனையே ஒப்புமை (Resemblance) என்கிறார் தமிழவன் (1992:7). இவ்வொப்புமை கண்ணால் காணக்கூடியதும் காண முடியாததுமான பல உண்மைகளைப் புரிந்து கொள்ள உதவுகிறது. சான்றாக *'ஆப்போலும் ஆமா'* என்பதில் ஆமா என்பது பசு போன்ற ஒரு விலங்கு என்பதை அறியமுடிகிறது.

ஒப்புறவு வெளித் தோற்றமாகிய உருவ ஒப்புமையில் மட்டும் ஏற்படுவதன்று, பண்பு போன்ற உள்ளார்ந்த ஒப்புமைகளும் ஒப்புறவுக்கும் காரணமாகிக் குறியீடு தோன்றக் காரணமாகின்றன. அனைத்துத் துறைகளிலும் நுண்ணியலானவற்றை விளக்கவும், கலைகளில் நுண்ணுணர்வைத் தூண்டவும் குறியீடு பயன்படுத்தப்படுகிறது.

### 1.1.3 குறியும் புறப்பொருளும்

குறியின் புறப்பொருள் பற்றிய முன் அனுபவத்தை ஒருவன் பெற்றிருக்கும்போதுதான் அடையாளங்களையும் அடையாளச் சின்னங்களையும் (Emblems of Identity) அவன் புரிந்துகொள்ள இயலும். "அடையாளச் சின்னங்கள் சுட்டிக் காட்டும் பொருட்கள் மற்றும் அவை குறிப்பிட்டுக் காட்டும் அடையாளங்கள் ஆகியவற்றோடு ஏற்படுத்திக் கொள்ளும் அத்யந்த அறிவின் மூலம் மேற்கொள்ளப்படும். சூழலாய்வு (Contextual Study) அடையாளச் சின்னங்களைப் பற்றி உருவவியல் அல்லது அமைப்பியலாய்வு செய்வதற்கு இன்றியமையாத வகையில் துணைபுரியும்" என்கிறார் மில்டன் சிங்கர் (தனஞ்செயன், 1996:148).

“ஒரு குறியின் செயல்பாட்டினைப் பகுப்பாய்வு செய்யும் போது குறி (Sign), புறப்பொருள் (Object), பிரதிநிதித்துவம் அல்லது கருத்து (Interpretant) ஆகியவற்றின் மும்முனைத் தொடர்புதான் குறி என்பது தெளிவாகும். குறிகள் செயலை மேற்கொள்ள ஒரு சூழல் (Context) வேண்டும். சூழல் இருந்தால்தான் ஆசிரியனும் கேட்பவனும் ஓர் உடன்பாட்டுக்கு வரமுடியும் என்கின்றனர் பியர்ஸ், விட்டிஹென்ஸ்டீன் ஆகியோர்” (தமிழவன், 1992:54). ஒரு கவிதையை எடுத்துக்கொண்டால் முதல் நான்கு வரிகளில் கொடுக்கப்பட்டச் சித்திரம் ஒரு நாட்டுப்புற ஓவியமா? அல்லது ஒரு கேலிச்சித்திரமா? (Cartoon) என்பது வாசகர் எத்தகையவர் என்பதைப் பொறுத்தது. வாசகர் சூழல்பொருளை அறியாதவராக இருந்தால் அந்தச் சித்திரம் கார்ட்டூன் பற்றியது என்ற எண்ணம் வராது. எனவே குறியின் பொருளைப் புரிந்துகொள்ளச் சூழலும் ஒரு காரணமாகின்றது என்பதை உணர முடியும்.

செய்தித் தாளில் இடம் பெறும் கேலிச்சித்திரங்கள் (Cartoon) பெரும்பாலும் நடப்புச் சூழலை விளக்குவதாக அமையும். அந்த கேலிச்சித்திரங்களின் பொருள் அவ்வக்கால அரசியல் சூழல் தெரிந்தவர்க்கு மட்டுமே புலப்படும். ஏனையோர்க்கு அது வெற்றுப்படமாகவே காட்சியளிக்கும்.

### 1.1.4 குறியின் மூன்று நிலை

மொழியின் பொருண்மை அமைப்புகளைப் பற்றி ஆராயும் பியர்ஸ் ஒவ்வொரு குறியும் மூன்று நிலை விளக்கங்களைத் தன்னகத்தே

கொண்டுள்ளது என்று கூறுகிறார். அவை

1. முதல் நிலைப் புலப்பாடு (Immediate Interpretation)
2. உள்ளார்ந்த நிலைப் புலப்பாடு (Dynamic Interpretation)
3. முடிவான புலப்பாடு (Final Interpretation)

என்பனவாகும்.

1. முதல்நிலைப் புலப்பாடு என்பது ஒரு பொருளை அல்லது ஒரு குறியைப் பார்த்தவுடன் ஏற்படும் புரிதல் ஆகும்.
2. உள்ளார்ந்த நிலைப் புலப்பாடு என்பது அப்பொருள் அல்லது குறி பயன்படுத்தப்படும் சூழலைக் கூர்ந்து நோக்கி மீண்டும் உற்று நோக்குகையில் புலப்படுவது ஆகும்.
3. முடிவான புலப்பாடு என்பது அந்தக் குறிப்பிட்ட சூழலில் அந்த பொருள் அல்லது குறி என்ன பொருண்மையினை முதன்மைப்படுத்துகிறது என்பதை உற்றறிந்து பெறுவது ஆகும்.

சங்க இலக்கியப் பாடல் ஒன்றின் மூலம் இதனைச் சான்று காட்டி விளக்கலாம்.

*கருவிரல் மந்திச் செம்முகப் பெருங்கிளை*
*பெருவரை அடுக்கத்து அருவி ஆடி*
*ஓங்குகழை ஊசல் தூங்கி வேங்கை*
*வெற்பணி நறுவீ கற்சுனை உறைப்பக்*
*கலையொடு திளைக்கும் வரையக நாடன்*

நற்: 334:1-5

என்னும் நற்றிணைப் பாடலை எடுத்துக்கொள்ளலாம். கருமையான விரல்களையும் சிவந்த முகமும் கொண்ட குரங்கினத்தைச் சுற்றமாக

உடைய மந்தி மலைப்பக்கத்தில் உள்ள அருவியில் நீராடி, உயர்ந்த மூங்கிலில் ஊசலாடிவிட்டு, மலையிலுள்ள வேங்கை மரத்தின் கிளையில் ஏறி அவ்வேங்கை மலர்கள் சுனையில் உதிரும்படி செய்து பின்னர் கடுவனொடு திளைத்தது. 'இத்தகைய மலைக்குத் தலைவன்' என்பது பாடலின் பொருள். இவ்வடிகளைப் படிக்கும்போது இது தலைவனின் ஊர் பற்றிய வருணனை என்னும் கருத்தினை உடனடியாக உணர்ந்துகொள்ள முடியும். இது குறிபொருள் மூலம் பெறப்படும் **முதல்நிலைப் புலப்பாடு** ஆகும்.

அடுத்த நிலையில், தலைவன் பகற்குறியின் இடையீட்டால் தோழியிடம் இரவுக்குறி வேண்டுகிறான். அதற்குடன்பட்ட தோழி தலைவியிடம் இரவுக்குறிக்கு உடன்படுத்துவதற்கு கூறும் கூற்று என்பதை அறிய முடிகிறது. இவ்வாறு சூழலைக் கருத்தில் கொண்டு இத்தொடரை மீண்டும் படிக்கும் போது தலைவனின் மலைநாடு பற்றிய வருணனை மட்டும் அல்ல இதற்குள் வேறொரு பொருளும் இருத்தல் வேண்டும் என்ற விளக்கத்தைப் பெற முடிகிறது. இது **உள்ளார்ந்தநிலைப் புலப்பாடு** ஆகும்.

இப்பாடலில் 'செம்முகமந்தி' தலைவியையும் 'கடுவன்' தலைவனையும் குறிக்கிறது. மந்தி அருவியிலே ஆடி, ஊசலில் தூங்கி, நறுமலர் சுனையில் விழும்படி மரத்திலேறி கலையொடு புணர்ந்தது என்று வருணிப்பது போலக் கூறி தலைவியை இரவுக் குறிக்கு உடன்பட வைக்கிறாள் தோழி என்ற பொருளை உற்றறிய முடிகிறது. இங்கு இக்குறிபொருளில் இதற்கடுத்த நிலையில் எவ்விதமான பொருளும் கிடைப்பது இல்லை. எனவே இது இக்குறியின் **முடிவான புலப்பாடு** ஆகிறது.

வாசிப்புக்கு ஏற்ப குறியின் பொருள்தளம் மாறிக்கொண்டே இருக்கும். ஒவ்வொரு முறை வாசிக்கும் போதும் ஒவ்வொரு பொருள் கிடைத்துக் கொண்டே இருக்கும். எனவே, ஒரு படைப்பின் முதன்மையான அல்லது உண்மையான பொருளினை அறிய வேண்டுமாயின் அப்படைப்பை மீண்டும் மீண்டும் வாசிக்க வேண்டியது அவசியமாகும் என்பதை இதன் வழி அறிய முடிகிறது.

### 1.1.5 குறியும் குறியீடும்

குறி (sign) என்பது ஒன்றைக் குறிப்பது எனினும் குறியீட்டினின்றும் சில இயல்புகளால் வேறுபடுகிறது. “குறி ஒரு பொருளைச் சுட்டிக்காட்டுகிறது. குறியீடோ அப்பொருளின் இடத்தில் தான் நிற்கிறது” என்று வேறுபடுத்துகிறார் அட்லர் (1977:730). “குறிகள் வகுத்தபடி வழி அமைப்பன என்றும் (Operators) குறியீடுகளோ வழி வகுப்பன (Designators) என்றும் இவற்றின் செயல்திறம் பற்றி விளக்குமிடத்து குறிகள் என்புதோல் போர்த்திய உடம்பென்றும் குறியீடுகளோ அவற்றின் உயிர்” என்றும் கூறிய வி.து. சீனிவாசனின் கருத்தை அப்துல் ரகுமான் குறிப்பிடுகிறார் (2006:21). எனவே, ஒன்றை இனங்காட்டுவது குறி என்றும் ஒன்றுக்குப் பதிலாக நிற்பது குறியீடு என்றும் குறிப்பிடலாம்.

## 1.2 குறியீடு – சொல்லும் பொருளும்

‘சிம்பல்’ (Symbol) என்னும் ஆங்கிலச் சொல் கிரேக்க மொழியின் ‘சிம்பலேன்’ (Symballein) என்ற கிரேக்க வினைச்சொல்லிருந்தும் அதையொட்டிப் பிறந்த ‘சிம்பலன்’ (Symbolon) என்ற பெயர்ச்

சொல்லிலிருந்தும் தோன்றியதாகும். ‘சிம்பலேன்’ என்ற சொல் ‘ஒன்றாகச் சேர்’ (to put together) எனப் பொருள்படும் ‘சிம்பலன்’ என்ற பெயர்ச்சொல் இருசாரார்க்கிடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தின் அடையாளமாக இரண்டாக உடைக்கப்பட்டு ஒவ்வொரு சார்பினரும் வைத்துக்கொள்ளும் நாணய வில்லையின் ஒரு பாதியைக் குறித்தது. இப்பாதி வில்லைகளைப் பொருத்திப்பார்த்தே அவ்வொப்பந்தம் சரிபார்த்துக் கொள்ளப்பட்டது. இதனால் ‘சிம்பலன்’ என்பது சின்னம் (Mark). அடையாளம் (Token), குறி (Sign) என்றும் பொருள் தருகிறது என்ற பாலாவின் கருத்தை இரா. சம்பத் குறிப்பிடுகிறார் (1992:25).

குறியீடு மற்றொரு பொருளுக்காக அப்பொருளின் இடத்தில் தானே நின்று கொள்வது என்கிறார் அட்லர். ஒரு படிமம், உருவக நிலையில் உருவாக்கப்பட்டுத் தன்னையும் உணர்த்திப் பிறிதொன்றையும் உணர்த்தும் வகையில் மீண்டும், மீண்டும் வந்தால் அது குறியீடாகிவிடும் என்கின்றனர் வாரன் மற்றும் வெல்லாக் (Warnen and Wellek, 1954:194). இதனையே மறிதரு குறியீடு என்கிறார் அப்துல் ரகுமான். குறியீடு என்பது ஒன்றுக்கு மாற்றாக நிற்கும் மற்றொன்று மட்டுமல்ல, பருப்பொருளின் துணையால் நுண்ணியக் கருத்துக்களையும் உணர்வுகளையும் வெளிப்படுத்துவதாகும் என்கிறார் சாட்விக் (1971:3).

குறியீடு என்பது இலக்கியத்தில் ஒரு பொருளையோ அல்லது நிகழ்ச்சியையோ குறிப்பிட வரும் ஒரு சொல் அல்லது சொற்குறி, தன் இயல்பான பொருளைத் தவிர்த்துப் பிறிதொன்றினைக் குறிப்பிடுவதே குறியீடு என்கிறார் சச்சிதானந்தன் (1983:188). ஒரு பொருள் அதனோடு இயைபுடைய

இன்னும் ஏதோ ஒரு பொருளைக் குறியிட்டுக் காட்டுவது அல்லது அதற்குப் பதிலாக நின்று தெரியப்படுத்துவது குறியீடு ஆகும் என்கிறார் ஆரார் (1982:30). குறியீடு என்பது ஒரு பொருளுக்குப் பதிலாக மற்றொரு பொருளைப் பதிலியாகக் காட்டுவதாகும். காட்டப்படும் பொருள் ஒன்றாகவும் உணர்த்தப்படும் பொருள் வேறொன்றாகவும் அமைந்து ஒரு வெளிப்பாட்டுச் சிறப்பைத் தோற்றுவிப்பது என்கிறார் செண்பகம் ராமசாமி (2006:88).

"ஒப்புறவாலும், ஒட்டுறவாலும் மற்றொன்றைக் குறிப்பாக உணர்த்தும் பொருள் (Object) 'குறியீடு'" என்கிறார் அப்துல்ரகுமான் (2006:18). "ஒரு கருத்திற்குள் மறைமுகமாக உணர்த்தப்படும் இன்னொரு கருத்தாக அமைவதே குறியீடு" (பொன்மணி, 2002:330). மேற்கண்ட கருத்துகளின் வாயிலாக, குறிப்பாகப் பொருளை (Subject) உணர்த்தப் பயன்படுத்தப்படும் கருவிகளே (Objects) 'குறியீடு' ஆகும் எனவும், சொல்லுவது ஒன்றும் அதனால் பெறப்படும் பொருள் வேறொன்றுமாக அமைவது அல்லது ஒன்றைச் சொல்லி அதனோடு ஒத்த இன்னொன்றைப் பெற வைப்பது 'குறியீடு' எனவும் கொள்ளலாம்.

### 1.2.1 குறியீட்டியல் - கலைச்சொல் தோற்றம்

"குறிப்பியல் (அல்லது) குறியீட்டியல் என்னும் பொருளைத் தருகின்ற சிமியாடிக்ஸ் என்ற சொல்லானது கி.மு. 5 ஆம் நூற்றாண்டில் கிரேக்கத்தில் பயன்படுத்தப்பட்டது" (பவுன்துரை, 2004:10). "குறியீட்டியல் (Semiotics) 'செமியோட்டிக்' அல்லது 'செமியோன்' (Semeiotic or Semeion) என்ற கிரேக்க மொழிச்சொல்லிலிருந்து பிறந்தது (Standard Encyclopedia of

Philosophy). கிரேக்கத்தில் 'சிமியோன்' என்ற சொல் 'குறி' என்ற அர்த்தத்திலேயே வழங்கப்பெற்றது. ஸ்டாய்க்ஸ் (Stoics) என்பவர்கள் 'சிமியோன்' என்பது உற்று அறிகிற உண்மையை விளக்குவது என்றனர். அடுத்து எபிகூரியர் (Epicurears) நேரடியாக ஒரு பொருளை அறிவதற்கும் மேலாக புலன் உணர்வினால் அறியப்படுவது என்று விளக்கமளித்தனர்" (ந.ம.வீ. ரவி, 1992:2).

"அரிஸ்டாடில் தன்னுடைய 'On interpretation' என்ற கட்டுரையில் குறி (Sign) என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார். இதையே அகஸ்டின் (கி.பி. 354-430) 'புனிதக்குறி' (Sacred Sign) என்று குறிப்பிடுகிறார். இதுவே பிற்காலத்தில் குறியீட்டியல் என்று வளர்வதற்கு அடிப்படையாக அமைந்தது. ஜான்லோக் (John Locke) (1632-1704) என்ற இங்கிலாந்து நாட்டு மெய்யியல் அறிஞர் 1690 ஆம் ஆண்டு 'About Human Understanding' (மனிதர்களின் புரிந்துகொள்ளுதலைப் பற்றி) என்ற தனது ஆய்வுக் கட்டுரையில் **குறியீட்டியல்** (Semiotics) என்ற சொல்லை உலகிற்கு முதன் முதலில் அறிமுகம் செய்கிறார்" (Wikipedia Online Encyclopedia).

குறியீடு பல்துறைப் பயன்பாடுடையதாதலின் பல்வகையான விளக்கங்கள் காணப்படுகின்றன. இலக்கியத்தில் அதன் பயன்பாடு பற்றி வேறுபட்ட கருத்துகள் இருக்கின்றன. இலக்கியக் கலைச்சொல் என்ற வகையில் 'குறியீட்டியல்' தெளிவான பொருள் தருவதாக இல்லை

(Symbolism as a Literary term has no clear meaning. It is a radiant blur rather than a delimited area) என்கிறார் கிரஹாம்ஹோ (1967:183).

"குறியீட்டியல் என்றால் என்ன? என்று ஒருவர் வினவினால் அது கணிதவியல் என்றால் என்ன? அல்லது உயிரியல் என்றால் என்ன? என்று கேட்பதற்கு ஒப்பாகும். கணிதவியல் எண்களைப் பற்றி படிக்கும் ஒரு படிப்பாகும் என்று விளக்கம் கூறினால், அல்லது உயிரியல் என்பது உயிரினங்களைப் பற்றி படிக்கும் ஓர் அறிவியல் என்றால் அது எவ்வளவு மேம்போக்குத்தனமாக இருக்குமோ அதேபோன்று குறியீட்டியல் என்பது குறிகளைப் பற்றிய அறிவியல் என்ற வரையறை செய்வது என்பதும் மேலோட்டமானதே. கணிதவியல், உயிரியல் துறை வல்லுனர்கள் அத்துறை எவ்வளவு ஆழமானது என்பதை நன்குணர்வர். அதே போன்று குறியீட்டாளர்களால் மட்டுமே குறியீட்டியல் என்றால் என்ன என்பதை நன்கு உணரமுடியும் என்கிறார் யூஜின் கார்னி. மேலும், குறியீட்டாளர்களைத் தவிர ஏனையோர் குறியீட்டியல் என்றால் என்ன என்பதைத் தெரிந்து கொள்வது மிகவும் சிரமம் (Ordinary People do not understand what semiotics deals with) என்கிறார் அவர். குறியீட்டியல் பற்றி மூன்று வகையான வரையறைகளை அவர் வழங்குகிறார்.

1. குறியீட்டியல் என்பது குறிகளையும் குறி முறைமைகளையும் பற்றி படிக்கும் ஓர் அறிவியல்.
2. கருத்துக்களை மொழிசாரா நிலையில் புலப்படுத்துதல்.
3. மனித குல வாழ்வின் அனுபவங்களைப் பிரதிபலிக்கும் ஒரு ஊடகமே குறியீட்டியல்.

குறி, அதன் பொருண்மை, அதன் வெளிப்பாடு ஆகியவற்றுக்கிடையே உள்ள நெருங்கிய தொடர்பை வெளிப்படுத்தும் ஓர் அறிவியல் குறியீட்டியலாகும் என பியர்ஸ், கொ்எலம் ஆகியோர் விளக்குகின்றனர். சமுதாயத்தில் கருத்துப் புலப்படுத்தம் செய்ய மக்கள் பெரிதும் பயன்படுத்தும் குறிகளின் வாழ்வு பற்றிய அறிவியல் கல்வியே குறியீட்டியல் ஆகும் என்கிறார் சசூர். டெரான்ஸ் ஹாக்ஸ் என்பவர் குறிகளின் அறிவியல் குறியீட்டியல் என்கிறார். மேலும் அவர் யூஜின் கார்னியின் ஒன்றாவது வரையறையையே குறி (Sign) மற்றும் குறிமுறைமைகளைப் பற்றித் (Sign System) தனித்தனியாகவும் கூட்டமாகவும் சேர்த்து படிக்கும் ஓர் அறிவியல் எனக் குறிப்பிடுகிறார் (Wikipedia Online Encyclopedia).

“குறியியல் என்பது மொழி, கலை, இலக்கியம், வழக்காறுகள், சடங்குகள், சமயம், தொன்மங்கள் இன்னும் பிறவற்றைத் தொகுதியாக அணுகும் ஆய்வுமுறை” என்று முத்துமோகன் ‘தமிழும் குறியியலும்’ என்ற நூலின் முன்னுரையில் குறிப்பிடுகிறார். “பொருள்களைக் குறியீடுகளால் குறிப்பதோ அல்லது பொருள்களுக்கோ செயல்களுக்கோ குறியீட்டுப் பண்பை ஏற்றுவதோ குறியீட்டியல் எனப்படும். இவ்வகையில் குறியீடுகளை ஒரு குறிப்பிட்ட முறையில் பயன்படுத்துவதும் இயற்கை பொருள்களுக்கும் மெய்மைகளுக்கும் (Realities) குறிப்புப் பொருள் கற்பித்துக் கூறலும் கலை இலக்கியத்தில் குறியீடு காணப் பயன்படுத்துவதும் குறியீட்டியல் ஆகிறது” (அப்துல் ரகுமான், 2006:21).

“ஒட்டு மொத்த உலக இலக்கியத்தின் ஒவ்வொரு கூறிலும் உள்ளீடாக அமைந்துள்ள பொருண்மைகளை ஆய்ந்து வெளிப்படுத்தும் அறிவியல் ஆய்வு முறையே குறியியல்” என்பார் இளம்பரிதி (2006:6). மேற்கண்ட அறிஞர்களின் கருத்துகளின் வாயிலாக சமுதாயத்தின் அனைத்து கூறுகளிலும் உள்ள குறியின் பொருள் எவ்வாறு உணரப்படுகிறது என்பதையும் அதன் ஆழம் எவ்வாறு புரிந்து கொள்ளப்படுகிறது என்பதையும் ஆய்வதே குறியீட்டியல் எனலாம்.

### 1.2.2 இலக்கியமும் குறியீடும்

ஒரு மொழியின் சொற்களுக்கு இருவகைப் பொருள் உண்டு. நடைமுறை வாழ்வில் வழங்கும் பொருள் ஒன்று. இலக்கியத்தில் குறியீடாகச் செயல்பட்டு அப்பொருளுக்கு மேலாகப் புதிய பொருளைக் குறிப்பால் உணர்த்துவது மற்றொன்று. மரம், செடி, கொடிகளில் ஓர் உறுப்பாக விளங்கும் மலர் என்ற ஒரு சொல் இலக்கியத்தில் குறியீடாகச் செயல்படும் பொழுது மென்மை, மணம், காதல், இனிமை, அழகு, பருவம் ஆகிய பல்வேறு கருத்துக்களைத் தருவதாக அமைகிறது. இக்குறியீட்டு நிலையில் தம்மால் நேரடியாக விளக்க முடியாதவற்றையும் சொற்கள் துல்லியமாகக் காட்டி விடுகின்றன. இலக்கியத்தில் குறியீடு என்பது இப்பொருளிலேயே வழங்குகிறது எனலாம்.

### 1.2.3 குறியீடு பற்றிய மேலையர் சிந்தனை

குறியீடு தொன்றுதொட்டே இலக்கியங்களில் இடம் பெற்று வந்திருந்தாலும் அது ஓர் இலக்கிய இயக்கமாக மேல்நாடுகளில் கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில்தான் தொடங்கியது.

இயற்கைப் பொருள் ஒவ்வொன்றிற்கும் ஒப்பான சித்துருவ மூலமாதிரி உள்ளதெனக் கூறிய ஸ்வீடன் போர்க் (Sweden Borg) என்பாரின் ஒத்திசைவுக் கோட்பாடு (Theory of Correspondent) இக்குறியீட்டியலுக்கு அடிப்படையாயிற்று (அப்துல்ரகுமான், 2006:33). பொதெலேர் (Baudelaire), பால் வெர்லேன் (Paul Verlain), ஆர்தர் ரிம்பார்டு (Arthur Rimbard), மல்லர்மே (Mallarme) ஆகிய நால்வரும் பிரெஞ்சுக் குறியீட்டிய இயக்கத்தின் புகழ் பெற்றவர்களாவர். குறியீட்டிய இயக்கத்தின் முன்னோடியான பொதெலேர் பருவுலகமும் ஆன்மிக மெய்ம்மைகளும் புலனுணர்வுகளும் ஒன்றொடொன்று ஒத்திசைவு (Correspondences) உடையன என்ற கொள்கையைக் கவிதைகளில் வெளிப்படுத்தினார். அவரைத் தொடர்ந்து ஆர்தர் ரிம்பார்டு இக்கோட்பாட்டை மேலும் வளர்த்து கவிஞன் புறத்தோற்றங்களைக் கடந்து மெய்ம்மைக் காட்சிகளைக் காணும் நிலையை அடைய வேண்டும் என்றார். கவிதையின் ஒவ்வொரு சொல்லும் குறிப்பாற்றல் மிக்க தத்துவக் குறியீடாக இருக்க வேண்டும் என விரும்பினார். 1886-ஆம் ஆண்டு ஜீன் மொரே (Jean Moreas) என்பவர் லெபிகரோ (Lefigaro) என்ற இதழில் குறியீட்டியல் பற்றிய கொள்கை விளக்க அறிக்கையை வெளியிட்டார் (ஆரார், 1982:68). இதன் பின்பு ஜெர்மனி, உருசியா, இங்கிலாந்து, ஸ்பெயின், அமெரிக்கா ஆகிய நாடுகளிலும் குறியீட்டிய இயக்கம் பரவித் தனிச்சிறப்போடு விளங்கியது.

### 1.2.4 குறியீடு – வடநூலார் கருத்துக்கள்

ஒலி வேறுபாட்டின் மூலம் உருவாகும் கருத்து வேறுபாடுகளை எழுத்தில் வடிக்க முடியாது. இரு நண்பர்கள் பேசிக் கொண்டிருக்கும் போது

மற்றொருவனைப் பற்றிப் பேச்சு எழுகிறது. அப்போது ஒருவர் 'அவனா'? என்று ஒருவகை ஒலிக்குறிப்பில் குறிப்பிடுகிறார். அந்த ஒலி இகழ்ச்சிக் குறிப்பாகலாம்; கௌரவக் குறிப்பாகலாம்; வியப்புக் குறிப்பாகலாம்; சினக் குறிப்பாகலாம்; அவனைப் பற்றிய அவரது மெய்ப்பாடு அந்த 'அவனா'? என்ற சொல்லை உச்சரிக்கும் பாங்கிலிருந்தே பெற முடியும். அந்த உச்சரிக்கும் நபர் எளிதாக அல்லது சாதரணமாக எழுதிக்காட்ட முடியாது.

பல்வேறுபட்ட உணர்ச்சிக் குறிப்புகளைத் தரும் ஒலிக்குத்தான், 'தொனி' என்று பெயர். இந்தத் 'தொனியை' ஓர் இலக்கியக் கோட்பாடாகவே உருவாக்கியவர் ஆனந்தவர்த்தனர். "சுவையுணர்வே கவிதையின் தலையாய நோக்கம் என்ற வடநூலார் கொள்கையை ஏற்றுக்கொள்ளும் ஆனந்தவர்த்தனர் இச்சுவையைத் தொனியாலேயே ஏற்படுத்த முடியும் என்று கூறி கவிதைக்குக் குறிப்புப் பொருளின் இன்றியமையாமையை வற்புறுத்துகிறார்" (ஜகந்நாதராஜா, 2006:103).

"ஆனந்தவர்த்தனாரின் தொனிக் கொள்கை குறிப்புப் பொருளுக்குக் கவிதையின் முழுச்சொற் பொருளையும் வற்புறுத்தியதன் மூலம் நடை, அணி முதலியவற்றிற்கு இரண்டாம் இடம் தந்து சுவையாகிய 'உள்ளடக்கத்திற்கு' முதன்மை தருகிறது. தொனிக் கொள்கையின் செல்வாக்கால், குறிப்பாற்றல் (வியஞ்சனை), சொற்பொருளை மிகைத்து நிற்கும் கவிதை தலையாயது (உத்தமம்), இரண்டும் ஒத்திருக்கும் கவிதை இடைப்பட்டது (மத்திமம்), குறிப்புப் பொருளற்ற கவிதை கடைப்பட்டது (அதமம்) என்ற கருத்து வடநூலாரிடம் ஏற்படலாயிற்று" (அப்துல்ரகுமான், 2006:49).

1. சொல்லின் வெளிப்படைப் பொருளுக்கு அப்பால் குறிப்பால் பொருள் உணர்த்தும் ஆற்றலை (வியஞ்சனை) குறிப்பாற்றல் என்றும்
2. குறிப்பாய் பொருள் உணர்த்தும் சொல்லை (வியஞ்சகம்) குறிப்புச் சொல் என்றும்
3. குறிப்புப் பொருளை வியங்கியம் என்றும் குறிப்பர் என்பர் க. முத்துசாமி (1994:50).

இதனையே தமிழண்ணல் தொனிக்குச் சொல்லாற்றலும், (அபிதாசக்தி) சொற்பொருளும் (இலட்சணாசக்தி) உண்டு என்றும், அவ்வகையில் ஒரு சொல்லுக்கு மூன்று பொருளுண்டு என்றும் கூறுகிறார்.

1. அடிப்படைப் பொருள் முதற் பொருள் – அபிதாசக்தி (வியஞ்சனை)
2. முதற்பொருளின் உதவியால் பெறப்படும் 2-ஆம் பொருள்- இலட்சணாசக்தி (வியஞ்சகம்)
3. மூன்றாம் பொருள் குறிப்புப் பொருள் (வியங்கியம)

என்று குறிப்பிடுகிறார் (2003:213-214).

இவற்றைப் பியர்ஸ் கூறும் குறியின் மூன்று நிலைகளோடு பொருத்திப் பார்த்து குறி என்பது அடிப்படையான மூன்று நிலைகளை உடையது என்பதை அறிந்து கொள்ளலாம்.

“ஒரு வெண்கல மணியைக் கம்பால் அடித்தால் அது ‘டண்’ என்று ஒலிக்கும். அதன் பிறகும் அந்த மணியின் மெல்லிய ஒலியதிர்வுகள் தந்தி மீட்டினாற்போல இன்னிசைக் கோலங்களை எழுப்பி இன்புறுத்தும். அது போன்றே முதலில் எழுந்த ஒலியே வாக்கியப்பொருள். அதன் பிறகு எழுந்த

மென்மையான ஒலிதான் குறிப்பாற்றலால் பெறப்படும் தொனியாகும்" (ம.ரா.போ. குருசாமி, 1980:61).

### 1.2.5 குறியீடு – தமிழ் நூலாரின் கருத்துக்கள்

குறியீடு என்பது இலக்கிய உத்தியைக் குறிக்கும் கலைச்சொல்லாகும். இதனை எழுத்து இதழின் காலகட்டமாகிய அறுபதுகளில் சி.சு. செல்லப்பா அறிமுகப்படுத்தினார். தமிழில் குறியீடு பற்றி இலக்கண நூலாரிடம் தனி விதிகளோ இலக்கியக் கோட்பாடுகளோ காணப்படவில்லை என்றாலும் கவிதையில் குறிப்புப்பொருள் பற்றிக் காணப்படும் கருத்துக்கள் பல உள. தொல்காப்பியமும், உரைகளும் குறிப்புப் பொருள் பற்றி பல செய்திகளைத் தருகின்றன.

"இலக்கியத் துறையின் குறிப்புப் பொருள் கண்டு கணிக்கும் முறையை வகுத்த முதற்பெருமை தொல்காப்பியருக்கே உரியது என்கிறார் சுந்தரமூர்த்தி. தமிழ் இலக்கணம் தத்துவக் கருத்தினைக் குறிப்புப் பொருளாக உடையது" என்கிறார் பா.வே. மாணிக்க நாயக்கர் (ம.ரா.போ. குருசாமி, 1980:61). நன்னூலார்

*ஒன்றொழி பொதுச்சொல் விகாரம் தகுதி*
*ஆகுபெயரன் மொழிவினைக் குறிப்பே*
*முதல் தொகை குறிப்போ டின்ன பிறவும்*
*குறிப்பிற் றரு மொழி*...........

நன்:நூ.எண்: 269.

என்று குறிப்புப் பொருள் தரும் சொற்களைக் குறிப்பிடுகின்றார். ஒழியிசை எச்சம், எதிர்மறை எச்சம், சொல்லெச்சம், குறிப்பெச்சம், இசையெச்சம்,

முன்னத்தின் உணரும் கிளவி ஆகியன குறிப்புப்பொருள் தருவனவாகத் தொல்காப்பியர் கூறுகிறார். அடிவரையற்ற ஆறு செய்யுள் வகைகளில் பிசி, முதுமொழி, மந்திரம், குறிப்பு என்ற நான்கும் குறிப்பாக மற்றொன்றை உணர்த்தும் இயல்புடையன என்று அவர் குறிப்பிடுகிறார். மேற்கோள் ம.ரா.போ. குருசாமி (1980:73).

உவமையாலும் ஒன்று சொல்ல இன்னொன்று தோன்றும் துணிவோடு சொல்லும் சொல்லாலும் அமைவது பிசி. உரையாசிரியர்களின் எடுத்துக் காட்டுகளால் பிசி என்பது விடுகதை என அறியப்படுகிறது.

*ஒப்பொடு புணர்ந்த உமவத் தானுந்*
*தோன்றுவது கிளந்த துணிவி னானும்*
*என்றிரு வகைத்தே பிசிநிலை வகையே.*

தொல்:செய்யு: 165

கூர்மையாகவும், எளிதாகவும் இயற்றப்பட்டு குறித்த பொருள் ஒன்றை முடித்தற்கு வருவது முதுமொழி. இவ்விளக்கத்தாலும் எடுத்துக் காட்டாலும் இது பழமொழி என்பதை அறியமுடியும்.

*நுண்மையுஞ் சுருக்கமும் ஒளியுமுடைமையும்*
*மென்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்*
*குறித்த பொருளை முடித்தற்கு வருஉம்*
*ஏது நுதலிய முதுமொழி யென்ப*

தொல்:செய்யு: 166

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கூறப்பட்டுப் புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லும் சொற்றொடர் மந்திரம் எனப்படுகிறது.

*நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த*
*மறைமொழி தானே மந்திரம் என்ப*

தொல்:செய்யு: 167

எழுத்தொடுஞ் சொல்லொடும் புணராது பொருட்குப் புறத்தே பொருளுடையதாய் நிற்பது குறிப்பு.

*எழுத்தொடுஞ் சொல்லொடும் புணரா தாகிப்*
*பொருட்புறத் ததுவே குறிப்பு மொழியே*

தொல்:செய்யு: 168

என்று குறிப்புப் பொருள் தருவனவற்றைத் தொல்காப்பியர் விளக்குகிறார்.

## 1.3 உள்ளுறை உவமமும் இறைச்சியும்

இயற்கையை மனித வாழ்வோடு இணைத்துக் காணும் குறியீட்டியப் பார்வை சங்கப் புலவர்களிடம் இருந்தது. உள்ளுறை உவமம், இறைச்சி ஆகிய இரு கவிதை உத்திகள் சங்க இலக்கிய அகப்பாடலுக்கே உரியன. 'இன்னவாறிருந்ததென' உரைக்க இயலாத, உரைக்கவும் கூடாத அகவொழுக்கத்தில், உரைக்க முடியாததை உணர்த்தவும் மறைக்க வேண்டுவதைக் குறிப்பாக உணர்த்தவும் சங்கப்புலவர் பயன்படுத்திய குறியீடுகளே இவை. கருப்பொருட்களைக் குறியீடுகளாக்கித் திணையாகிய ஒழுக்கத்தை உணர்த்தச் சங்கப்புலவர் திறனோடு கையாண்ட இலக்கியக் கருவிகள் இவை. இவற்றைப் பற்றி தொல்காப்பியர் கூறுவதிலிருந்து அவர் காலத்துக்கு முன்னரே தமிழ் வழக்கில் இவற்றின் பயன்பாடு இருந்ததை உணரலாம். கருப்பொருளைச் சொல்லி அதற்கு ஒப்புமையுடைய வேறொன்றை உவமேயமாக உய்த்துணர்ந்து பொருள் கொள்ளுமாறு

நுண்மையாக மறைத்துரைப்பதே உள்ளுறை உவமம் ஆகும். இது ஒப்புமையால் (Association by Similarity) குறிப்புப் பொருள் தரும் குறியீடாக விளங்குகிறது. முழுப்பாடலே குறியீடாக விளங்க அப்பாடல் உணர்த்தும் பொருளுடன் மேலும் ஒரு குறிப்புப் பொருளையும் உணர்த்தும் குறியீடாக (Symbol that denotes something more) இறைச்சி அமைகிறது. குறிப்பு நிலையில் பொருண்மைப் புலப்பாடு செய்வதில் பல படிநிலைகளைத் தொல்காப்பியர் கூறியிருந்தாலும் உள்ளுறை, இறைச்சி என்பன குறியீட்டிற்கு அடிப்படையானவையாக அமைந்துள்ளன. இதுபற்றி இரண்டாவது இயலில் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

## 1.4 காலந்தோறும் இலக்கியத்தில் குறியீடு

குறிப்பாகப் பொருளுணர்த்துவதே கவிதையின் உயர்ந்த நிலை எனப் பொதுவாகக் கருதப்படுவதால் அப்பணியை ஆற்றுவதில் தலைசிறந்ததாகிய குறியீடு கவிதைக்கு இன்றியமையாததாகிவிடுகிறது. ஆகையால் அனைத்து நாட்டு இலக்கியங்களும் குறியீட்டைப் பயன்படுத்தியுள்ளமை தெரியவருகிறது. கி.மு. 3ஆம் நூற்றாண்டில் எழுந்ததாகக் கூறப்படும் இலத்தீன் மொழிப் பாடலொன்றில் காணலாகும் குறியீட்டு ஆட்சியைக் காட்டலாம். விர்ஜில் (Virgil) என்னும் கவிஞரின் பாடலொன்று கைக்கிளைக் காதலைக் கருவாய்க் கொண்டது. 'காரிடான்' என்னும் இடைமகன் 'அலெக்ஸிஸ்' என்னும் பெண்மீது காதல் கொள்கிறான். அவளோ 'டேப்னஸ்' என்பவனைக் காதலிக்கிறாள். இந்தச் சூழ்நிலையில் தன்னைத்தானே தேற்றிக்கொள்ளும் விதமாக காரிடான் பாடுகையில்,

*ஆ! காரிகடான் உனக்கு என்ன நேர்ந்தது?*
*கருநிற இலைகளுடைய எல்ம் மரத்தில் பாதி*
*சரிசெய்யப்பட்ட உனது திராட்சைக் கொடி*
*பற்றிப் படர்ந்துள்ளது.*

எனப்பாடுகிறான். இதில் இடம் பெற்றுள்ள 'கருநிற இலைகளுடைய எல்ம் மரம்' நற்பண்புகளற்ற அலெக்ஸிற்கும் 'பாதி சரிசெய்யப்பட்ட திராட்சைக் கொடி' ஆராய்ந்தறியாது கொண்ட காதலுக்கும் குறியீடாகியுள்ளன (செயராமன், 1976:14).

இந்தியப் பண்பாட்டு வரலாற்றில் குறியீட்டியல் இன்றிமையாத இடம் பெறுகிறது. ஆதிப் பதினெண் புராணங்களின் குறியீடுகள் இந்தியக் கலை இலக்கியச் சமய வாழ்வில் மிகப்பெரிய இடம் பெறத் தொடங்கின. சிவ-சக்தி, திருமால் அவதாரங்கள், கண்ணனின் லீலைகள், பாற்கடல், அமுதம், தேவர், அசுரர், நரகம், சொர்க்கம் போன்றன இந்திய உணர்வில் பிரிக்க முடியாதபடி ஒன்றிப்போயின. இராமாயண, மகாபாரத இதிகாசங்களில் இடம்பெற்ற பாத்திரங்களும் நிகழ்ச்சிகளும் குறியீட்டு அடிப்படையிலானவை ஆகும்.

### 1.4.1 சொல்லாட்சி

இலக்கியம் மொழி சார்ந்த கலையாகும். மொழியோ ஒலிக்குறிகளால் விளங்கும் சொற்களால் ஆனது. சொற்கள் பொருள் குறிக்கும் ஒலிக்குறியீடுகளே. "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்பது தொல்காப்பியம். ஒரு சொல் குறிக்கும் பொருளை வடமொழியில் 'பதார்த்தம்' என்ற சொல்லால் குறிக்கின்றனர். தமிழில் 'பொருள்' என்று

குறிக்கப்படுகிறது. சொல் இல்லையென்றால் பொருளும் இல்லை என்ற நிலையில் குறியீட்டின் முதன்மை உணரப்படுகிறது.

சொல் ஓர் அறிகுறி; அது பொருளின் இயல்பை முற்றவும் உணர்த்தாது; பொருந்தவும் உணர்த்தாது. வழக்கு என்னும் ஒன்று நோக்கியே சொல் உணர்த்தும் பொருள் வரையறுக்கப்படும் என்பர் (மு. வரதராசனார், 1958:301). வழக்கிலும் சொல்லின் பொருளுணர்த்தும் திறன் நிலையாக இருப்பதில்லை. சில சொற்கள் திரிந்து எதிர்மறைப் பொருளுணர்த்துமளவுக்கு மாற்றம் ஏற்கின்றன. நாற்றம் என்ற சொல்லுக்கு மணம் என்பது பொருள். இச்சொல் இக்காலத்தில் துர்நாற்றம் என்ற பொருளைத் தருகிறது. இது போன்ற சொல்லைக் கொண்டு நிலைத்த இலக்கியம் படைக்கும் சிக்கலான பொறுப்பு கவிஞர்க்கு உண்டு. அவர் தம் நுண்மாண் நுழைபுலத்தால் குறிப்புப் பொருளாற்றல் தரும் சிறந்த குறியீடுகளாக அவற்றை மாற்றிவிடும் வகையில் சொற்களைத் தகுந்த இடத்தில் மிகுந்த திறனோடு ஆளுவர்.

### 1.4.2 சொல் தேர்வு

இலக்கியம் படைக்க சொல்லைத் தேர்ந்தெடுத்து நல்ல சுவையைத் தரும் கவியைப் படைக்கும் புலவரை

*அஞ்சொல் நுண்தேர்ச்சிப் புலவர்*

புறம்: 235:13

என்றழைப்பார் ஔவையார். உணர்ச்சியின் பெருக்கை, உள்ளக் கருத்தின் செறிவைச் சொல்லில் ஏற்றி வெளிப்படுத்தச் சொல்லை நுண்ணிதின் தேர்ந்து எடுக்கிறான் புவவன். வெற்றுச் சொற்களையும் அலங்காரச் சொற்களையும்

தவிர்த்துக் கொண்டு கவிதை இறுக்கமும் செறிவும் பெற்றுத் திகழக் குறியீடுகள் பெரிதும் பயன்படுகின்றன. பொய்ம்மை உணர்ச்சியும் மிகை உணர்ச்சியும் கவிதையில் இடம் பெறுவதைக் குறியீடுகள் தடை செய்து விடுகின்றன. உணர்ச்சிகளை வாசகனே நேரடியாகப் பெற்றுவிடுவதால் அவற்றை உரிய வெப்பத்துடன் பெற்றுக் கொள்கிறான். உணர்ச்சிகளையும் எண்ணங்களையும் அவை குறியீட்டைக் கொண்டு துல்லியமாக வெளிச்சம் பாய்ச்சிக் காட்டுகின்றன.

"வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்பது பழமொழி, மனக்கருத்துச் செறிவின் மூலத்தை நோக்கச் சொல் என்பது புல்லியதே ஆயினும் அப்புல்லிய சொல்லினை புவியினுக்கு அணியாய் ஆன்ற பொருள் தந்து புலத்திற்றாகித் தெளிந்து தண்ணென்றொழுக்கமும் தழுவிய சான்றோர் கவியின் சாதனைக்குரியதாக்குவது புலமையின் ஆட்சி; உள்ளக்குறிப்பினை ஒலியினும் ஒலியமுத்தத்திலும் பெருக்கிக் காட்டுவது வீறு" (ம.ரா.போ. குருசாமி, 1990:5). சொல்லில் பொருளை நேரடியாகத் தருவதற்குப் பதிலாக குறியீடுகளைப் பயன்படுத்துவதன் மூலம் அதன் பொருளை வாசகன் மனத்தில் விரியச் செய்துவிடுகிறது.

"சொற்கள் வீண் சேர்க்கையாகக் கவிதையில் இடம் பெறக்கூடாது என்றும் எதுகை சந்தம் கருதி கவிதையின் பொருளம்சத்திற்குப் புறம்பான சொற்களைப் பயன்படுத்தக்கூடாது என்றும், உயோந நோகுச்சி என்ற ஜப்பானியப் புலவர் கூறுகிறார்" (பாலா, 2006:112).

*பொருட் பாலுக்காக*
*காமத்துப்பாலை விற்கிறேன்.*

என்ற புதுக்கவிதையில் பொருட்பால், காமத்துப்பால் என்ற இரு சொற்களின் வலிமையும், பொருளின் ஆற்றலும் புலப்படும்.

இலக்கியத்தைப் படைக்கும் படைப்பாளன் பொருளை உணர்த்துவதோடு மனநிறைவு பெற்றுவிடுவதில்லை. ஒரு சூழலில் தான் அடைந்த மன உணர்வினைக் கவிதைச் சொற்கள் வழியாக அதைக் கற்போர் நெஞ்சத்தில் தோன்றச் செய்கிறான். உணர்வுகளின் இந்த இடப்பெயர்ச்சிதான் அக்கவிஞன் உணர்ந்ததை உணர்ந்தவாறு காட்டுவதற்கு உதவுகிறது. உணர்வுகளைத் தொடாத, தூண்டாத இலக்கியம் கலை என்கிற நிலையைப் பெறாது.

இலக்கியம் என்பது உணர்ச்சியின் பெயர்ச்சி ஆகும். ஒரு கவிதை எந்த உணர்ச்சியைப் பெயர்க்க முயல்கின்றதோ, அதை படிப்போர் உள்ளம் வரவேற்று அனுபவிக்கத் தக்க சூழ்நிலையைக் கவிஞன் தொடக்கத்திலேயே உண்டாக்க வேண்டும். சான்றாக,

*நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று*
*நீரினும் ஆரள வின்றே சாரல்*
*கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு*
*பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே*

குறுந்: 3

என்ற குறுந்தொகைப் பாடலைக் கூறலாம். இப்பாடலின் முதல் அடியிலேயே வியக்கத்தக்க ஒன்றை கூறியிருக்கிறார் புலவர் தேவகுலத்தார். இது படிப்பவரின் உள்ளத்தில் நிலத்தைவிடப் பெரியதா! அது என்ன? என்ற வினாவை எழுப்புகிறது. அவ்வினாவிற்கு விடை காண மேலே படிக்கத் தூண்டுகிறது.

### 1.4.3 நீதி இலக்கியத்தில் குறியீடு

காதல், வீரம், கொடை முதலிய சிறந்த உணர்ச்சிகளிலும் இயற்கை இன்பத்திலும் ஈடுபட்டிருந்த புலவர்களின் உள்ளம் அடுத்து நீதிகளைப் பாடும் நிலைக்கு மாறியது. இந்நிலைக்குக் காரணம் வேற்று மன்னராகிய களப்பிரருக்கும் உள்நாட்டு மன்னர்களுக்கும் நடந்த போர்களிலே தமிழகம் குழப்பத்திற்கு உள்ளாகியதே ஆகும். சிறுபஞ்சமூலம், திரிகடுகம், ஏலாதி போன்றவற்றில் மருந்து போலும் நீதி கூறுவதாய் அமைந்தது சிறந்த உத்தியாகும். பழமொழிகள், கதைகள், உவமைகள் வாயிலாக மக்களின் மன இருண்மையைச் செய்யுள்கள் போக்கின.

*பரந்த திறலாரைப் பாசிமேல் இட்டுக்*
*கரந்து மறைக்கலும் ஆமோ? - நிரந்(து) எழுந்து*
*வேலின் திரண்டதோள் வேல்கண்ணாய் விண்இயங்கும்*
*ஞாயிற்றை கைமறைப்பார் இல்*

பழமொழி நானூறு: 32

அறிவுடையார் புகழை மறைப்பின் மறைபடாது என்பதை ‘ஞாயிற்றைக் கைமறைப்பார் இல்’ என்னும் பழமொழியில் குறிப்பிடப்படுகிறது. இப்பழமொழியில் ஞாயிறு என்பது அறிவுச்சுடர் வீசும் அறிவுடையோரைக் குறிக்கும் குறியீடாகும்.

### 1.4.4 சித்தர் பாடல்களில் குறியீடு

சங்க காலத்திற்குப்பின் குறியீட்டை இலக்கிய உத்தியாகப் பயன்படுத்தியவர்கள் சித்தர்களே. வெளிப்படுத்தல், மறைத்தல் என்ற இரு முரண்பட்ட நோக்கங்கள் சித்தர்களிடம் இருந்தன. மருத்துவக் கருத்துகளை

அறியாத தகுதியற்றவர்களால் தீங்கு விளையக் கூடும் என்று மருத்துவ உண்மைகளை மறைக்க குறியீடுகளைக் கையாண்டனர்.

*மாங்காய்ப் பால் உண்டு மலைமேல் இருப்போர்க்குத்*
*தேங்காய்ப் பால் ஏதுக்கடி – குதம்பாய்*
*தேங்காய்ப் பால் ஏதுக்கடி.*

குதம்பாய்ச் சித்தர்

என்பது சித்தர்களின் பாடல்களில் ஒன்று. மாங்காய், தேங்காய், பால் என்பன வெளிப்படையாகத் தெரிந்த எளிய சொற்கள். ஆனால் இவை எல்லாவற்றிற்கும் மறைபொருள் அமைத்துப் பாடியுள்ளனர். “மாங்காய் என்பது பிரமம், மாங்காய்ப் பால் என்பது அதன் அனுபவம், மலை என்பது மேலான சமாதிநிலை, தேங்காய் என்பது கடினமான உலகியல், தேங்காய்ப் பால் என்பது அதன் பயனாகும்” (ம.ரா.போ. குருசாமி, 1980:219).

### 1.4.5 பக்தி இலக்கியத்தில் குறியீடு

காப்பியங்களில் பெரிதும் சமண, பௌத்த சமயக் குறியீடுகள் ஆதிக்கம் செலுத்தின. சமயக் குறியீடுகள் சங்க காலத்திலேயே எட்டுத் தொகையிலும் பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படையிலும் இடம்பெறத் தொடங்கிவிட்டன. இச்சமய குறியீட்டின் நோக்கம் சமயத் தத்துவங்களையும் நீதிகளையும் உணர்த்துவதே ஆகும்.

மாணிக்கவாசகர் சங்க இலக்கிய மரபை ஒட்டிக் காதல் துறைகளை அமைத்துத் திருக்கோவையார் என்ற தனி நூலே பாடியுள்ளார். இதில் கூறப்படும் தலைவன், தலைவியர் இறைவனையும் ஆன்மாவையும் உணர்த்துவதற்கு வந்த குறியீடுகளாகும். சமயக் குரவராகிய மற்ற

மூவருடைய பாடல்களாகிய தேவாரத்திலும் இடையிடையே காதல் துறைப் பாடல்கள் அமைந்துள்ளன. தன் வழிபடு கடவுளைத் தலைவனாகக் கொண்டு தன்னைத் தலைவியாகக் கருதிபாடும் திருநாவுக்கரசர் ஒரு பாடலில் தெய்வக் காதலில் ஈடுபட்ட ஒரு காதலியின் நிலையைக் கூறும் முறையில் பின்வருமாறு எடுத்துரைக்கிறார். முன்பு சிவபெருமானுடைய பெயரைக் கேட்டறிந்தாள், பிறகு அவன் இருக்கும் இயல்பு எல்லாம் கேட்டறிந்தாள், பிறகு அவனுடைய தலமாகிய திருவாரூரின் சிறப்பை அறிந்தாள், திரும்பவும் அவனுக்காகவே பித்துப் பிடித்தவள் ஆனாள். தாயையும் தந்தையையும் அன்றே விட்டுவிட்டாள். உலக நடைமுறைகளையும் கைவிட்டாள். கடைசியில் தன்னையே மறந்தாள், தன் பெயரும் மறந்தாள் தலைவனுடைய திருவடிகளையே சார்ந்துவிட்டாள்.

*முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்*
*மூர்த்தி அவன் இருக்கும் வண்ணம் கேட்டாள்*
*பின்னை அவளுடைய ஆரூர் கேட்டாள்*
*பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்*
*அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்*
*அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தை*
*தன்னை மறந்தாள் தன் நாமம் கெட்டாள்*
*தலைப்பட்டாள் நங்கை தலைவன் தானே*

என்ற இப்பாடலில் தலைவன் இறைவனாகவும் தலைவி நாவுக்கரசராகவும் குறியீடாக்கப்பட்டுள்ளனர். திருமூலர் திருமந்திரத்தில் மனிதனின் ஐம்புலன்களை மேய்ப்பாரின்றித் திரியும் ஐந்து பசுக்களாகக் காட்டுகிறார்.

*பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு*
*மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன*

*மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினால்*
*பார்ப்பான் பசு ஐந்தும் பாலாய்ச் சொரியுமே*

திருமந்திரம்

சேவியர், பிரிட்டோ என்னும் கிறித்தவச்சான்றோர்கள் பதினாறு பதினேழாம் நூற்றாண்டுகளில் கிறித்துவக் கொள்கைகளையும் செபங்களையும், வழிபாட்டு முறைகளையும் தமிழில் மொழி பெயர்த்தார்கள். வேதநாயக சாஸ்திரி போன்ற கிறித்துவப் புலவர்களால் விவிலியக் குறியீட்டு மரபு தமிழில் புகுந்தது அவருடைய ஞான அந்தாதி (திருவருளந்தாதி) சாலமோனின் உன்னதப் பாட்டைத் தழுவி இறைவனுக்கும் சீயோனுக்கும் இடையிலுள்ள காதலைக் கூறியது. இந்திய மரபில் சக்தியின் குறியீடாகக் கருதப்பட்ட பாம்பு வேத நாயகரிடம் விவிலிய மரபுப்படி சூழ்ச்சியின் குறியீடாக இடம் பெறுகிறது.

## 1.4.6 கதை இலக்கியத்தில் குறியீடு

1876-இல் வேதநாயகம் பிள்ளை முதல் முதலாகத் தமிழுக்கு பிரதாப முதலியார் சரித்திரம் என்ற நாவல் இலக்கியத்தை அளித்தார். அதன் பிறகு கதை இலக்கியம் நன்கு வளர்ச்சி பெற்றது. நாவல்களில் ஆளப்படும் குறியீடுகள் கருத்து வெளிப்பாட்டுக்கு வெகுவாகக் கைகொடுக்கின்றன. சான்றாக மு.வ. அவர்களின் 'கள்ளோ காவியமோ', 'அகல் விளக்கு', 'கரித்துண்டு' போன்ற நாவல்களில் தலைப்பே குறியீடாக அமைந்துள்ளன. மேலும் கதை மாந்தர் பெயர்களே சிறந்த குறியீடுகளாக அமைவதைக் காண முடியும். கதை மாந்தரின் கூற்றுகள் மூலமாகவும் குறியீடுகளைக் கண்டுகொள்ள முடியும்.

### 1.4.7 நாடக அரங்கக் குறியீடு

நாடகம் தனக்கென்று தனித்த மொழி அமைப்பினைக் கொண்டிருக்கிறது. இது நடிப்பு, நடனம், ஓவியம், இசை, ஒலி, ஒளி, வசனம், சிற்பம், அலங்காரம் போன்ற கலைக் கூறுகளை உள்வாங்கியதொரு ‘கூட்டுக்கலை’ வடிவமாக இருக்கிறது. இது சமூக வாழ்க்கை, சமூகச் சூழல், மனித உண்மைகள் முதலானவற்றை வெளிப்படுத்தவல்ல உள் ஒழுங்கினையும் இலக்கணத்தையும் உடையது. மேலே கூறப்பட்ட நாடகக் கூறுகள் ஒவ்வொன்றுமே குறியீடாக அமையும். சான்றாக, அரங்கில் ஒளியூட்டல் மகிழ்ச்சியான செய்தியை வெளிப்படுத்துவதற்கும், ஒளிக் குறைப்பு துன்பக் காட்சிக்கும் குறியீடாகக் காட்டப்படுகின்றன.

### 1.4.8 மறுமலர்ச்சிக்கால இலக்கியத்தில் குறியீடு

தமிழ்க்கவிதையின் மறுமலர்ச்சிக் காலத்தில் பாரதி குறியீடுகளைக் கையாண்டார். அவர் இந்திய விடுதலைப் போராட்டக் காலத்தில் வாழ்ந்தவராதலின் அக்கால உணர்வுக்கேற்ற வகையில் தொன்மக் குறியீடுகளைப் பொருள்விரிவு கொள்ளச்செய்தார். அவர் பயன்படுத்திய காளி தெய்வக்குறியீடு இந்திய நாட்டையும் புரட்சியுணர்வையும் குறிக்கும் வகையில் பொருள் விரிவு கொண்ட குறியீடாகிறது. பாரதிதாசனிடம் குறியீடுகள் மிகக் குறைவாகவே காணப்படுகின்றன. அழகின் சிரிப்பில் ஞாயிறு, தென்றல், இருள் ஆகியவற்றைப் பாரதிதாசன் குறியீடாக்கிக் காட்டுகிறார்.

### 1.4.9 புதுக்கவிதையில் குறியீடு

புதுக்கவிதையில் மனிதமன விடுதலை போலவே யாப்பு விடுதலையும்

நேர்ந்தது. யாப்பிற்குள் அடைபட்டுக் கூற வந்ததில் பாதியைத் தனக்குள்ளேயே அழித்துக் கொள்ளும் நிலை மாறியது. பாரதி 'காட்சிகளின்' மூலம் தொடங்கிய வசனக் கவிதை, பிச்ச மூர்த்தியின் மூலம் புதுப்பொலிவு கொள்ளத் தொடங்கியது.

*இரவிலே வாங்கினோம்,*
*இன்னும் விடியவே இல்லை*

விதி: 118

என்ற கவிதையை, சுருக்க அழகை உண்டாக்கும் குறியீட்டின் ஆற்றலுக்கு நல்ல சான்றாகக் காட்டலாம். தமிழ் இலக்கியங்கள் அனைத்திலும் பரவலாகக் குறியீட்டு உத்தி பயன்படுத்தப்பட்டிருப்பினும் நீதி இலக்கியம், காப்பியங்கள், பக்தி இலக்கியம் போன்ற இலக்கியங்களில் ஓரளவே குறியீடுகள் காணப்படுகின்றன. சங்க இலக்கியங்கள், சித்தர் பாடல்கள், புதுக்கவிதைகள் போன்றவற்றில் கருத்துக்களை ஆணித்தரமாக வெளிப்படுத்த குறியீட்டு உத்தி சிறப்பாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

## 1.5 குறியீடுகளின் பயன்பாடுகள்

சுருங்கச்சொல்லி விளங்க வைத்தல் சிறந்த கவிதையின் இலக்கணம் ஆகும். சுருங்கச் சொல்ல வேண்டுமாயின் செறிவான சொற்கள் இடம் பெற வேண்டும். நுண்ணியக் கருத்துக்களைச் சொல்ல கவிஞரால் ஆளப்படுவதே குறியீடு ஆகும்.

கவிஞனின் உள்ள உணர்வினை வாசகனின் மனதில் பதிய வைக்கக் குறியீடு பயன்படுகிறது. ஓர் இலக்கியத்தைப் பன்முகப் பரிமாணமுள்ளதாகக் குறியீடு ஆக்குகிறது.

மொழியின் மூலம் வெளிப்படுத்தாமல் பொருட்களைக் காட்டி அவை விளைவிக்கும் தொனியில் வாசகனே பொருளை அறிந்து கொள்ளும் வகையில் குறியீடு பயன்படுகின்றது. பல சொற்களில் விவரித்து விளக்க வேண்டியதை ஒரு குறியீடு (சொற் குறியீடு) விளக்கி நிற்கும். குறியீடுகள் கவிதைக்குச் செறிவையும் இறுக்கத்தையும் தந்து சிறப்படையச் செய்கின்றன. சான்றாக, அப்துல் ரகுமானின் பால்வீதி என்ற கவிதைத் தொகுப்பில் ஒரு கவிதையைக் கூறலாம்.

*புறத்திணைச் சுயம்வர மண்டபத்தில்*
*போலி நளன்களின் கூட்டம்*
*கையில் மாலையுடன்*
*குருட்டுத் தமயந்தி*

| | | | |
|---|---|---|---|
| இதில் | போலி நளன்கள் | - | வேட்பாளர்கள் |
| | மாலை | - | வாக்குச்சீட்டு |
| | குருட்டுத் தமயந்தி | - | அறியாமையுடைய வாக்காளர் |
| | சுயம்வரம் | - | தேர்தல் |

என்ற குறியீடுகளைப் பெற்று விளங்குகிறது.

சமூகத்தில் ஓர் அநீதியை வெளிப்படையாகக் கூற இயலாத சூழலில் அதனைச் சுட்டிக்காட்டக் குறியீடு பயன்படுகிறது.

*நிழலுக் காகப் பாடையின்கீழ்*
*பதுங்கிப் போச்சு நாயொன்று*

தனி மனித மரணத்தில் ஆதாயம் தேடும் அரசியல்வாதிகளைச் சாடும் ஞானக் கூத்தனின் கவிதை இது.

| | | |
|---|---|---|
| நிழல் | - | ஆதாயம் |
| பாடை | - | மரணம் |
| நாய் | - | அரசியல்வாதி |

என்று இதை விளங்கிக்கொள்ளலாம். வெற்றுச் சொற்களையும் அலங்காரச் சொற்களையும் நீக்கிக் கவிதையின் உண்மையான உணர்ச்சிகளை வாசகன் அறிந்து கொள்ளக் குறியீடுகள் துணை செய்கின்றன.

ஒரு கருத்தானது அப்படியே சொல்லப்பட்டாலோ, வெளிப்படக் கூறப்பட்டாலோ கடினமானதாக இருக்கலாம், சுவையற்றதாக இருக்கலாம், நீண்டதாக இருக்கலாம், உணர்ச்சியற்றதாக இருக்கக்கூடும் என்ற நிலையில் குறியீடுகளைப் பயன்படுத்துவதன் மூலம் நன்கு விளங்கக்கூடியதாக, தெளிவானதாக, சிலசொற்கள் அமைந்ததாக, உணர்ச்சியுள்ளதாக, பயனுடையதாக அதற்கு மேலும் நயம்பட உரைக்கவல்லதாக அமையும் (ஆரார், 1982:83).

கவிதையின் உண்மையான உணர்ச்சிகளை வாசகன் அறிந்து கொள்ளக் குறியீடுகள் துணை செய்கின்றன. கவிதையின் உண்மைப் பொருளுக்கும் மனக் காட்சிக்கும் வடிவம் தரும் ஆற்றல் குறியீட்டுக்கு உண்டு.

கவிதையின் உண்மைப் பொருள் பற்றிய மனக்காட்சிகளையும் நுண்பொருள் தத்துவங்களையும் விளக்க ஏனைய உத்திகளைவிடவும் குறியீடே பெரிதும் துணை செய்கிறது.

சித்தர்கள் தம் கொள்கைகளை அறியக் கூடாது எனக் கருதும்போதும் பக்குவம் இல்லாதார் அறியின் அவர்க்குத் தீங்கு விளைவிக்கும் எனக்

கருதும்போதும் அதனை மறைத்துக் கூற குறியீடு சிறந்த உத்தியாகப் பயன்படுகிறது. காட்டாக, பாலுணர்வுக் கருத்துக்களை கூறக் குறியீடு பயன்படுகிறது. குறிப்பிட்ட சூழலில் தோன்றுகின்ற கருத்தையோ உணர்வையோ நேரடியாகக் கூறாமல் குறியீடு வழியாகக் கூறினால் அக்கருத்தும் உணர்வும் பொதுமையாகி நிரந்தரத் தன்மை பெற்றுவிடுகின்றன. சான்றாக

*அக்கினிக் குஞ்சொன்று கண்டேன் அதை*
*ஆங்கொரு காட்டிலோர் பொந்திடை வைத்தேன்*
*வெந்து தணிந்தது காடு தழல் வீரத்திற்கு*
*குஞ்சென்றும் மூப்பென்றும் உண்டோ*
*தத்தரிகிட தத்தரிகிட தித்தோம்.*

பாரதி: ப: 255

## 1.6 குறியீட்டுத் தளங்கள்

உலகில் மக்கள் அனைவரும் ஒவ்வொரு துறையைச் சார்ந்து வாழ்கின்றவராக இருக்கின்றனர். இவ்வனைத்துத் தளங்களிலும் குறியீடு முக்கியப் பங்கு வகிப்பதாக உள்ளது. ஒவ்வொரு தளத்திலும் ஒவ்வொரு நோக்கத்தோடு குறியீடு பயன்படுத்தப்படுகிறது. அரசு, சமூகவியல், சமயமும் சடங்கும், இலக்கியமும் உளவியலும் போன்ற தளங்களில் குறியீட்டின் தேவையையும் பயன்பாட்டையும் உணரமுடியும்.

### 1.6.1 அரசு

சமூகம் என்பது காலந்தோறும் மாறிவரக்கூடிய ஒன்றாகும். மனிதகுலம் தனது இயல்பான பண்பின் காரணமாகவும் புறநிலைகளின் காரணமாகவும் வளர்ச்சியடையக்கூடியது. கற்கால மக்கள் பழக்க வழக்கங்களையும்

நம்பிக்கைகளையும் வெளிப்படுத்தக் குறியீட்டைப் பயன்படுத்தினர். அவர்களது எண்ணங்களைப் பாறைகளில் ஓவியங்களாக வரைந்து வெளிப்படுத்தினர். சான்றாகக் கதிரவனின் வட்ட வடிவத்தினைக் கூறலாம். கதிரவன் வரைந்தமையின் நோக்கம் பகல் என்னும் கருத்தினைச் சுட்டுவதாகக் கொள்ளலாம். சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் சிறப்புகளைச் சின்னங்களாகிய குறியீடுகள் வாயிலாக அறிய முடியும். ஒவ்வொரு மன்னனுக்கும் உரிய கொடிகள், காசுகள், காசுகளில் பதிக்கப்பட்டுள்ள முத்திரைகள் போன்றவை அவர்களைப் பிரித்தறிய உதவும் சிறந்த குறியீடுகளாக உள்ளன.

*வரையளந் தறியாப் பொன்படு நெடுங்கோட்*
*டிமயஞ் சூட்டிய வேம* ***விற்பொறி***

புறம்: 39:14-15

*ஏழெயிற் கதவ மெறித்துளக கொண்டுநின்*
***பேழ்வா யுழுவை*** *பொறிக்கு மாற்றலை*

புறம்: 33:8-9

*நெடுநீர்* ***கெண்டையொடு*** *பொறித்த*
*குடுமிய வாகபிறர் குன்றுகெழு நாடே*

புறம்: 58:31-32

ஆகிய புறநானூற்றுப் பாடல்களின் வழி முறையே சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் கொடிச் சின்னங்களை அறிய முடியும். இன்றையக் காலக் கட்டத்தில் உலக நாடுகள் அனைத்தும் ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டியில் கலந்து கொள்கின்றன. ஒவ்வொரு நாட்டையும் அறிந்து கொள்ள அந்நாட்டின் தேசியக் கொடிகள் குறியீடாக விளங்குகின்றன.

### 1.6.2 சமூகம்

மனிதனின் சமூக உறவு நிலைகள், பழக்க வழக்கங்கள் அனைத்திலும் குறியீட்டின் ஆட்சியே நிலவுகிறது. கணவன், மனைவி உறவைக் குறிக்கும் தாலி கட்டுதல், சில இனத்தாரிடையே காணப்படும் அண்ணன் தங்கை உறவைக் குறிக்கும் இரட்சை கட்டுதல், மூத்தவர்களை இளையவர் காலைத் தொட்டு வணங்குதல் இவையனைத்தும் உறவு நிலைகளைக் குறிக்கும் சமூகக் குறியீட்டு வழக்கங்களே ஆகும்.

அன்பு வாழ்த்துக்களுடன் கையில் வழங்கப்படும் பூச்செண்டு மலர்ந்த உள்ளத்தைக் குறிக்கும் குறியீடாகிவிடுகிறது. மரியாதையைக் குறிக்கக் கொடுக்கப்படும் ஓர் எலுமிச்சம்பழம் உலக உருண்டையையே அன்பளிப்பாய்ப்பெற்ற உள்ள நிறைவை ஏற்பவரிடம் ஏற்படுத்திவிடுகிறது. வெறுப்பைக் காட்டக் கொடும்பாவி கொளுத்துதல், சிலைகளை உடைத்தல் போன்ற குறியீட்டுச் செயல்களை உலகெங்கும் காணலாம்.

சமூக உறவுக்கு அடிப்படையாகக் குறியீடுகளே அமைகின்றன. குறியீடுகளைப் புரிந்து பயன் கொள்வதிலும் அதனைப் பயன்படுத்துவதிலுமே மனித வாழ்க்கை அடங்கி உள்ளது. மனிதனைப் பண்பாடும் நாகரீகமும் கொண்டவனாக்கும் பணியில் கலையும் அறிவியலும் பெரும்பங்கு ஆற்றுகின்றன. தொன்மம், சமயம் இவற்றோடு அறிவூட்டும் கலை வடிவங்கள் ஆகியவைக் குறியீட்டு வடிவங்களே ஆகும்.

### 1.6.3 சமயமும் சடங்கும்

சமயம், சமூக வாழ்வின் பிரிக்க முடியாத ஓர் அங்கமாக விளங்குகிறது. இந்து மத வழிபாட்டு முறைகளில் நைவேத்தியம்,

தீபாராதனை, அபிஷேகம், திருநீறு, பிரதட்சணம் போன்ற அனைத்துச் செயல்களுக்கும் பொருள்களுக்கும் உள்ளார்ந்த குறியீட்டுப் பண்புகள் உள்ளன. உலகப் பொருள்களைப் பரம்பொருளை உணர்த்தும் குறியீடுகளாய்க் காணும் பார்வை அனைத்துச் சமயங்களிலும் உள்ளது. திருமணத்தில் தாலியணிவித்தல், மாலை சூடுதல், அட்சதை தூவுதல், அம்மி மிதித்தல், அருந்ததி பார்த்தல், தீவலம் செய்தல் போன்ற எண்ணற்ற சடங்குகள் உள்ளன. இச்சடங்குகள் யாவும் குறியீட்டுத் தன்மையுடையவையாக உள்ளன.

பரமபதம், சதுரங்கம், ஆடுபுலி ஆட்டம் போன்ற விளையாட்டுகளிலும், விடுகதை, பழமொழி, புதிர்கள், சகுனங்கள் போன்றவற்றிலும் குறியீடுகள் நிறைந்துள்ளன. கொடிகள், சின்னங்கள், நினைவுச் சின்னங்கள், அடையாளச் சின்னங்கள், நிறுவனக் குறிகள், விருதுச் சின்னங்கள் போன்ற எண்ணற்ற குறியீட்டு வடிவங்கள் மனித வாழ்வோடு பின்னிப் பிணைந்துள்ளன. இதிலிருந்து குறியீடு மானுட வாழ்க்கையின் மூச்சுக்காற்று போல் கலந்துள்ளமையை அறிய முடியும்.

### 1.6.4 இலக்கியமும் உளவியலும்

உளவியல், உள்ளத்தின் கோலங்களையும் கோணங்களையும் ஆராய்கிற ஓர் அறிவியலாகும். மனித உள்ளத்தின் உணர்வே (Human Psyche) அறிவியலுக்கும் கலைக்கும் கருவறையாக விளங்குகிறது. அத்தகைய உள்ளத்தின் வழிமுறைகளை ஆராய்கிற உளவியலை இலக்கியத்தோடு பொருத்திப் பார்க்கும்பொழுது இலக்கியம் ஒரு படைப்பாளியின் கைதேர்ந்த செய்திறனால் மட்டுமல்ல, பிரத்தியேகமான ஓர்

எழுச்சியினாலும் அமைவதாக உள்ளது. ஒரு மனதின் வழியாக இன்னொரு மனத்துடன் அது பேசுகிறது.

"இலக்கியத்தின் உள்ளர்த்தங்களையும் ஆழங்களையும் உளவியலின் வெளிப்பாடுகளாக உளவியல் திறனாய்வு மூலம் அறிய முடிகிறது. நடப்பில் விரும்புகின்ற ஆசைகள் அல்லது கற்பனைகள், இயலாமை காரணமாகவோ சமூக உறவுகளின் மறைமுகமான அல்லது மரபார்ந்த தடைகள் காரணமாகவோ (Social Taboos) நிகழ முடிவதில்லை. எனவே, அவை அடிமனத்திலே சென்று படிகின்றன. வெளிமனம் அல்லது நனவுடை மனம் தூங்குகின்றபோது இந்த நனவிலி மனம் எழுகின்றது. விகாரங்களோடும், விநோதங்களோடும் கனவுகளாக அவை வெளிப்படுகின்றன" (தி.சு. நடராசன், 2006:90). இலக்கியத்தில் இடம் பெறும் சொற்கள், சித்திரிப்புகள், உணர்வுகள் போன்றவையே குறியீடுகள் ஆகும். மனிதனின் எண்ணங்கள் குறியீடுகளாகப் பதிவாகின்றன, அவை குறியீடுகளாகவே வெளிப்படுகின்றன என்பதை உளவியல் மெய்ப்பிக்கிறது.

## 1.7 முடிவுரை

குறியீட்டியல் - ஓர் அறிமுகம் என்ற முதலாம் இயலில் கீழக்கண்ட முடிவுகள் ஆய்ந்தறியப்பட்டுள்ளன. குறி என்பது ஒன்றை இனம்கண்டு கொள்வதற்கான அடையாளச்சின்னம் ஆகும். இது குறிப்பான், குறிப்பீடு என்ற இரு பகுதிகளைக் கொண்டதாக உள்ளது. உருவக் குறி, சுட்டுக்குறி, குறியீட்டுக்குறி என்பன குறிகளின் முக்கியமான வகைகள் ஆகும். இலக்கியத்தில் இடம்பெறும் உருவ வருணனைகள் உருவக்குறிக்குத் தக்க சான்றுளாக அமைகின்றன. சுட்டுக்குறி என்பது ஒரு கருத்தினை நேரடியாக

உணர்த்துவதற்காகப் பயன்படுவது ஆகும். ஒரு பொருளின் கருத்திற்கு ஈடான பிறிதொரு கருத்தினை அளிப்பதாகக் குறியீட்டுக்குறி விளங்குகிறது.

குறியின் பொருண்மையைப் புரிந்துகொள்ள குறியின் புறப்பொருளும் சூழலும் காரணமாகின்றன என்பதைப் பெறமுடிகின்றது. ஒரு குறியானது மூன்றுநிலை விளக்கங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது என்ற பியர்ஸின் கருத்தானது தமிழிற்கும் வடமொழிக்கும் பொருந்துவதாக உள்ளது என்பதை அறியமுடிகிறது.

குறியீடு என்பது ஒன்றிற்குப் பதிலாக நிற்கும் மற்றொன்று ஆகும் என்பதை அறிஞர்களின் கருத்துக்கள் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது. பொருளைக் (Subject) குறிப்பாக உணர்த்தப் பயன்படுத்தப்படும் கருவிகளே (Object) ‘குறியீடு’ ஆகும் எனவும் சொல்லுவது ஒன்றும் அதனால் பெறப்படும் பொருள் வேறொன்றுமாக அமைவது அல்லது ஒன்றைச் சொல்லி அதனோடு ஒத்த இன்னொன்றைப் பெற வைப்பது குறியீடு என்பதும் பெறப்பட்டுள்ளது. குறியீடு காலந்தோறும் இலக்கியங்களில் இடம்பெற்றுச் சுவைகூட்டிச் சிறப்படையச் செய்துள்ளதை அறிய முடிகிறது. பல தளங்களிலும் மனித வாழ்வோடு பிணைந்துள்ள குறியீட்டின் இன்றியமையாமையை அறியமுடிகிறது.

சமுதாயத்தின் அனைத்துக் கூறுகளிலும் உள்ள குறியின் பொருள் எவ்வாறு உணரப்படுகிறது என்பதையும் அதன் ஆழம் எவ்வாறு புரிந்து கொள்ளப்படுகிறது என்பதையும் ஆய்வதே குறியீட்டியல் என்பது பெறப்படுகிறது.

# 2. சங்கக் குறியீட்டியல்

# 2. சங்கக் குறியீட்டியல்

## முன்னுரை

சங்க இலக்கியம் அகம், புறம் என்று இரு வகைப்படும். இதனைத் தமிழரின் வாழ்க்கை நோக்கங்களைக் காட்டும் மிகத்தெளிவான கண்ணாடி எனக்கூறலாம். அகப்பாடல்களின் பொருள் தனியொருவரின் உணர்வுகள் அல்ல; பொதுவாக மனிதர்களின் உணர்வுகளே ஆகும். பாடல்களின் மையக் கருத்து, பாடல் எழுதும் புலவனின் சூழ்நிலை, பாட்டின் பின்னணி, கருத்தை வெளிப்படுத்துவதற்குப் பயன்படும் உத்தி ஆகியவை ஒவ்வொன்றையும் ஆழ்ந்து சிந்தித்து இலக்கணம் கண்டுள்ளார் தொல்காப்பியர். அவர் கூறும் உள்ளுறை, இறைச்சி ஆகியன பற்றியும் உள்ளுறை இறைச்சிக்கும் குறியீட்டிற்கும் உள்ள தொடர்பு பற்றியும் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

## 2.1 சங்க இலக்கியம்

தமிழின் மிகத் தொன்மையான இலக்கியம் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையுமாகும். இப்பதினெட்டு நூல்களும் பதினெண் மேல்கணக்கு என வழங்கப்படுகின்றன. பல காலங்களில் தமிழ்நாட்டின் பல்வேறிடங்களில் வாழ்ந்த பல்வேறு புலவர்களால் பாடப்பட்ட பாடல்களின் தொகுப்பே இந்நூல்கள் ஆகும்.

## 2.2 அகமும் புறமும்

மக்கள் வாழ்வியலைப் பண்டைத் தமிழர் அகப்பொருள், புறப்பொருள் எனப் பகுத்துப் பாடியுள்ளனர். மக்கள் தம் வாழ்க்கை நிகழ்வுகளை,

ஒழுகலாறுகளை உரைப்பதால் இவை முறையே அகத்திணை, புறத்திணை எனப்பட்டன. 'அகம்' என்ற சொல் சங்க இலக்கிய அகப்பாடல்களில் 'அக', 'அகம்', 'அகத்து' எனப் பயன்படுத்தப்பட்டுள்ளது. நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, கலித்தொகை ஆகிய ஐந்து நூல்களிலும் 'அக' என்ற பயன்பாடு 28 இடங்களிலும், அகத்து என்னும் பயன்பாடு 30 இடங்களிலும் அகம் என்னும் சொல் 47 இடங்களிலும் இடம் பெற்றுள்ளன" என்று மனோன்மணி சண்முகதாஸ் குறிப்பிடுகிறார் (2000:84). புலவன் தன்னைச் சூழ்ந்துள்ள மக்களுடைய வாழ்வியலில் சிறப்பாக எடுத்துப்பாட வேண்டிய அக ஒழுக்கத்தைத் தேர்ந்தெடுத்துப் பாடியுள்ளான்.

"அகத்திணை என்பது நம் பிறப்போடு ஒட்டியது, உலகப் பிறப்பை அருளுவது, யாண்டும் பரந்தது, உணர்ச்சியுள் வலியது, ஐம்புல இன்பமும் தருவது, எண்ணம், சொல் எல்லாம் இனிப்பது எது? காதல், காதல், காதல். இக்காதல் இயல்பான பாலுணர்ச்சியே அகத்திணை இலக்கியத்தின் பாடு பொருளாகும். உலகியலில் வாழ்வியலைக் கண்ட தமிழகத்தின் தனி இலக்கியத்திற்கு வேறு எவ்வுணர்ச்சி பாடு பொருளாக இருக்க முடியும்" என்று வ.சுப. மாணிக்கம் உணர்த்துவார் (1962:114). "ஆண், பெண் விருப்பத்தினால் அகத்திணை உண்டாகின்றது. மண், பொன் ஆசைகளினாலும் பசியினாலும் புறத்திணை உண்டாகிறது" என்பார் கே.கே பிள்ளை (1974:93).

## 2.3 அகம் - உரையாசிரியர் கருத்து

அகம் என்பதை விளக்கும் நச்சினார்க்கினியர் "ஒத்த அன்பால் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம், தத்தமக்குப்

புலனாகி, இவ்வாறு இருந்ததென கூறப்படாததாய் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் யாண்டும் உள்ளத்துணர்வை நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின் அதனை அகம் என்றார்" என்பார் (தொல்:அகத்: 1).

இளம்பூரணர், "அகப் பொருளாவது போக நுகர்ச்சியாகலான் அதனால் ஆகிய பயன் தானே அறிதலின் அகம் ஆகும் என்றும், புறப்பொருளாவது மறஞ் செய்தலும் அறஞ்செய்தலும் ஆகலான் அவற்றான் ஆயபயன் பிறர்க்குப் புலனாதலின் புறம் ஆகும்'' என்றும் குறிப்பிடுகிறார் (தொல்:அகத்: 1).

இருவர் கூற்றினின்றும் அகம் என்பது உள்ளம் சார்ந்தது என்பதும் புறம் என்பது உலகம் சார்ந்தது என்பதும் பெறப்படுகின்றன. அகம் என்பது உள்ளம் அதன் உணர்வு குறித்தது எனின் அது கூறப்படாதது, ஆனால் உணர்த்தப்படக்கூடியது என்று பொருள் கொள்ளலாம். உரையாசிரியர் கருத்துக்களைக் கொண்டு புறம் என்பது சொல்லால் கூறக்கூடிய இயல்புடையது எனவும் அகம் என்பது குறிப்பால் உணர்த்தக்கூடிய உளவியல் எனவும் பொருள் கொள்ளலாம். ஆகவே அக இலக்கியத்தைக் குறிப்புப் பொருள் இலக்கியம் எனலாம்.

அகம், புறம் பற்றி கருத்துக் கூறும் அ.ச. ஞானசம்பந்தன் "அகமென்பதும், புறமென்பதும் முறையே ஆங்கிலத்தில் வழங்கும் Subjective Poetry, Objective poetry என்பனவற்றைப் பெரிதும் ஒத்தவை என்பதும் அந்த ஆங்கிலப் பகுப்புக்குள்ள அனைத்துப் பொருளையும் தமிழ் மொழிக்கு ஏற்றினால் அது பொருந்தாது" என்றும் கருதுகிறார் (1984:175).

மேலும் "அகப்பாடலை ஆக்கும் புலவன் வெளியுலக அனுபவங்களில் ஆழ்ந்து விடுவதில்லை. அதற்கு மாறாகத் தன்னுள்ளேயே தான் அமிழ்ந்துவிடுகிறான். அவ்வகமனத்தில் உண்டாகும் அனுபவங்களை மட்டும் எடுத்து இவ்வகைப்பாடல்களை வடிக்கிறான். இவற்றிக்கு மாறான புறப்பாடல்களில் கவிஞன் புறவுலகத்தில் நுழைந்து அங்கு நடைபெறும் நிகழ்ச்சிகளில் அமிழ்ந்து அவற்றைப் பற்றி மட்டும் கூறுகிறான் என்று அவர் விளக்குகிறார்.

*செல்வார் அல்லரென் றியானிகழ்ந் தனனே*
*ஒல்வாள் அல்லளென்று அவரிகழ்ந் தனரே*
*ஆயிடை* ***இருபேர் ஆண்மை*** *செய்த பூசல்*
*நல்லராக் கதுவி யாங் கென்*
*அல்லல் நெஞ்சம் அலமலக் குறுமே*

குறுந்: 43

என்னும் ஔவையின் குறுந்தொகைப் பாடலில் அகத்தின் ஆளுந்தன்மையைப் (ஆண்மை) பெண்ணுக்கும் பொருள்தேடச் செல்லும் ஆண்மையை ஆணுக்கும் வகுத்துத் தருகிறார். இதில் அகம், பெண் தலைமை தாங்கும் இயல்புடையது என்னும் கருத்தை வலியுறுத்துகிறது எனலாம். புறம், வெளியுலகப் போர்ச் செய்திகளையே பெரிதும் பேசுவதால், அகம், மனப் போராட்டத்தைக் குறிக்கிறதெனலாம். ஐந்திணைகளில் குறிஞ்சி தவிர மற்ற அனைத்தும், பிரிவும் துயரும் சுட்டியனவாய் அமைந்துள்ளதைக் காண முடியும். குறிஞ்சியிலும் கூடல் பேசப்படுவதில் களவு வாழ்க்கைச் சிக்கல்களே மிகுதியாக உள்ளன. எனவே அகம் உள்ளப் போராட்டத்தைக் கருவாகக் கொண்ட இலக்கியம் எனலாம்.

"வாழ்வியல் இன்பங்களைக் கனியென்னும் குறியீட்டால் குறிப்பது உலகளவில் காணப்படும் ஒன்றாகும். கவ்வுதல், நீந்துதல் போன்ற செயல்கள் புணர்ச்சியின் குறியீடாகும்" என்று ஃப்ராய்டு கருதுகிறார் (இளம்பரிதி, 2006:146).

*அருவி ஆர்க்கும் பெருவரை நண்ணிக்*
*கன்றுகால் யாத்த மன்றப் பலவின்*
*வேர்கொண்டு தூங்குங் கொழுஞ்சுளைப் பெரும்பழம்*
*குழவிச் சேதா மாந்தி*

நற்: 213:1-4

என்ற கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனாரின் பாடலில் பலாவின் கொழுஞ்சுளையைத் தின்ற சிவந்த பசு, புணர்ச்சி பெறும் களவுத் தலைவனைச் சுட்டுகிறது. வாழ்க்கைக் கனியின் சுளை அகமாகிய இன்ப வாழ்வு என்றும் அதை வளர்த்துப் பாதுகாத்துக் கனிய வைக்கும் தோல் புறமென்றும் கூறலாம். வாழ்க்கையின் உள்ளுயிராகிய பண்பாடு அகம் என்றும் அதன் புறக்காப்பான உடலால் விளங்கும் நாகரிகம் புறம் என்றும் கொள்ளலாம்.

மேற்கண்ட கருத்துக்களின் மூலம் அகம் என்பது களவு காலத்திலும், கற்புகாலத்திலும் பெண்களின் உளப்போராட்டத்தைப் பெரிதும் உணர்த்துவது எனலாம்.

### 2.3.1 காதல் இன்பம்

இன்ப விருப்பம் என்பது அனைத்துயிர்க்கும் அடிப்படையான உணர்வு ஆகும். இது உளவியல் உண்மை.

*எல்லா உயிர்க்கும் இன்ப மென்பது*
*தானமர்ந்து வருஉம் மேவற்றாகும்*

தொல்:பொருளி: 27

என்னும் தொல்காப்பிய நூற்பா இன்பம் நாடுதல் என்பது உயிரியற்கை என்கிறது. இவ்விருப்பம் இயல்பூக்க அடிப்படையானது என்பது உளவியல் உண்மை. ஐம்புலனுக்கும் ஒருசேர இன்பத்தைக் காதல் தருகிறது என்பதைக் கீழக்கண்ட பாடல் வழி அறியலாம்.

*கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்*
*ஒண்டொடி கண்ணே யுள*

குறள்: 1101

இதனால் காதல் பேரின்பம் எனப்படுகிறது. "ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம்" (அகத்: 1) எனக் காதலுக்கு விளக்கம் சொல்வார் நச்சினார்க்கினியர். ஒத்த அன்பு இல்லையென்றால் அது இழிந்த காமம்தான் என்பதை உய்த்துணரலாம். பக்தி இயக்கத்தார் இறையின்பத்தோடு ஒப்பிட்டுக் காதலைச் சிற்றின்பம் என்று இழித்துப் பேசினர் என்றாலும் பக்தியிலும் நாயகன் நாயகி பாவத்தை அவர்களால் தவிர்க்க இயலவில்லை.

*நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று*
*நீரினும் ஆரளவின்றே*

குறுந்: 3:1-2

என்று தலைவனின் காதலைக் காதலி உயர்த்திப் பேசுகிறாள். காதலால் நிறைவுறும் பெண்மை அதைக் கடலினும் பெரியதாய் எண்ணுதல் தெளிவாகும்.

### 2.3.2 காதலின் ஆற்றல்

பெண்மையின் காதலாகிய சக்தியே ஆண்மையை இயக்கும் விசையாக விளங்குவதைக் "காற்றிலேறியிவ் விண்ணையும் சாடுவோம்" என்ற பாரதியின் கூற்று உணர்த்தி நிற்கும்.

*கண்ணின் கடைப்பார்வை காதலியர் காட்டிவிட்டால்*
*மண்ணில் குமரருக்கு மாமலையும் ஓர் கடுகாம்*

என்று பாரதிதாசன் பாடுவார் (1998:4). ஆண்மையின் ஆற்றலைத் தூண்டிச் செயலூக்கம் தருவதால் இந்திய மரபில் பெண்மை தெய்வீகமாய்ப் பேசப்படுகிறது. சிவத்திற்கு ஆற்றல் தரும் சக்தியாகிறது. பேரின்ப வடிவினனாய் இறைவனைக் காணும் இந்தியச் சிந்தனையில் கடவுளுக்கும் காதல் உண்டு என்பதை நாயகன், நாயகி பாவத்தில் புனையப்பட்ட பக்திக் கவிதைகளின் மூலம் அறியமுடிகிறது. ஆண்டாள், மாணிக்கவாசகர் படைப்புகளிலெல்லாம் ஆண், பெண் காதலுறவு ஆன்மீகக் காதலுறவாக மலர்ந்துள்ளது.

ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்ட எதிர்பாரா வேளையொன்றில் முன்னறிவிப்பேயின்றிக் காதல் பிறந்து இதயம் நிறைக்கிறது. இஃது ஊழ் என்னும் விதியின் வினையே எனப் பழந்தமிழர் கருதினர்.

*ஒன்றே வேறே என்றிரு பால்வயின்*
*ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்*
*ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப*

தொல்:களவி: 2

என்று காதல் தோன்றுவது பால்வரை தெய்வத்தின் ஆணையால்தான் என்பது உணர்த்தப்படுகிறது. எவ்வழியிலும் முன்னர் அறியாத தலைவன், தலைவி பாலது ஆணையால் கண்ட பொழுதே காதல் கொண்டு இணைந்த தன்மையை,

*யாயும் ஞாயும் யாரா கியரோ*
*எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்*
*யானும் நீயும் எவ்வழி யறிதும்*
*செம்புலப் பெயனீர் போல*
*அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே*

குறுந்: 40

என்ற குறுந்தொகைப்பாடல் காட்டுகிறது.

காதலுணர்ச்சி கட்டுப்படுத்த முடியாது ஓங்கி நிற்கும்போது, ஆண்மகன் அதைத் தன் பழிபாவம் அஞ்சும் பெருந்தகைமையாலும் அறிவின் வன்மையாலும் அடக்கி அணையிடுவான்.

*பெருமையும் உரனும் ஆடூஉ மேன*

தொல்:களவி: 7

என்று தொல்காப்பியர் ஆண்மையின் பண்புகளைக் கூறுகிறார்.

*அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்*
*நிச்சமும் பெண்பாற் குரிய என்ப*

தொல்:களவி: 8

பெண்மையானது அச்சமும் மடனும் நாணமும் கொண்டு தன்னைத் தகைத்துக் கொள்ளும் என்கிறார்.

ஓர் இனத்தின் நாகரிகத்தையும் பண்பாட்டையும் அதன் பாலியல் ஒழுகலாறுகள் கொண்டு அளவிடுவார். எனவே, காதலைப்பாடும் புலவனுக்கு இப்பண்பு நிலைகளை விட்டுவிடாது பாட வேண்டிய பொறுப்புண்டு. காதலை வரையறுத்துப் பொருளாற்றல் உள்ள சொற்களைக் கொண்டு பண்பாட்டு வரையறை மீறாது முழுமையாக உணர்த்தியாக வேண்டிய நிலையில்தான் கவிஞனுக்குச் சிக்கல் உண்டாகிறது.

காதற்பாட்டு பாடும் புலவனின் நிலை, கத்தியின் விளிம்பில் நடப்பது போன்றதாகும். நாணம் கருதி மறைத்துச் சொல்லும்போதே பயன்கருதி மறைவை வெளிப்படுத்தவும் வேண்டும். உள்ளத்துணர்வாம் மறைவை வெளிப்படுத்தும் போதே அதைப் பண்பாடு கருதி மறைத்துரைக்கவும் வேண்டும். சூழல் கருதிச் சொல்லும் வெளிப்படையில் உள்ளக் குறிப்பைப் பொதிந்து நுண்ணிதின் உணர்த்திடவும் வேண்டும். காதல் பாடும் புலவனுக்கு இவை போன்ற கட்டுப்பாடுகள் அதிகம்.

மறைவை வெளிப்படுத்தும் போது நுண்ணறிவும் நாவன்மையும் தேவை. பிரியக் கருதும் தலைவனைத் தடுக்க விரும்பும் தலைவி தன் உள்ளத்திருப்பதைச் சொல்லால் விளக்காது.

*முன்னம் காட்டி முகத்தி னுரையா*
*ஓவச் செய்தியின் ஒன்றுநினைந் தொற்றி*

அகம்: 5:19-20

என்று காதலன் உணர வெளிப்படுத்தி செலவழுங்குவித்த செய்தியைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ பாடியுள்ளார். பொருள் பெரிதென்று பிரியக் கருதுகிறானே என்ற ஊடல், கொடும்பாலையைக் கடந்து வினைமேற்

செல்லக் கருதுபவனைத் தடங்கல் மொழி கூறித் தடுத்தால் அவனுக்கு ஏதம் ஏற்பட்டுவிடுமோ என்ற பேதமை, நம்பிக்கை. இவற்றால் கட்டுண்ட தன் நாவை அசைக்காமலேயே தலைவி தன் நெஞ்சை அவனுக்கு வெளிப்படுத்திவிடுவதைப் பாடும்புலவரின் கவித்திறத்தைப் பாடலின் ஒவ்வொரு சீரிலும் காணலாம். தலைவியின் புறத்தோற்றம் கொண்டு அவளது அகத்தோற்றத்தை ஓவியமாகத் தீட்டிவிட்டார் புலவர். இதற்குத் தலைவியின் உள்ளக் குறிப்பு புலப்படுமாறு ஓவியம் போன்ற நிலையைக் காட்டுகிறார்.

### 2.3.3 காதல் உணர்வு

அனைத்துயிர்க்கும் பொதுவான இயல்புகளாகப் பாலுணர்வையும் பசி உணர்வையும் கூறலாம். மனித இனம், வகுத்து வாழும் சிறப்பியல்பினால் பாலியல் உணர்ச்சியை உள்ளம் சார்ந்ததாக உயர்த்தி வாழ்வியல் நெறிகளை வகுத்துக் கொள்கிறது. மனிதர் ஆண் பெண் ஈர்ப்பில் தோன்றும் விருப்பை வளர்த்துப் பிற உயிர்களிடத்தும் பற்று வைக்கும் அன்பாகப் பெருக்கினர், அன்பே மனித இலக்கணம் என்றனர்.

*அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு*
*என்புதோல் போர்த்த உடம்பு*

குறள்: 80

என்பது திருவள்ளுவரின் அறமாகும். இருவர் சேர்ந்து வாழும் இல்லத்தை மையமாக்கிப் பிறக்கும் அன்பு வளர்ந்து உலகத்துயிர் மீதெல்லாம் பரந்து நலம் விளைக்கும் அருளாகிறது.

*அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்*
*செல்வச் செவிலியால் உண்டு*

குறள்: 757

என்ற குறளடிகள் அன்பின் குழந்தையே அருள் என்றும் அதனை வளர்க்கும் செல்வச் செவிலியே பொருள் என்றும் கூறுகிறது. எனவே, மனிதனின் உலகம் இல்லத்திலிருந்து தொடங்குகிறது. அகத்திலிருந்து புறம் விரிகிறது. ஆற்றல் வாய்ந்த காமமும் பசியுமே உயிரின் உலகை இயக்குகின்றன. “மனிதனுடைய எல்லா உணர்ச்சிகளுக்கும் தாயுணர்ச்சி காமமே என்று ஃபிராய்டு போன்ற உளவியல் அறிஞர்கள் கூறுகின்றனர். ஆயினும் பசி, தாகம் போன்ற உணர்ச்சிகள் அடங்கிய பிறகே காம உணர்ச்சி பிறக்கும் என்ற கருத்தையும் ஃபிராய்டு கூறியிருக்கிறார்” என்பர் (து. சிவராஜ், 1994:76).

காதல், பசி என்ற இரண்டுமே மனித வாழ்வின் தவிர்க்க இயலாதவையாகும் என்பதைப் பண்டைத் தமிழர் உணர்ந்திருந்தனர். வாழ்வொழுக்கங்களில் காதல் சார்ந்தது அகம் என்றும் சமூகம் சார்ந்தது புறம் என்றும் வகுத்தனர். திணை என்பது ஒழுக்கம். உயர்திணை உயிராகிய மனிதன் ஒழுக்க நெறியில் இன்பமாக வாழ இவ்விரு பேருணர்வுகளைக் கட்டுப்படுத்தவும் பயன்படுத்திக் கொள்ளவும் வேண்டும் என்பது அவர்தம் வாழ்வியல் கொள்கை. இவற்றையே பாடுபொருளாக்க வேண்டும் என்பது இலக்கியக் கொள்கை எனலாம்.

## 2.4 இயற்கையும் உணர்ச்சி வெளிப்பாடும்

இலக்கியம் என்பதே உணர்ச்சியின் பெயர்ச்சியாகும். உணர்ச்சிவயப்பட்டவனைக் கண்ட புலவன் அவனுடைய உணர்ச்சி நிலையைத் தானும் அடைகிறான். பிறகு தன் சொல்வன்மையினால் தன் உள்ளத்தில் தோன்றிய உணர்ச்சிகளை இடம் பெயர்த்துப் படிப்போரின்

உள்ளத்துக்குள் உணர்த்த, அவர்களுக்கு இயற்கைத் தன் வளத்தைக் குறியீட்டுக் களஞ்சியமாக வாரி வழங்கியிருக்கிறது எனலாம்.

சங்க இலக்கிய அகப்பாடல்களைப் படிக்கும் போது தனித்துவமான சில பண்புகள் வெளிப்படுகின்றன. அகப்பாடல்களில் அக உணர்வு நிலை வெளிப்படுத்தப்படும் விதம் இத்தனித்துவப் பண்பில் முக்கிய இடம் பெறுகிறது. சங்கப் பாடல்களைப் பாடிய கவிஞர்களுக்கு அவர்கள் வாழ்ந்த சூழலும் அவர்களது வாழ்க்கைப் பின்னணியும், வாழ்வும் பற்றிய கொள்கைகளும் முன்னோர் மரபுகளும் அகப்பாடல்களைச் சிறப்பாயமைக்க உதவி இருக்கின்றன. கவிஞர்கள் இயற்கையோடு இயைந்த வாழ்க்கை அனுபவமுடையவர்களாக இருந்தனர். மனித வாழ்க்கையின் பல்வேறு கூறுகளையும் விளக்க இயற்கைக் காட்சியைக் கருவியாகப் பயன்படுத்தினர். இங்கு கபிலரின் பாடலைச் சான்றாகக் காட்டி இப்பண்பினை விளக்கலாம்.

*மால்வரை இழிதரும் தூவெள் ளருவி*
*கன்முகைத் ததும்பும் பன்மலர்ச் சாரல்*
*சிறுகுடிக் குறவன் பெருந்தோட் குறுமகள்*
*நீரோ ரன்ன சாயல்*
*தீயோ ரன்னவென் உரனவித் தன்றே*

குறுந்: 95

என்ற இப்பாடலில் தலைவனுடைய உடல்நிலை வேறுபட்டதைப் பாங்கன் 'நினக்கு இவ்வேறுபாடு எதனால் வந்தது' என்று கேட்டதற்குத் 'தலைவன் ஒரு குறுமகளின் நீர் போன்ற சாயல், தீ போன்ற என் உரனை அவித்தமையால் இவ்வாறு ஆயினேன்' என்று விடை கூறுகிறான். பாட்டின் இறுதி அடிகளில் உணர்ச்சியைப் பெயர்க்கும் நிலையில் பயன்படுத்தப்படும்

உவமை மலைச்சாரலின் புலத்தைப் படிப்போருள்ளத்தில் உண்டாக்கும் வண்ணம் சொற்களையும் உவமைகளையும் பெய்து கபிலர் பாட்டைச் சுவைக்கச் செய்கிறார். இயற்கையிலும் மனித உணர்ச்சியிலும் காணும் தொடர்பினை வெளிப்படுத்திக் காட்டுகிறது இப்பாடல். அக்கால மக்களின் உள்ளத்து உணர்வுகளை இயற்கை கட்டுப்படுத்தியது. அவர்களின் வாழ்க்கை நடைமுறை, பழக்கவழக்கங்கள், கொள்கைகள், செயற்பாடுகள் அனைத்தும் இயற்கைச் சூழ்நிலையினால் உருவாகின.

## 2.5 அகமாந்தர் உணர்வுகளின் பின்புலங்கள்

நல்ல கவிதைகள் எல்லாம் ஓரளவேனும் குறிப்புப்பொருள் உடையனவாக இருக்கும். சொல்லுக்குரிய நேர்பொருள் அளவில் இல்லாமல் சொற் பொருளுக்கு மேலும் உட்பொருள் பொதிய அமைவதே பெருங்கவிதை, நற்கவிதை என்பது உட்பொருள் பற்றிய மார்க்ரெட் கில்மெனின் கூற்று சங்க இலக்கிய அகப்பாடலுக்கும் பொருந்துவதாக உள்ளது எனக் கருதுகிறார் சரளா ராஜகோபாலன் (1995:88).

அகப்பாடல்களில் இடம் பெறும் காட்சிகள் அதாவது முதல் கருப்பொருள்கள் வெறும் இயற்கைப் புனைந்துரைகளாக இலக்கியத்தில் இடம்பெறாமல் அகமாந்தரின் மன உணர்வுகளைத் துலக்கி நிற்கும் பின்புலங்களாகவே பாடல்களில் இடம் பெறுகின்றன.

## 2.6 தலைவியும் தோழியும் குறிப்பாகப் பொருள் உணர்த்தும் இடங்கள்

சங்க இலக்கிய அகப்பாடல்கள், பல இடங்களில் தலைவியும் தோழியும் தம் மனக்கிடக்கையைப் பக்குவமாக வெளிப்படுத்தும் பண்பாட்டு நோக்கம் உடையவையாக இருப்பதைக் காணமுடியும். அதை அவர்கள்

குறைவும் சிதைவுமின்றி வெளிப்படுத்தும் விதம் வியப்பிற்குரியதாகும். தலைவியின் ஆற்றாமையை வெளிப்படையாகக் கூற முடியாத சூழலிலும் தலைவனை வரைவு மேற்கொள்ளக் கூறும் போதும் வரைவு மேற்கொள்ளாத தலைவனின் கொடுமை காட்டும் இடங்களிலும் தலைவன் வரைவு நீட்டித்ததால் தலைவி அடைகின்ற வேதனையைக் கூறும் போதும் களவொழுக்கத்தால் அலர் உண்டாகும் என்பதைத் தெரியப் படுத்தவும் அன்னை அறிந்து வெறியெடுக்க, அலர் காரணமாதலைச் சுட்டவும் இற்செறிப்பு நிலையிலும் தலைவியின் நோய்க்குக் காரணம் அறியாமல் தவிக்கும் தாய்க்கு உண்மை தெரிவிக்கவும் வரைவு மலியும் நிலையிலும் வாயில் மறுத்தலில் தலைவனின் கொடுமை சுட்டும் இடங்களிலும் வாயில் நேர்தலில் பரத்தமை அகற்றவும் செஞ்சொல் தேர்ந்து பேசுகின்றனர். இன்றும் இக்குறிப்புப் பொருள் பெண்களால் கணவனைக் கடியும் போது ஆளப்படுகிறது. தன் கணவனை நேராகக் கடிய விரும்பாத பெண்மையின் சிறப்பையே இது சுட்டுகிறது எனலாம்.

காதல், பாலுணர்ச்சி சார்ந்ததாகையால் காதல் இலக்கியம் படைக்கும் புலவர்கள் வெளிப்படையாகக் கூறவும் முடியாது, கூறியே ஆக வேண்டிய சூழலில், குறிப்பாகப் பொருளை உணர்த்துவதையே சிறந்த வழியாகத் தேர்ந்தெடுக்கிறார்கள். எனவே காதலின் மொழி குறிப்பாகக் கூறுவது என்பது பெறப்படும்.

## 2.7 குறியீடு - பொருண்மை வெளிப்பாடு

நாகரிகம் முதலிய கட்டுப்பாடுகள் கொண்ட காதல் இலக்கியத்தில் கவிஞனுக்கு உரைப்பதிலும் உணர்த்துவதிலும் உள்ள இடர்ப்பாடுகள்

எண்ணற்றவை. இதனைப் புலவன் தன் நுண்மாண் நுழைபுலத்தால் திறம்படக் கையாள முடிகின்றது. ஒரு கவிதை எதைச் சொல்கிறது என்பது முக்கியமன்று, எதைச் சொல்லாமல் சொல்கிறது, எதைக் குறிப்பாகப் புலப்படுத்துகிறது என்பதுதான் முக்கியம். சொல்வதை அழகுறச் சொல்வதற்கும் படிப்பவர் உள்ளத்தை ஊடுருவித் தைக்கும் வகையில் சொல்லுவதற்கும் கவிதையில் குறியீடுகள் பயன்படுகின்றன. "குறியீடுகள் அக இலக்கியத்தின் உயிர்நாடி. படைப்பிலக்கியத்தில் உணர்ச்சிக்குக் கலைவடிவம் கொடுத்துதான் வெளியிட வேண்டும். இந்த உணர்ச்சியை வெளியிடுவதற்கு ஏற்ற ஒரு வழி குறியீடமைத்துப் பாடுதல் ஆகும்" என்கிறார் ஏ.வி. சுப்பிரமணியன் (1963:60).

கொஞ்சம் எல்லை மீறினாலும் அருவருப்பையும் ஆபாசத்தையும் தொட்டுவிடும் பாலியல் கருத்துக்களைத் தயங்காமல் வெளிப்படுத்தக் குறியீடுகள்தாம் சிறந்த வழியாகப் பயன்படுத்தப்படுகின்றன. இக்குறியீடு, இலக்கியத்தைப் படிப்பார்க்கு எவ்வகையிலும் அருவருப்பு என்பதே தோன்றாத வகையில் கலையின்பத்தின் உச்சிக்கே கொண்டுபோய்ச் சேர்த்து விடும் என்று கூறலாம். பழங்கால மனிதன், தன் காதல் ஆர்வத்தைக் குறியீட்டு மொழிகளாலேயே வெளிப்படுத்தினான் என்பதை இலக்கியங்கள் வாயிலாக அறிந்து கொள்ளலாம். மனிதன் காதல் பேச்சில் நடைமுறைக் கட்டுப்பாட்டை மீற அஞ்சியதாலும், மென்மையாய் வெளிப்படுத்த விரும்பியதாலும் அதற்கு ஒப்புமையான பொருள்களை நாடினான். இயற்கைப் பொருள்களிலிருந்து அதற்கான குறியீடுகளைக் கண்டறிந்தான். சங்க இலக்கிய அகப்பாடலில் இடம் பெறும் கருப்பொருள்கள் மிகுதியும் இயற்கைக் குறியீடுகளாக இருப்பதால் அவற்றுள் பொருத்தமானவற்றை

அமைத்துக் காதல் ஒழுக்கத்தின் உணர்வுச் சூழலைச் சிறப்பாகப் படைத்தான் எனலாம். "கருப்பொருள் உவமமாக நின்று குறிப்புப் பொருளுணர்த்துவது, திணை உணர்த்துவது, சூழலைக் காட்டுவது எனும் முச்செயலைப் புரியும் செறிந்த குறியீடாக விளங்குகிறது" என்பார் அப்துல்ரகுமான் (2000:43).

மண், மலை, அருவி, கடல், காடு, வயல், மரம், மலர், கதிரவன், நிலவு போன்றவையும் யானை, புலி, பாம்பு, குரங்கு, குதிரை, எருமை, பன்றி, மான், மீன், மயில், ஆடு, புறா, கிளி, மயில் போன்ற உயிரிகளும் உரல், உலக்கை, அம்பு, வாள், ஏர், கலப்பை, தேர் போன்ற செயற்கைப் பொருட்களும் அவற்றுள் குறிப்பிடத்தக்கனவாகும். இவ்வாறான பொருள்களின் மீது குறிப்புப் பொருண்மையை ஏற்றி அவற்றைக் குறியீடுகளாக்கி கவிதையைச் சிறப்படையச் செய்கிறான் புலவன். எனவே காதலுணர்ச்சிகளையும் செயல்களையும் முழுமையாக உணர்த்தக் குறியீடுகளே சிறந்த வெளியீட்டுக் கருவிகளாக விளங்குகின்றன என்பதைப் பெறலாம்.

### 2.7.1 தன்னுணர்ச்சிப் பாடலும் குறியீடும்

தன்னுணர்ச்சிப்பாடல் (Lyric Poem) என்பதற்கு அகப்பாடல் என்று தமிழாக்கம் தருகிறார் அ.ச. ஞானசம்பந்தன். "அகப்பாடல்கள் எல்லாம் மாந்தர்களின் உணர்ச்சியைத் தன்னுணர்ச்சியாகக் காட்டுபவை, உலகப் பொது அனுபவங்களாகக்கூடியவற்றையே படம்பிடித்துக் கூறுபவை ஆயினும் இவை நிகரற்ற தன்னுணர்ச்சி வெளியீட்டுத் தன்மையுடையவை" என்று உரைக்கிறார் தமிழண்ணல் (2005:92).

"நவீன தொடர்புச் சாதனங்களை விட மிகவும் சுருக்கமாகவும் நுட்பமாகவும் உலகியலைப் பற்றி ஒரு தன்னுணர்ச்சிப் பாடல் உணர்த்தும் ஆற்றல் பெற்றிருக்கிறது. அதற்கே சிறப்பாயமைந்த குறியீட்டுச் செய்தி முறையால் கூறப்படாதவற்றையும் குறிப்பாயுணர்த்தும் சக்தி அதற்குண்டு" என்று மரோட்டிலாஜோஸ் என்பவரின் கருத்தைச் சுட்டுகிறார் க. கைலாசபதி (1970:53). பொதுவாக, தன்னுணர்ச்சிப் பாடல் தனியொருவர் கூற்றாக அவரது உணர்ச்சிகளையும் எண்ணங்களையும் ஒருவர் சார்ந்த அக வயமான வழியில் வெளியிடுகிறது என்கிறார் கட்டன் (1977:365). குறியீட்டுத் தன்மை கருதியே பிரெஞ்சுக் குறியீட்டிய இயக்கத்தார் உணர்வூட்டமிக்க தன்னுணர்ச்சிப் பாடலை ஆன்மாவையும் அதன் விந்தையான உணர்வுநிலைகளையும் சிறப்பிப்பதற்காகப் பயன்படுத்தினர் என்பர் (Cuddon, 1977:469).

"அகப்பாடலின் அடிப்படை தனிமனிதனின் அனுபவமாயினும் சிறந்தவை என்று கருதப்பெறும் அகப்பாடல்கள் அனைத்தும் தனிமனிதனுடைய அனுபவங்கட்கு மட்டும் வடிவு கொடுக்காமல் உலகிலுள்ள மக்கள் அனைவருடைய அனுபவங்களுக்கும் வடிவு கொடுப்பனபோல் அமைந்துள்ளன" எனப் பேராசிரியர் ரெட்சனின் கருத்தை அ.ச. ஞானசம்பந்தன் (1984:176) கூறுகிறார். ரெட்சன் கூறிய இக்கருத்து தமிழிலக்கியங்களைப் பொறுத்தவரை முற்றிலும் உண்மை எனலாம். தொல்காப்பியர் "சுட்டி ஒருவர் பெயர் கொளப்பெறாஅர்" என்று கூறுகிறார். காரணம் இவை கூறும் அனுபவங்கள் அனைத்தும் தனிப்பட்ட ஒருவர்க்கே உரியன என்பதன்றி மனித இனம் முழுவதற்கும் பொதுவானவையாக

இருத்தலாகும் என்று விளக்கிப் பெயர் சுட்டா அகப்பாட்டு நெறிக்கும் காரணம் சொல்கிறார்.

மேற்கண்ட கருத்துகளால் தன்னுணர்ச்சிப் பாடல் வகையைச் சார்ந்த சங்க இலக்கிய அகப்பாடல்கள், சிறந்த குறியீடுகளாக விளங்குகின்றன என்னும் உண்மை பெறப்படும்.

உலகத்துயிர்க்கெல்லாம் பொதுவாகிய காதலின்பத்தை வெறும் உடற்கூற்றுப் பால்வேட்கையாகவோ அல்லது உடலின்பம் தவிர்த்த ஆன்மீகக் காதலுறவாகவோ கூறாமல் இயற்கை நெறியில் இயல்பான பாலுணர்ச்சிக்கு ஒழுக்கம் வகுத்து இன்பம் சார்ந்த பேரன்பாக அதனைப் பாடியிருக்கும் சிறப்பை அகத்திணை இலக்கியத்தில் காணலாம். காதலின் உணர்வுக் கூறுகளை நயத்தக்க நாகரிக மொழிகளால் உணர்த்தியிருப்பதைப் பார்க்கலாம். இவை சங்க இலக்கிய அகப்பாடலுக்கே உரிய தனிச் சிறப்பாகும்.

## 2.7.2 உள்ளுறை உவமமும் குறியீடும்

உள்ளுறை, என்பது உள் + உறை ஆகும். உறை என்பது உறைந்து தங்குதல் என்று பொருள் படும். உள்ளுறை என்பது சொல்லும் பொருளிலிருந்து மற்றொரு பொருள் தோன்றுமாறு சொல்வது ஆகும். மறைவாக நிற்கும் குறிப்புப் பொருள் அகப் பொருள் பற்றிச் செய்யுளில் வரின் அது உள்ளுறை எனப்படும் என்கிறது வாழ்வியல் களஞ்சியம் (1991:339). செய்யுளில் காணப்படும் பொருள் பல திறப்பட்டதாக இருக்கும். அது படிப்போரின் முயற்சிக்கும் அனுபவத்திற்கும் ஏற்ற முறையில் வெளிப்படும்.

ஒரு செய்யுளைப் படிக்கும்பொது ஏதோ ஒரு குறிப்பை உணர்த்தவே செய்யுள் இயற்றப்பட்டிருக்கிறது என்று ஒரு புரிதல் ஏற்பட்டால் அது உள்ளுறை. "உள்ளுறையென்பது தமிழ் இலக்கியத்திற்கே உரிய தனி நெறி. இவ்வுவமம் மிக வரம்பான இலக்கணம் உடையது. அகப்பொருளாம் ஐந்திணைக் கண்ணேதான் ஆளுதற்குரியது. கருப்பொருள் என்னும் இயற்கைச்சூழலினின்று புனையப்படுவது, வெளிப்பார்வைக்கு செடி, கொடி, மரம், பறவை, விலங்குகளின் செயல்களைப் புனைவது போல் காணப்படும். இவற்றை நேரடியாகப் புனைவு செய்வது அகப்புலவர்களின் நோக்கமன்று. உள்ளொன்று வைத்து அதற்கிணையாக கட்புலனாகும் பிறிதொன்றைக் கூறுவர். கூறினும் அகத்தொடர்பான உட்கருத்து மெய்யுள் உயிர் போல விளங்கி நிற்கும். காதல் மாந்தர்கள் தம் குறிப்பினை அமைப்பதற்கு நம் முன்னோர் கண்டெடுத்த இனிய நேரிய, நாகரீக வழியே உள்ளுறை உவமம்" என்று வ. சுப. மாணிக்கம் விளக்குகிறார் (1962:204). "ஒரு பாடலில் காணப்பெறும் அத்தனை சொற்களுக்கும் இரண்டாவது பொருளைக் காணக்கூடுமாயின் அப்பொருளால் பிறிதொரு புதிய கருத்தும் பிறக்கக்கூடுமாயின் அதனை உள்ளுறை உவமம்" என்று கூறினார் என்கிறார் அ. ச. ஞானசம்பந்தன் (1984:178).

அகத்திணை மாந்தருள் ஒருவர் செயலை மற்றவர் வெளிப்படக் கூற இயலாத அல்லது விரும்பாத சூழ்நிலையில் அதைக் குறிப்பாகச் சொல்வதற்கு அச்சூழலில் அதனை ஒத்த செயல்புரியும் கருப்பொருள் ஒன்றைத் தேர்ந்தெடுப்பர். அதன் செயலைக் கூறுவது போல் குறிப்பாக அம்மாந்தர்தம் செயலைச் சுட்டிப் பொருளை உணர்த்துவர். இதனைப் புனையும் கவிஞன் தான் சுட்டும் கருத்துக்கு ஒத்த வகையில் இதன்

பொருள் அமையட்டும் என்று கொண்டு கருப்பொருள் வருணனையில் தான் கருதியதை உட்பொதிந்து பாடுகிறான்.

*உள்ளுறுத்து இதனொடு ஒத்துப்பொருள் முடிகென*
*உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்*

தொல்:அகத்: 51

என்று தொல்காப்பியர் இதனை உரைத்தார்.

இதிலிருந்து கவிஞன் ஒரு கருத்தைக் கவிதையில் மறைத்துக் கூற முன்னரே திட்டமிட்டு அமைப்பான் என்பதும், அதனைப் படிப்பவர் கண்டுபிடித்து சுவைக்கும் வகையில் தேவையான சொற்கள் சிலவற்றை இட்டுக் கூறுவான் என்பதும் பெறப்படும்.

இதில் அக மாந்தருக்கும் அவரைக் குறிப்பால் சுட்டும் கருப்பொருளுக்கும் இடையே தோன்றும் உறவு ஒப்புமை (association of similarity) அடிப்படையில் அமைவது. உவமேயமான அக மாந்தரை மறைத்து உள்ளுறுத்தியதால் உள்ளுறை உவமம் என்று பெயர் பெற்றதெனலாம். உள்ளுறையை விளக்கும் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் “இயற்கை வருணனையில் வரும் தொடர் உருவகமும் குறியீடுதான். ஆனால் இந்தக் குறியீடு குறிக் கணக்கியலில் (அல்ஜீப்ரா) வரும் வாய்ப்பாடு போன்றது. குறியீடுகளை விலக்கி எண்களைப் பெய்து உண்மை காண்பது போல், இயற்கைக் காட்சிகள் உருவகப்பாங்கிலுள்ள குறியீடுகளை உலகியல் மாந்தரின் இயல்புகளையும் செயல்களையும் பெய்து கவிஞரின் இதய உண்மையினைக் காணவேண்டும். குறிக்கணக்கியலில் உள்ள எந்த ஒரு குறியீடும் பயனற்றதாக இருப்பதில்லை. அதேபோலத்தான் பாடலில்

உள்ள ஒவ்வொரு கருப்பொருள்களுக்கும் உவமேயப்பொருள் கூறுதல் வேண்டும்" என்கிறார் மா.ரா.போ. குருசாமி (1980:121-123). கருப்பொருள் ஒவ்வொன்றையும் a, b, c என்று கொண்டு உவமேயப் பொருளைக் காணும் சான்று ஒன்றை இங்கே காணலாம்.

*சேற்றுநிலை முனைஇய செங்கட் காரா*
*னூர்மடி கங்குலின் நோன்தளை பரிந்து*
*கூர்முள் வேலி கோட்டி னீக்கி*
*நீர்முதிர் பழனத்து மீனுடன் இரிய*
*வந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை*
*வண்டூது பனிமலர் ஆரும் ஊர*

அகம்: 46:1-6

என்ற இப்பாடல, தோழி, தலைமகனின் பரத்தமை ஒழுக்கத்தை உள்ளுறைப் பொருளாகக் கூறிக் கடிவதாக அமைக்கப்பட்டுள்ளது.

சேற்றிலேயே நிற்பதை வெறுத்த சிவந்த கண்களையுடைய கரிய எருமை, ஊராரனைவரும் உறங்கும் இருளில் தன் வலிய தளையை அறுத்துக் கொண்டு புறப்பட்டது. பிறகு அது தன் கொம்பினால் கூரிய முள்வேலியை அகற்றிவிட்டு நீர் மிக்க வயலில் மீன்கள் எல்லாம் ஓட அழகிய உள்துறையுடைய வள்ளைக் கொடியை மயங்கச் செய்து வண்டூதும் தாமரைப் பனிமலரை மிகுதியாகத் தின்னும் ஊரனே என்பது இதன் பொருள் ஆகும். இதில் வரும் எருமை, தளை, (கயிறு) பழனம், வேலி, கோடு, மீன்கள், தாமரை ஆகியவற்றை முறையெ a, b, c, d, e, f, g, எனக்கொண்டால்

a - எருமை - தலைவன்

b - தளை (கயிறு) - நாணம்

c - பழனம் - பரத்தையர் சேரி

d - வேலி - விறலி

e - கோடு - பாணன்

f - மீன்கள் - பரத்தையின் தோழிகளும், தாயும்

g - தாமரை - பரத்தை

என்று பொருத்திப் பார்த்து உள்ளுறையில் கூறப்பட்ட கருப்பொருள்கள் குறியீடாக விளங்குவதை அறியலாம்.

குறியீடு எப்போதும் தன்னாற் சுட்டப்படும் பொருளைக் குறிப்பாகச் சுட்டுவதோடு அமையாது அதனோடு நெருங்கிய உறவு பூண்டு ஒன்றி விடுவது உள்ளுறை உவமமாகும். கருப்பொருளும் அது போலவே பாடலின் பொருளோடு ஒன்றிப் பாடலின் சூழலில் உள்ள மற்ற பொருள்களோடும் தொடர்பு கொண்டு அவற்றையும் தொடர் உருவகம் போலக் குறியீட்டுப் பணி செய்வித்து முழு பாடலுக்கும் குறியீட்டுப் பண்பைத் தந்து ஒன்றி விடுகிறது. "மானிட வாழ்க்கையின் குறியீடுகளாகவும் அவ்வாழ்க்கை இயல்நெறி உண்மைகளின் குறிப்புகளாகவுமே சங்க இலக்கியச் சான்றோர் இயற்கையைப் பாடினர்" என்பார் மா.ரா.போ. குருசாமி (1980:118).

மீனாட்சி சுந்தரனாரும் உள்ளுறை உவமத்தைக் குறியீடு என்று குறிப்பிடுவது மேலே சுட்டப்பட்டது. இவையனைத்தாலும் பண்டைத் தமிழ்ச் சான்றோர் குறிப்பாகப் பொருளுணர்த்த உள்ளுறை உவமத்தை அகப் பாடல்களில் குறியீடாகப் பயன்படுத்தினர் என்பது தெளிவாகப் புலப்படும்.

### 2.7.3 இறைச்சியும் குறியீடும்

இறைச்சி என்பது கவிதையின் உட்பொருள் ஆகும். இறை + சி = இறை - தங்குதல், சி - தொழிற் பெயர் விகுதி. இதன்கண் வேறு குறிப்புப் பொருள் தோன்றின் அது இறைச்சியாற் பிறக்கும் பொருள் எனப்படும். "இறைச்சி என்னும் சொல்லின் பொருள் அகத்திணை மாந்தர் பேசும் சொற்களுள் திணை விளக்கத்திற்குரிய பொருள் தங்கியிருத்தல் என்பதாம்" என்று வாழ்வியல் களஞ்சியம் விளக்கம் தருகிறது (1987:502).

தமிழண்ணல், இறைச்சி என்ற சொற்பொருள் விளக்கமுறின் இறைச்சிக் கோட்பாடு புலனாகிவிடும் எனக் கூறுகிறார் (2003:78). எனவே இறைச்சி என்ற சொல்லாராய்ச்சி இறைச்சி என்ற கோட்பாட்டைப் புரிந்து கொள்ளத் துணைபுரியும். "இறைச்சி என்னும் சொல்லுக்குக் கருப்பொருள் என்ற பொருள் உண்டு. இப்பொருள் கொள்வது மட்டுமே போதும் இறைச்சி எனக் குறிப்புப் பொருள் கொள்ளும் நெறியாக ஒன்றைக் கருத வேண்டுவதில்லை என ஒளவை துரைசாமிப்பிள்ளை கருதுகின்றார். ஆயின் தொல்காப்பிய நூற்பாக்கள் அவற்றின் உரைகள் சங்கப் பாடல்களின் உரைகள் ஆகியவற்றை நோக்கும்போது அவருடைய கருத்து ஏற்குமாறில்லை என்கிறார்" மா.ரா.போ. குருசாமி (1980:128).

"இறைச்சி என்ற சொல்லின் வேர்ச்சொல் 'இறு' என்ற சொல்லின் பொருளாகத் தமிழ்ச்சொல் அகரமுதலி abiding, halting, tarrying ஆகிய பொருள்களைத் தருகிறது. இச்சொற்களுக்கு முறையே நிலைத்திருக்கிற, தங்குகிற, நிற்கிற என்ற பொருள்கள் உள்ளன. எனவே, இறு என்ற

வேர்ச்சொல் தங்கு என்ற பொருளை உடையது. Meat என்ற ஆங்கிலச் சொல்லின் வேர்ச்சொல்லான med என்பது to be fat தசையுடையதாக இருப்பது என்று முதற் பொருள் கொள்ளப்படுவது போல, இறு என்ற தமிழ் வேர்ச்சொல்லுக்குத் தசை தங்குவது என்று பொருள் கொள்வது பொருந்தும். இக்கருத்துகளைத் தொகுத்தால் இறைச்சி என்ற சொல்லுக்குத் தசை, மாமிசம், கருப்பொருள், இறைச்சிக் கோட்பாடு, பிரியமானது என்று ஐந்து பொருள்கள் உள்ளன" என்கிறார் க. முத்துசாமி (2006:111-112).

உள்ளுறை உவமம் என்ற பெயரும் ஒத்துப்பொருள் முடிகென உள்ளுறுத்து உரைப்பது என்ற நூற்பாவும் உள்ளுறை உவமத்தின் உவமத்தன்மையைத் தெளிவாக வற்புறுத்துகின்றன. உள்ளுறை உவமத்திற்கு உவமத்தன்மை உண்டு. இறைச்சிக்கு அஃது இல்லை. எனவே, குறிப்பாகப் பொருள் தருவதில் உள்ளுறை உவமமும் இறைச்சியும் கருப்பொருள்களையே பயன்படுத்தினாலும் உள்ளுறை உவமம் அவற்றை உவமங்களாகப் பயன்படுத்துகிறது. இறைச்சி அவற்றை அவ்வாறு பயன்படுத்துவதில்லை. உள்ளுறை உவமத்தில் கூறக் கருதிய பொருள் வெளிப்படக் கூறப்பட்டிராது உவமேயமாக வைத்துக்கொண்டு உவமையால் குறிப்பாக உணர்த்தப்படும். இறைச்சியில் வெளியே தோன்றும் பொருளானது உவமேயமாகப் பெறப்படமுடியாது என்று அப்துல் ரகுமான் விளக்குகிறார் (2006:43).

இறைத்தல் என்றால் பரப்புதல், சிதறுதல் என்றும் பொருளுண்டு. இறை என்பதற்கு சிதறுதல், அலங்கோலமாக அல்லது தாறுமாறாக விழுதல் என்று க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி பொருள் தருகிறது (ப:177). பாடலில்

கருப்பொருள் மீது குறிப்பிட்ட ஓரிடத்தில் குறிப்புப் பொருளாற்றலைக் குவித்து வைக்காமல் பாடல் முழுவதற்குமாகப் பரப்பப்பட்டது. அதாவது பாடல் முழுவதும் குறிப்புப்பொருள் தொனிக்குமாறு இயற்றப்பட்டது என்றும் பொருள் கொள்ள இடமுண்டு.

**2.7.3.1 தொல்காப்பியத்தில் இறைச்சி**

*இறைச்சி தானே உரிப்புறத் ததுவே*

தொல்:பொருளி: 32

எனக் கூறும் இளம்பூரணர் இறைச்சிப் பொருளென்பது உரிப்பொருளின் புறத்ததாகித் தோன்றும் பொருள் என்று கூறுகிறார்.

இதனை, நச்சினார்க்கினியர் "இறைச்சிதானே பொருட்புறத்ததுவே" பாடலின் நேர்பொருளுக்குப் புறத்தே தொனிக்கும் குறிப்புப் பொருள் இறைச்சி என்கிறார்.

*இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா றுளவே*
*திறத்தியல் மருங்கின் தெரியுமோர்க்கே*

தொல்:பொருளி: 33

இறைச்சியில் மற்றொரு குறிப்புப் பொருளும் தோன்றும். அது ஆராய்ந்துணரும் அறிவுடையோர்க்கே புலப்படும் என்பது இந்நூற்பாவின் பொருளாகும்.

இதனை நச்சினார்க்கினியர் "உள்ளுறை உவமத்திற்கும் இறைச்சிக்கும் வேறுபாடுணர்த்தும் நூற்பாவாகக் கொண்டுள்ளார். பிறிதொரு

பொருளுக்கு உபகாரப்படுவது உள்ளுறையுவமம்; கருப்பொருள் தன்னுள்ளே தோன்றும் பொருள் முழுவதும் ஒத்து முடிவது முன்னது, அங்ஙனம் முற்ற உணர்த்தாது வேறோர் பொருளைக் குறிப்பாய் தோற்றுவிப்பது பின்னது" என்று விளக்குகிறார் (1986:28-29). பாடலின் பொருளுக்குப் புறத்தே மறு எதிரொலியாகக் குறிப்புப் பொருள் வருவது இறைச்சி என்பது தமிழண்ணலின் கருத்தாகும்.

### 2.7.3.2 இறைச்சி குறியீடாதல்

இறைச்சி என்பது பாடலின் பொருள் முழுக்க உணர்த்தப்பட்ட பின்னால், அப்பாடற் பொருள் கூறப்பட்ட முறையாலும் சூழலாலும் ஒரு குறிப்புப் பொருள் பிறக்கிறது. அதுவே இறைச்சியாகும். கூறப்பட்ட முழுப்பாடலுமே ஒரு குறிப்புப் பொருளைக் கொண்டு அமைவதால் இறைச்சியில் முழுக் கவிதையுமே குறியீடாக நிற்கிறது எனலாம்.

"உள்ளுறை உவமத்தில் கருப்பொருட்கள் ஒப்புறவுக் குறியீடுகளாகச் செயல்படுகின்றன. இறைச்சியிலோ முழுக் கவிதையே குறியீடாக நிற்கிறது. குறியீட்டுப் பார்வையில் இவையிரண்டையும் வேறுபடுத்தலாம்" என்று உள்ளுறை உவமத்திற்கும் இறைச்சிக்கும் குறியீட்டு இலக்கணம் வகுக்கிறார் அப்துல் ரகுமான் (2006:44).

குறியீடு என்பது ஒன்றுக்கு மாற்றாக நிற்கும் மற்றொன்று மட்டுமல்ல பருப்பொருளின் துணையில் நுண்ணிய கருத்துகளையும், உணர்வுகளையும் வெளிப்படுத்துவது ஆகும் என்ற சாட்விக் என்பாரின் கருத்தைக் கொண்டும்

இறைச்சிப்பொருள் குறியீடே என்று கொள்ளலாம். இதனை ஒரு பாடலைச் சான்றாகக் கொண்டு தெளியலாம்.

*நீர்நிறங் கரப்ப வூழுறு புதிர்ந்து*
*பூமலர் கஞலிய கடுவரற் காண்யாற்றுக்*
*குராஅந் துஞ்சுங் கல்லுயர் மறிசுழி*
*மராஅ யானை மதந்தப வொற்றி*
*யுராஅ வீர்க்கு முட்குவரு நீத்தங்*
*கடுங்கட் பன்றியி னடுங்காது துறந்து*
*நாம வருந்துறைப் பேர்தந் தியாமத்*
*தீங்கும் வருபவோ வோங்கல் வெற்ப*
*வொருநாள் விழும முறினும் வழிநாள்*
*வாழ்குவ ளல்லளென் தோழி யாவது*
*மூறில் வழிகளும் பயில வழங்குநர்*
*நீடின் றாக விழுங்குவ ரதனா*
*லுலமரல் வருத்த முறுதுமெம் படப்பைக்*
*கொடுந்தே னிழைத்த கோடுயர் நெடுவரைப்*
*பழந்தூங்கு நளிப்பிற் காந்தளம் பொதும்பிற்*
*பகனீ வரினும் புணர்குவை யகன்மலை*
*வாங்கமைக் கண்ணிடை கடுப்பயா*
*யோம்பின ளெடுத்த தடமென் றோளே*

அகம்: 18:18

என்ற கபிலரின் அகநானூற்றுப் பாடலில், தலைவன் களவின்பமே பெரிதும் விரும்பி வரைதற் கருத்தின்றி இரவுக்குறி வருவானை இரவில் வருவதால் உண்டாகும் ஏதம் கூறி அதனை மறுத்து பகற்குறிக்கண் வரக்கூறி அதற்கும் இடையூறுண்டென்பதனைக் குறிப்பாக உணர்த்தி வரைவு கடாவுகிறாள் தோழி. தலைவன் வரும் வழியில் உள்ள காட்டாறு பெருவெள்ளத்தை உடையதாக இருக்கிறது. இது மதம் மீறி நிற்கும் களிற்றியானையையே

சாய்க்க வல்ல வலிமையுடையதாக இருக்கிறது. இத்தகைய கொடிய வழியில் வரவும் வேண்டுமோ. ஆகையால் இரவில் வருவதை நிறுத்தி தலைவியின் வீட்டுத் தோட்டத்தை அடுத்துள்ள மலையில் காந்தள் புதரிடத்து வந்தால் ஒருவித இடையூறுமின்றி சந்திக்கலாம் என்று அவள் கூறுகிறாள். தோழி கூறிய குறியிடத்தில் பழங்கள் அதிமாக பழுத்துத் தொங்குவதாலும், தேன்கூடுகள் வட்ட வட்டமாக காணப்படுவதாலும் பூக்கள் நிறையப் பூத்திருப்பதாலும் அங்கு பழம் எடுக்க வருவாரும், தேன் எடுக்க வருவாரும், பூப்பறித்தற்கு வருவாரும் பலராதலால் பகலிலும் வாராது வரைந்துகொள் என்பது தான் இதில் கூறப்படும் இறைச்சிப் பொருளாகும்.

இ∴து உள்ளுறை உள்ள பாடல்களிலும் வரலாம். எனவே கருப்பொருட் குறியீட்டைக் கண்டு, கணக்கிட்டு உள்ளுறைப் பொருள் கொண்டு முடித்தபின் பாடலின் முழுமை விளைவிக்கும், மேலும் ஒரு குறிப்புப் பொருளே இறைச்சி எனத்தெளியலாம். “உள்ளுறுத்து இதனொடு ஒத்து பொருள் முடிகென” உரைக்கும் தொல்காப்பியர் ‘இறைச்சிதானே பொருட்புறத்ததுவே’ என வகுப்பதும் இதனால் தான் என்பதை அறியலாம். அகப்பாடல் உணர்த்தும் நோக்கம் கொண்டது என்பதால் பெரும்பான்மைப் பாடல்களிலும் இத்தொனிப் பொருளாகிய இறைச்சி உள்ளது என்பதும் திறத்தியல் மருங்கின் தெரியுமோர்க்கே என்பதனால் பாடலின் பொருள் நலம் முழுவதும் உணரக்கிட்டும் என்பதுமே தமிழ் நூலார் கொள்கை எனத் தெளியலாம். இங்கு பாடற்பகுதி முழுக்கவே ஒரு குறியீடாக மாறி இக்குறிப்புப் பொருளைத் தருகிறது. இது அந்தச் சூழலால் நிகழ்வதாகலின் ஒட்டுறவால் இக்குறியீட்டுத் தன்மையை ஏற்கிறது.

## 2.8 முடிவுரை

சங்க இலக்கியம் அகம், புறம் என்ற இரு பிரிவுகள் கொண்டுள்ளது. இவ்வகப்புற ஒழுக்கங்கள் பற்றி தொல்காப்பிய உரையாசிரியர்கள் மூலமாகவும் அறிஞர்களின் கருத்துக்கள் மூலமாகவும் விளக்கப்பட்டுள்ளது. அக ஒழுக்கம் உள்ளம் சார்ந்து ஆண், பெண் விருப்பத்தால் இணைந்த வாழ்க்கையை உண்டாக்குவது என்பதையும் புற ஒழுக்கம் அவ்வாறு உண்டாக்கப்பெற்ற அகவொழுக்கத்திற்குத் துணையாக நிற்பது என்பதும் பெறப்படுகிறது.

அக ஒழுக்கத்தில் மாந்தர்களின் இயல்புகளான காதல் உணர்வு, காதல் இன்பம், அவற்றின் ஆற்றல் ஆகியவற்றின் பண்புகளை அறியமுடிகின்றன. அக மாந்தர் உணர்வுகளின் பின்புலங்கள் வாயிலாகக் காதலின் மொழி குறிப்பாகக் கூறுவது என்பது பெறப்படுகிறது.

பழங்கால மக்களின் வாழ்க்கை இயற்கையோடு இயைந்த வாழ்க்கையாக இருந்திருக்கின்றது. அவர்களின் உள்ளத்துணர்வுகளைப் புலவர்கள் இயற்கையின் மீது ஏற்றிக் கூறி இருக்கின்றனர் என்பதை அறிய முடிகின்றது. அவ்வாறு இயற்கை மீது ஏற்றிக் கூறிய முறை சிறந்த குறியீட்டு முறையாக அமைந்திருப்பதை அறிந்து கொள்ளமுடிகின்றது.

இக்குறியீட்டு உத்திக்கு உள்ளுறை, இறைச்சி என்ற இரு கோட்பாடுகள் உதவியிருக்கின்றன என்பதும் சான்றுகள் மூலம் தெளியப்பெறுகின்றன.

# 3. திணைசார் குறியீட்டாட்சி

முன்னுரை

3.1. திணை

3.2 திணைக் குறிப்பு

3.3 திணைப்பாகுபாடு

3.3.1 ஐந்திணை

3.3.2 கைக்கிளை

3.3.3 பெருந்திணை

3.4 அகப்புறத்திணைகள்

3.5 திணை மயக்கம்

3.6 திணைப் பெயரும் குறியீடும்

3.6.1 திணைப்பெயர்க் காரணம்

3.6.2 பூவினால் வந்த பெயர்

3.7 உரிப்பொருளும் குறியீடும்

3.8 கருப்பொருளும் குறியீடும்

3.9 முடிவுரை

# 3. திணைசார் குறியீட்டாட்சி

## முன்னுரை

அகத்திணையின் இன்றியமையாமையையும், சிறப்பையும் புலப்படுத்தவே தொல்காப்பியர் அக இலக்கணம் கண்டார். தொல்காப்பியம் காட்டும் எழுதிணைகள், ஐந்திணைக்குரிய முதல், கரு, உரிபொருட்கள், அகத்திணைக்குப் புறனான புறத்திணைகள், திணைமயக்கம் பற்றிய கோட்பாடுகள் ஆகியன இவ்வியலில் விளக்கப்படுகின்றன. திணைப்பெயர் குறியீடாக அமையும் விதத்தையும் உரிப்பொருள் குறியீடாதலையும் இயற்கைப் புனைவில் கருப்பொருள் எவ்வாறு குறியீடாகிறது என்பதையும் விளக்குவதாக உள்ளது இவ்வியல்.

### 3.1. திணை

தொல்காப்பியம் காட்டும் திணைக்கோட்பாடு அகத்திணை ஏழொடு புறத்திணை ஏழையும் சார்த்தி இலக்கணம் கூறுகிறது. அகப்பாடல்களின் தொகுப்பு நூல்கள் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகிய ஐந்துமாகும். இவற்றில் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகிய மூன்றும் அடியளவு வேறுபாடு கருதி வெவ்வேறாகத் தொகுக்கப்பட்டுள்ளன. ஐங்குறுநூறு ஒவ்வொரு திணைக்கும் நூறுபாடல்கள் என்ற ஒழுங்கமைதி கொண்டுள்ளது. கலித்தொகை ஐந்திணைக்கும் 150 பாடல்களை அடக்கிய தொகுப்பாக உள்ளது. நற்றிணை, குறுந்தொகை ஆகிய இரண்டும் திணை, துறை அடிப்படையிலோ அன்றேல் பாடல்களைப் பாடிய புலவர் அடிப்படையிலோ தொகுக்கப்படவில்லை. எனினும் அகநானூற்றுப் பாடல்களின் தொகுப்பிலே திணைநிலையான

ஓரொழுங்குமுறை பேணப்பட்டுள்ளது. 1, 3, 5, 7, 9 எனும் ஒற்றை எண்கள் பாலைத்திணைப் பாடல்களாகவும் 2, 8, 12, 18 எனும் எண்கள் குறிஞ்சித்திணைப் பாடல்களாகவும் 4, 14, 24, 34 எனும் எண்கள் முல்லைத்திணைப் பாடல்களாகவும் 6, 16, 26, 36 எனும் எண்கள் மருதத்திணைப் பாடல்களாகவும் 10, 20, 30, 40 எனும் எண்கள் நெய்தல்திணைப் பாடல்களாகவும் தொகுக்கப்பட்டுள்ளன. குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகிய மூன்று தொகுப்புகளிலும் ஒரு சில வேறுபட்ட தன்மை காணப்படுகின்றது. இதனைக் குறுந்தொகையில் உரிப்பொருளும் நற்றிணையில் உரிப்பொருளும் கருப்பொருளும், அகநானூற்றில் முதல், கரு, உரிப்பொருள்களும் வரும் என்று தெ. பொ. மீனாட்சிசுந்தரம் விளக்குகிறார் (1981:74). அகம், புறம் என்ற பாகுபாட்டிற்குத் திணை என்ற சொல்லையும் சேர்த்துக் கூறுமிடத்து ஒழுக்கம் என்ற பொருளையும் சேர்த்தனர். இதன் மூலம் பாடல்களைப் பாடிய புலவர்களுக்கும் இலக்கண ஆசிரியர்களுக்கும், உரையாசிரியர்களுக்கும் இடையே திணை பற்றிய வேறுபட்ட கருதுகோள்கள் தோன்ற இடமுண்டாயிற்று.

செய்யுளுறுப்புக்களைத் தொகுத்துக் கூறும் தொல்காப்பியம் திணையை அவற்றுள் ஒன்றாகச் சுட்டுகிறது. திணை என்ற சொல்லை அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாகக் கூறுகிறது.

*அவற்றுள்*
*நடுவ ணைந்திணை நடுவண தொழியப்*
*படுதிரை வையம் பாத்திய பண்பே*

தொல்:அகத்: 2

என்ற நூற்பா எழுதிணையுள் நிலம் பெறுவன இவை என்று கூறுகின்றது. கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணை என்ற ஏழனுள் முதலில் உள்ள கைக்கிளைக்கும் இறுதியில் உள்ள பெருந்திணைக்கும் நடுவில் உள்ளவை முல்லை முதலான ஐந்திணைகள் ஆகும். நடுவண் ஐந்திணை என்பதற்குப் புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்று கூறாமல் முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என பெயர்கள் கூறவேண்டுவது ஏன் என்பதற்குப் பொருளதிகார உரையாசிரியர் இளம்பூரணர், புறத்திணையியலில் ஆநிரைக் கோடல் முதலானவற்றை வெட்சி முதலான பெயர்களாற் கூறுகின்றார் தொல்காப்பியர். அதுபோலவே அகத்திணையியலிலும் புணர்தல் முதலானவற்றை குறிஞ்சி முதலான பெயர்களால் கூறுகின்றார் என்கிறார். உரிப்பொருளே திணை என்றால் ஏனைய முதற்பொருளும் கருப்பொருளும் திணையாகாது என்றாகிவிடும். ஆகையால் குறிஞ்சி முதலான பெயர்களை இட்டுக்கூறினார் என்கிறார் (அகத்: 2). எனவே, தொல்காப்பியர் அகத்தொடு புறத்தைச் சார்த்திக் கூறும் தனது இலக்கணக் கோட்பாட்டைத் தெளிவுபடுத்தவும் அன்பின் ஐந்திணையுள் காணப்படும் முதல், கரு, உரி ஆகிய மூன்றையும் உள்ளடக்கிக் காட்டும் வகையிலும் பயன்படுத்தியுள்ளார் என்பது புலனாகும்.

## 3.2 திணைக் குறிப்பு

தொல்காப்பியம் கூறும் திணை பற்றிய நூற்பாக்களைக் கொண்டு திணை என்ற சொல் தரும் பொருளை ஆராய்வது இங்கு அவசியமாகிறது. திணையைக் குறிப்பிடுவனவாகக் கீழ்க்கண்ட நூற்பாக்கள் அமைகின்றன.

திணை என்ற சொல் ஒழுக்கம் என்ற பொருளில் வரும் நூற்பாக்கள் வருமாறு.

*கைக்கிளை முதலாப் பெருந்**திணை** இறுவாய்*
*முற்படக் கிளந்த வெழு**திணை** யென்ப*

அகத்: 1

கைக்கிளை எனப்பட்ட ஒழுக்கம் முதலாகப் பெருந்திணையென்னும் ஒழுக்கத்தினை இறுதியாகவுடைய ஏழனையும் முற்கூறப்பட்ட அகத்திணை ஏழென்று கூறுவர்.

*எத்**திணை** மருங்கினும் மகடூஉ மடன்மேல்*
*பொற்புடை நெறிமை இன்மை யான*

அகத்: 38

இது கைக்கிளை பெருந்திணைக்குரிய இயல்பு உணர்த்துதல் ஆகும்.

*உள்ளுறை உவமம் ஏனை உவமம் எனத்*
*தள்ளாது ஆகுந் **திணை**யுணர் வகையே*

அகத்: 49

கருப்பொருள் தானே உவமமாய் நின்று உள்ளுறைந்திருக்கும் உரிப்பொருளை உணர்த்துவதாகும்.

*ஏறிய மடற்றிறம் இளமை தீர்திறம்*
*தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்*
*மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்*
*செப்பிய நான்கும் பெருந்**திணைக்** குறிப்பே*

அகத்: 54

இது பெருந்திணையின் இலக்கணம் கூறியது.

*மக்கள் நுதலிய அகனைந் **திணையும்***
*சுட்டியொ ருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்*
அகத்: 57

அகத்திணையுள் கைக்கிளை, பெருந்திணை ஒழிந்த ஐந்திற்கும் உரியவாகிய நிலமும் காலமும் கருப்பொருளுமின்றி மக்களைப் பற்றி வரும் புணர்தலும் பிரிதலும் இருத்தலும் இரங்கலும் ஊடலும் என்று சொல்லப்பட்ட ஐந்து பொருண்மையும் சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறார்.

*புறத்**திணை** மருங்கின் பொருந்தின் அல்லது*
*அகத்**திணை** மருங்கின் அளவுதல் இலவே*
அகத்: 58

புறத்திணையில் பெயர் சுட்டப்பெறும், அகத்திணையில் பெயர் சுட்டப் பெறாது.

*அகத்**திணை** மருங்கின் அரில்தப உணர்ந்தோர்*
*புறத்**திணை** இலக்கணம் திறப்பட கிளப்பின்*
*வெட்சி தானே குறிஞ்சியது புறனே*
*உட்குவரத் தோன்றும் ஈரேழ் துறைத்தே*
புறத்: 59

அகத்திணை யென்னும் பொருளை பிணக்கற அறிந்தோர் கூறிய புறத்திணையது இலக்கணத்தைக் கூறுபட ஆராய்ந்து கூறின் வெட்சியெனப்பட்ட புறத்திணை குறிஞ்சி யெனப்பட்ட அகத்திணைக்குப் புறனாம்.

*மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த*
*கொற்றவை நிலையும் அத்**திணைப்** புறனே*
புறத்: 62

மறத்தொழில் முடித்தலையுடைய குடியினது நிலைமையைக் கூறலும், சிறந்த கொற்றவையது நிலைமையைக் கூறலும் புறத்திணைக்குப் புறனாகிய வெட்சித் திணையாகும்.

*இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு*
*அன்பொடு புணர்ந்த ஐந்**திணை** மருங்கின்*
*காமக்கூட்டங் காணுங் காலை*
*மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்*
*துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே*

களவி: 89

இச்சூத்திரங் களவெனப்பட்ட ஒழுக்கம் உலகத்துப் பொருள் பலவற்றுள்ளும் இன்பம் பற்றித் தோன்றுமெனவும் அ∴து இன்னதாம் எனவுங் கூறுகின்றது.

*பின்னர் நான்கும் பெருந்**திணை** பெறுமே*

களவி: 103

எண்வகை மணத்தினுள் ஏழனை எழுதிணையுள் இன்ன திணைப் பாற்படும் என்கின்றது. அசுரம், இராக்கதம், பைசாசம், மூன்றும் கைக்கிளையெனச் சுட்டப்படும். பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம் என்னும் நான்கும் பெருந்திணை பெறுமெனவும் கூறப்படும்.

திணை என்ற சொல் நிலம் என்ற பொருளில் வரும் நூற்பாக்கள் வருமாறு

*அவற்றுள்*
*நடுவ ணைந்**திணை** நடுவன தொழியப்*
*படுதிரை வையம் பாத்தியப் பண்பே*

அகத்: 2

முற்கூறிய ஏழனுள் தமக்கு நிலம் பெருவனவும் நிலம் பெறாதனவும் கூறுகின்றது இந்நூற்பா.

*திணைமயக் குறுதலும் கடிநிலை யிலவே*
*நிலனொருங்கு மயங்குதல் இல்லென மொழிப*
*புலனன் குணர்ந்த புலமை யோரே*

அகத்: 14

ஒரு நிலத்தின்கண் இரண்டு உரிப்பொருள் மயங்கி வரும் என்பதும் நிலன் இரண்டு மயங்காதெனவே காலம் இரண்டும் தம்முள் மயங்கும் என்பதும் கூறினராயிற்று.

*புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்*
*ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை*
*தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே*

அகத்: 16

குறிஞ்சிக்குப் புணர்ச்சியும் பாலைக்குப் பிரிவும் முல்லைக்கு இருத்தலும் நெய்தற்கு இரங்கலும் மருதத்திற்கு ஊடலும் அவ்வந்நிமித்தங்களும் உரித்தாகும்.

*ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்*
*ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே*

அகத்: 23

ஆயர் வேட்டுவரென்னும் இரண்டு பெயரே எடுத்தோதினாரேனும் ஒன்றெனமுடித்தலான் அந்நிலங்கட்கு உரிய ஏனைப் பெயர்களான் வருவனவும் கொள்க.

*ஏனோரா் மருங்கினும் எண்ணுங் காலை*
*ஆனா வகைய **திணை**நிலைப் பெயரே*

அகத்: 24

என்றது திணைதோறும் குலப்பெயரும், தொழிற்பெயரும் கிழவர் பெயரும் வரும் என்பதாகும்.

### 3.3 திணைப்பாகுபாடு

அகப்பொருள் பற்றிய இன்ப ஒழுக்கங்கள் தொல்காப்பியத்தில் மூன்று வகையாகப் வகுக்கப்படுகின்றன. அவை கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என்பனவாகும். கைக்கிளை என்பது பெருமையில்லாத தலைமக்கள் உறவு ஆகும். இதனை இளம்பூரணர் கை - சிறுமை; கிளை - உறவு; சிறுமைப் பற்றிய உறவு அதாவது ஒரு மருங்கு பற்றிய கேண்மை. இ∴து ஒருதலைக் காமம் ஆகும் என்பர். ஐந்திணை என்பது தலைவன் தலைவியரின் ஒத்த காமத்தைப் பாடுவதாகும். இது ஐந்து பிரிவினையுடையதாதலின் ஐந்திணை எனப்பட்டது. அவை முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்பனவாகும். பெருந்திணை என்பது பொருந்தாக் காமம் ஆகும்.

*கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்*
*முற்படக் கிளந்த வெழுதிணை என்ப*

அகத்: 1

என்ற இந்நூற்பா கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணை என்ற திணை ஏழினைக் குறிக்கின்றது.

## 3.3.1 ஐந்திணை

### 3.3.1.1 முதற் பொருள்

பண்டைய சமுதாய வளர்ச்சியில் திணைப்பாகுபாடு முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாக விளங்கியது. இடமும் காலமும் உலக நிகழ்ச்சிகளுக்கு இன்றியமையாதன என உணர்ந்த தொல்காப்பியர் இவ்விரண்டினையும் முதற்பொருள் என்றார். இவ்விரண்டில் நிலம் பற்றி தொல்காப்பியர் கூறுவதாக

*மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்*
*சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே*

அகத்: 5

என்ற நூற்பா அமைகிறது. இந்நூற்பாவில் முறையே முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற நால்வகை நிலத்தைக் குறிப்பிடுகிறார். பாலைக்குத் தனி நிலப்பரப்பு இல்லை. மழை பொய்த்து வேனில் தோன்றிய காலத்து குறிஞ்சியிலும் முல்லையும் வெயில் மிகுந்து பாலைவனம் போன்று தோன்றும். அதுவே அன்றி அதற்கெனத் தனி நிலம் இல்லை. இதனை இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில்

*'முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து*
*நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப்*
*பாலை என்பதோர் படிவம் கொள்ளும்'*

சிலப்:காடு: 64-65

என்ற அடிகளால் விளக்குவார். மலையும் மலைசார்ந்த பகுதியும் குறிஞ்சி எனவும் காடும் காடுசார்ந்த இடம் முல்லை எனவும் வயலும் வயல் சார்ந்த இடமும் மருதம் எனவும் கடலும் கடலைச்சார்ந்த இடமும் நெய்தல் எனவும், முல்லையும் குறிஞ்சியும் திரிந்த இடம் பாலை எனவும் குறிக்கப்பட்டன.

முதற்பொருளின் மற்றொரு பகுதியாகிய காலமானது பெரும்பொழுது, சிறுபொழுது என்று இரு கூறாகப் பகுத்துப் பேசப்படுகிறது. பெரும்பொழுது என்பது ஆறு பிரிவாகக் கூறிட்ட பகுதிகளாகும். அவை கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பவை. கார் என்பது மழைபெய்யும் காலமான ஆவணித்திங்களும், புரட்டாசித் திங்களும் ஆகும். கூதிர்க்காலம் என்பது குளிர் காலம். இ∴து ஐப்பசித் திங்களும் கார்த்திகைத் திங்களும் ஆகும். முன்பனிக்காலம் என்பது மாசித் திங்களும் பங்குனித்திங்களும் ஆகும். இளவேனில் என்பது சித்திரையையும் வைகாசியையும் சேர்ந்த காலப்பகுதி ஆகும். ஆனியும் ஆடியும் சேர்ந்த காலப்பகுதி முதுவேனில் ஆகும். சிறுபொழுது என்பது ஒரு நாளினை ஆறு கூறிட்ட பகுதிகள் ஆகும். வைகறை, விடியல், எற்பாடு, நண்பகல், மாலை, யாமம் என்று குறிப்பிடுகிறார். இவற்றை தொல்காப்பியர்,

| | | |
|---|---|---|
| வைகறை | - | இராப்பொழுதின் பின்கூறு |
| விடியல் | - | பகற்பொழுதின் முற்கூறு |
| நண்பகல் | - | பகற் பொழுதின் நடுக்கூறு |
| எற்பாடு | - | பகற் பொழுதின் பின்கூறு |
| மாலை | - | இராப் பொழுதின் முற்கூறு |
| யாமம் | - | இராப் பொழுதின் நடுக்கூறு |

எனக்குறிப்பிடுகிறார். ஒவ்வொரு கூறும் பத்து பத்து நாழிகைக் கொண்டவையாகும். ஒரு நாழிகை என்பது இக்கால கணக்குப்படி இருபத்து

அகத்திணைப் பாடல்களிலே பயின்று வருகின்ற கருப்பொருள்களை இந்நூற்பா வகைப்படுத்திக் காட்டுகின்றது. இது தெய்வம், உணவு, விலங்குகள், மரங்கள், பறவைகள், பறை, தொழில், பண் முதலானவையும் இவைபோல்வன பிறவும் ஆகும். இப்பொருள்கள் "வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு விதமாக இருக்கும். மலைநாட்டில் இருக்கும் கருப் பொருள்கள் வேறு, சமவெளிகளில் காணும் கருப் பொருள்கள் வேறு. மலைப்பகுதி விலங்குகளையும் பறவைகளையும் சாதாரணமாகக் கடலையொட்டிய பகுதிகளில் காண்டல் அரிது. அப்பகுதிகளிலுள்ள மக்கள் அவற்றை வைத்து வளர்க்கலாமேயன்றி இயற்கையில் அவை அங்குக் காணப்பெறாது" (சுப்பு ரெட்டியார், 1998:266). அகப்பாடல்களிலே கருப்பொருள்கள் பாடலின் தனித்துவத்தை அணிசெய்து நிற்கின்றன. இயற்கை நிலையான கருப்பொருள்கள் உரிப்பொருளை உணரவைத்தன. அகப்பாடல்களின் உரிப்பொருளைத் தெளிவாக அறியவைக்க கருப்பொருள்கள் பயன்பாடு இன்றியமையாததாயிற்று எனலாம்.

### 3.3.1.3 உரிப்பொருள்

(மக்களின் ஒழுகலாற்றைக் குறிப்பனவாய்த் திணைக்கு உரிய பொருளாய் இருப்பது உரிப்பொருள் எனப்படும். முன்னர் கூறிய ஐந்திணைக்கும் உரிய ஒழுக்கங்களே உரிப்பொருளாகும். பண்டைத்தமிழர் இவ்வைந்திணைக்கும் ஐந்து வகை ஒழுக்கத்தை வரைமுறை செய்துள்ளனர். அவை, புணர்தலும் புணர்தல் நிமித்தமும் குறிஞ்சியின் உரிப்பொருள், பிரிதலும் பிரிதல் நிமித்தமும் பாலையின் உரிப்பொருள், இருத்தலும் இருத்தல் நிமித்தமும் முல்லையின் உரிப்பொருள், இரங்கலும் இரங்கல்

நிமித்தமும் நெய்தலின் உரிப்பொருள், ஊடலும் ஊடல் நிமித்தமும் மருதத்தின் உரிப்பொருள். இதனைத் தொல்காப்பியம்

*புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்*
*ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை*
*தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே*

தொல்:அகத்: 16

என்ற நூற்பாவால் உணர்த்துகிறது "குறிஞ்சி, காதலரின் கூடலைக் குறித்தது. முல்லை, மணமுடித்த பெண் (தலைவி) இல்லற நிலையிலே இருக்கும் போது தலைவனின் பிரிவினை ஆற்றியிருப்பதைக் குறித்தது. பாலை, தலைவன் தலைவியை விட்டுப் பொருளீட்டல் போன்ற வினைவயிற் பிரிதலாகும். மருதம், ஆணின் பரத்தமை ஒழுக்கங் காரணமாகத் தலைவி ஊடுவதைக் குறித்தது. நெய்தல், கடற்மேற் சென்ற தலைவனின் பிரிவாற்றாது பெண் இரங்கி நிற்றலைக் குறித்தது. இந்த ஐந்து ஒழுக்கங்களும் எல்லா நிலத்து மக்களிடமும் நிகழும் பொது நிகழ்ச்சிகளே எனினும் மலை நாட்டில் புணர்தல் நிகழ்வதாகக் கூறுவது இலக்கிய மரபு. இவ்வாறே பாலை நிலத்தில் பிரிதல் நிகழ்வதாகவும் முல்லையில் இருத்தல் நிகழ்வதாகவும், மருதநிலத்தில் ஊடல் நிகழ்வதாகவும் நெய்தல் நிலத்தில் இரங்கல் நிகழ்வதாகவும் இலக்கணம் வகுக்கப்பெற்றுள்ளது" (சுப்பு ரெட்டியார், 1998:267). மக்களிடையே அகவொழுக்க நிலைகளை ஐந்தாக வகுத்துப் பாடல் செய்கின்ற புலனெறி வழக்கம் சங்கப் பாடல்களின் சிறப்புப் பண்பாயிற்று.

### 3.3.2 கைக்கிளை

பெருமையில்லாத தலைமக்களின் ஒருமருங்கு பற்றிய உறவு கைக்கிளையாகும். இதனைக்

*காமஞ்சாலா இளமை யோள்வயின்*
*ஏமஞ்சாலா இடும்பை யெய்தி*
*நன்மையும் தீமையும் என்றிரு திறத்தான்*
*தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்*
*சொல் எதிர் பெறாஅன் சொல்லி இன்புறல்*
*புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே*

அகத்: 53

என்ற நூற்பா விளக்குகிறது. இளமையோளைக் கண்ட தலைமகன் காதற்செவ்வி கனியும் பருவம் வாரா சிறுமி ஒருத்தியிடம் தனக்கு மருந்து பிறிதில்லாப் பெருந்துயராம் காதல் நோய் கொண்டு புகழ்தலும், பழித்தலும் ஆகிய இருவகையால் தனக்கும் அவளுக்கும் பொருத்தமானவற்றைக் கூட்டிச் சொல்லியும் அவள் மறுமொழி எதுவும் சொல்லாதிருக்க மீண்டும் தனக்குத் தானே சொல்லிச்சொல்லி இன்புறுதல் பொருந்தித் தோன்றும் என்று கைக்கிளையின் பொருண்மையை உணர்த்துகிறது தொல்காப்பியம்.

அகத்திணைப் பண்பாவது உள்ளப் புணர்ச்சி. உள்ளங்கள் புணர வேண்டுமேல், உடல்கள் கூடும் பருவம் எய்தியிருத்தல் வெண்டும். அப்பருவமிலிகள் உள்ளம் ஒன்றிக் காதலர்கள் ஆனார்கள், ஆவார்கள் என்றால் நிலமின்றி நீர் விளைக்கும் என்பது போலாம். உள்ளப்புணர்வுக்கு உடற்பருவத்தின் இன்றியமையாமைக் காட்டுவதே கைக்கிளையின் குறிக்கோள் ஆகும். காமவுணர்வும் காதலும் தனி இயல்பினவாயினும் ஒன்றினை ஒன்று சார்ந்து நிற்பன. தம்முள் துணையாவன. முற்றிய பருவச்

செம்மை அடைந்த மக்களிடத்துத்தான் பாலுணர்ச்சியும் காதல் நோக்கமும் மிக இணைந்து நிற்கின்றன என்று அறுதியிடும் பாலுளவியல் ஆசிரியர் ஆசுவால் சார்சின் கருத்தை எடுத்துரைக்கிறார் வ. சுப. மாணிக்கம். மேலும் “ஒருவன் தூய உள்ளத்தோடு காதல் நாடினான். அவள் பருவச் செவ்வியிலள். இதனால் அகத்தளவில் தோன்றிய தன் காதலரும்பைக் கிள்ளி எறிந்தாள். இவன் காதல் நின்றது சிறுபொழுதாயினும் தூயது, அன்பினது, மாசுதராதது என்ற நலத்தால் கைக்கிளை அகத்திணையாயிற்று. இவ்வகை உள்ளோட்டம் இளைஞர்களுக்கு இயல்பாதலின் கைக்கிளை அகத்திணையின் ஒரு பிரிவாகவும் தொடக்கப்பகுதியாகவும் அமைந்தது. கைக்கிளைக் காமம்மேல் வளராது தோன்றியவுடன் அழிதலில் காதற் குறுங்கரு என்று கூறலாம்” என அவர் கைக்கிளைக்கு விளக்கம் தருகிறார் (1962: 225-227). இதனைக் கலித்தொகைப் பாடல் கொண்டு தெளியலாம்.

*ஆய்தூவி யனமென அணிமயிற் பெடையெனத்*
*தூதுணம் புறவெனத் துதைந்தநின் னெழினலம்*
*மாதர்கொள் மானோக்கின் மடநல்லாய் நிற்கண்டார்ப்*
*போதுறூஉ மென்பதை அறிதியோ அறியாயோ*
*நுணங்கமைத் திரளென நுண்ணிழை யணையென*
*முழங்குநீர்ப் புணையென அமைந்தநின் தடமென்றோள்*
*வணங்கிறை வாலெயிற் றந்நல்லாய் நிற்கண்டார்க்*
*கணங்காகு மென்பதை அறிதியோ அறியாயோ*
*முதிர்கோங்கின் முகையென முகஞ்செய்த*
*குறும்பையெனப்*
*பெயல்துளி முகிழெனப் பெருத்தநின் னிளமுலை*
*மயிர்வார்ந்த வரிமுன்கை மடநல்லாய் நிற்கண்டார்*
*உயிர்வாங்கு மென்பதை உணர்த்தியோ உணராயோ*
*எனவாங்கு*

*பேதுற்றாய் போலப் பிறரெவ்வம் நீயறியாய்*
*யாதொன்றும் வாய்வாளா திறந்தீவாய் கேளினி*
*நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப்*
*போதர விட்ட நுமருந் தவறிலர்*
*நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்*
*பறையறைந் தல்லது சொல்லற்க வென்னா*
*இறையே தவறுடை யான்.*

கலி: 56:14-33

என்ற இக்கலித்தொகை பாடலடிகள் தலைவியின் எழில் நலமும் தடமென்தோளும் இளமுலையும் கண்டவர்களைத் துன்பமடையச் செய்தன. ஆனால், அவள் அதனைப் பொருட்படுத்தினாள் அல்லாள். அத்தகைய தலைவியின் நலன்களைத் தானே சொல்லி இன்புறுகிறான் தலைவன். மேலும் அவன் தன்னையே நொந்து கொள்வதையும் பாடலடிகளின் வாயிலாக அறிய முடிகின்றது.

### 3.3.3 பெருந்திணை

பெருந்திணை என்பது பொருந்தாக் காமம் ஆகும். இது நடுவண் ஐந்திணையின் ஒத்த காமத்தின் மிக்கும் குறைந்தும் வரும். இதனை

*ஏறிய மடற்றிறம் இளமை தீர்திறம்*
*தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்*
*மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்*
*செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே*

அகத்: 54

என்ற நூற்பா விளக்குகிறது.

“ஏறிய மடற்றிறமும் இளமை தீர்திறமும் தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறமும் மிக்க காமத்து மாறாய திறனொடு கூட்டிச் சொல்லப்பட்ட நான்கு திறமும் பெருந்திணைக் கருத்து” என்பர் உரையாசிரியர் இளம்பூரணர்.

“ஐந்திணையாவது அளவுக் காதல்; பெருந்திணையாவது மிகுதிக்காதல். பெரும் என்ற அடை களவின் மிகுதிப்பாட்டை அல்லது மிகையை குறிக்கின்றது. பெருமூச்சு, பெருங்காற்று, பெருமழை, பெரும் பேச்சு, பெருங்காஞ்சி, பெருவஞ்சி என்ற தொடர்களை நோக்கி பெருந்திணை என்பதன் பொருளைத் தெரிந்து கொள்ளலாம்” என்கிறார் வ.சுப. மாணிக்கம். (1962:235). ஐந்திணையை நோக்க கைக்கிளையும் பெருந்திணையும் சிறப்பில என்பது உண்மையே ஆயினும் எழுதிணை எனப்பட்ட அகத்திணை ஆதற்கு இழுக்கு இல்லை என்கிறார் சுப்பு ரெட்டியார் (1998:263). எனவே, இக்கருத்துக்களின் வாயிலாக கைக்கிளை, பெருந்திணை என்பது இழிந்த காமம் எனக் கருதப்படாமல் அன்பின் ஐந்திணையோடு வைத்து எண்ணத்தகும் என்பதை உய்த்துணரமுடிகின்றது.

## 3.4 அகப்புறத்திணைகள்

கைக்கிளை முதல் பெருந்திணை முடிய எழுதிணைகள் கூறி தொல்காப்பியர் அவற்றின் புறத்து நிகழ்வனவாகிய புறத்திணைகள் ஏழினையும் புறத்திணையியலில் தருகின்றார். “அகத்திணை ஏழு எனின் புறத்திணையும் ஏழு ஆதல் வேண்டும். அகங்கை இரண்டுடையார்க்குப் புறங்கை நான்காகாது இரண்டாவது போல அகத்திணை ஏழிற்கும் புறத்திணை ஏழென்றே பொருத்தமுடையதாயிற்று” என்பர் நச்சினார்க்கினியர்.

புறத்திணை ஏழாவன வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்பனவாகும். தொல்காப்பியர் குறிஞ்சி முதலான ஏழு அகத்திணைகட்கும் முறையே வெட்சி முதலான புறத்திணைகளை இனமாக்கிக் காட்டுகிறார்.

*வெட்சி தானே குறிஞ்சியது புறனே*

புறத்: 59

*வஞ்சி தானே முல்லையது புறனே*

புறத்: 64

*உழிஞை தானே மருதத்துப் புறனே*

புறத்: 66

*தும்பை தானே நெய்தலது புறனே*

புறத்: 70

*வாகை தானே பாலையது புறனே*

புறத்: 73

*காஞ்சிதானே பெருந்திணைப் புறனே*
*பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே*

புறத்: 76

என்பன அகத்திணைக்கு இனமாகும் புறத்திணை நூற்பாக்களாகும்.

## குறிஞ்சிக்கு வெட்சி புறனாதல்

குறிஞ்சிக்கு நிலம் மலைசார்ந்த இடம். பொழுது நள்ளிரவு. பூ அம்மலை நிலத்து பூக்கும் குறிஞ்சிப்பூ. புணர்தல் களவுப்புணர்ச்சியாகும். அவ்வாறே வெட்சியொழுக்கமாகிய நிரைகோடல் குறிஞ்சிக்குரிய மலைசார்ந்த நிலத்தின்கண் நிகழ்தலானும் பிறநாட்டு ஆனிரையைக் களவில் கோடல்

குறிஞ்சிக்குரிய களவோடு ஒத்தலானும் சூடும் வெட்சிப் பூவும் குறிஞ்சி நிலத்துப் பூ ஆகலான் குறிஞ்சிக்கு வெட்சி புறனாயிற்று.

## முல்லைக்கு வஞ்சி புறனாதல்

தலைவி தனது இல்லில் போர்மேற்சென்ற தலைவனின் வரவை எதிர்நோக்கி இருத்தல், மண்ணை விரும்புதலை உடைய ஒரு மன்னன் மற்றொரு மன்னனைப் படைமேற்சென்று வெல்லுவதற்குக் காலம் பார்த்துக் காத்திருத்தலாகும். ஆகையால் முல்லைக்கு வஞ்சி புறனாயிற்று.

## மருதத்துக்கு உழிஞை புறனாதல்

தலைவனது பரத்தமையைக் குறித்து மனங்கவன்று வாயிலடைத்து நிற்கும் தலைவியை இரவெல்லாம் பரத்தையர் வீட்டில் தங்கியிருந்த தலைவன் விடியற்காலையில் வந்து வாயில் திறக்கும் படி கேட்டு நிற்றல் மருதம். ஓர் அரசன் பகைநாட்டின்மீது படையெடுத்துச் சென்றால் எதிர்த்துப் போர்புரிய இயலாத அந்நாட்டு வேந்தன் தன் கோட்டைக் கதவுகளை அடைத்துக் கொண்டு இருப்பது உழிஞைத் திணையாகும். எனவே மருதத்துக்கு உழிஞை புறனாயிற்று.

## நெய்தலுக்குத் தும்பை புறனாதல்

நெய்தல் என்பது கடலும் கடல்சார்ந்த பகுதியுமாகும். இது கடலை யடுத்துப் பரந்துபட்ட இடம். களரும், மணலும் கொண்ட வெளிநிலமாகும். வலிமையே பொருளாகக் கொண்டு போர் கருதி வந்த அரசன் ஒருவன்பால் மாற்றரசன் பொருது அழிப்பது தும்பையாகும். இருபெரும் அரசரும் ஒரு களத்துப் பொருதற்கு உரிய இடம் காடும் மலையும் கழனியும்

ஆகாமையால் களரும் மணலும் பரந்த வெளிநிலத்துப் பொருதுவதால் இது நெய்தற்குப் புறனாயிற்று.

**பாலைக்கு வாகை புறனாதல்**

ஒத்தார் இருவரில் (தலைவன், தலைவி) ஒருவர் பொருள் காரணமாகப் பிரியும் பிரிவு பாலையாகும். இரு பெரும் அரசர்கள் புரிந்த போரில் வெற்றி பெற்ற அரசன் புகழ்ச்சி காரணமாகப் பிரிந்து நிற்பது வாகையாகும். எனவே இது பாலைக்குப் புறனாயிற்று.

**பெருந்திணைக்குக் காஞ்சி புறனாதல்**

ஏறிய மடற்றிறம் முதலான பெருந்திணைப் பகுதி அகத்திணை ஐந்திற்கும் புறனாகியவாறு போல நிலையாமையாகிய காஞ்சிப் பகுதியும் புறத்திணை ஐந்திற்கும் புறனாகலானும் பெருந்திணைக்கு காஞ்சி புறனாயிற்று.

**கைக்கிளைக்குப் பாடாண் புறனாதல்**

ஒரு நிலத்திற்கு உரித்தன்றி ஒரு தலைக்காமமாகி வருவது கைக்கிளையாகும். அங்ஙனமே பாடாண்திணையும் ஒரு பாற்கு உரித்தன்றி ஒருவனையொருவன் யாதானுமோர் பயன் கருதிய வழி மொழிந்து நிற்பது ஆகும்.

## 3.5 திணை மயக்கம்

ஒரு திணைக்கு என வரையறுக்கப்பட்ட முதல், கருப்பொருள்கள் வேறோர் திணைக்கு மாறிவருவது திணை மயக்கம் ஆகும். உரிப்பொருள் மயங்காது. இதனையே தொல்காப்பியம்

*உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே*

அகத்: 15

என்ற அகத்திணையியல் நூற்பா, உரிப்பொருள் தவிர கருப்பொருளும் முதற்பொருளும் மற்றொரு திணையொடு மயங்கியும் வரலாம் என்று கூறுகிறது.

*திணைமயக் குறுதலும் கடிநிலை யிலவே*
*நிலனொருங்கு மயங்குதல் இல்லென மொழிப*
*புலன்நன் குணர்ந்த புலமை யோரே*

அகத்: 14

என்ற நூற்பா முதல் பொருளில் நிலம் மயங்காது காலம் மட்டும் மயங்கும் என்பதை குறிக்கிறது.

*மெல்லியான் பருவம்போல் மயங்கிருள் தலைவர*
*எல்லைக்கு வரம்பாய இடும்பைகூர் மருள்மாலை*
*பாய்திரை பாடோவாப் பரப்புநீர் பனிக்கடல்*
*தூவறத் துறந்தனன் துறைவனென் றவன்திறம்*

கலி: 129:6-9

என்ற நெய்தற்கலிப் பாடலில் மாலைப் பொழுது சொல்லப்பட்டுள்ளது. நெய்தலுக்குரிய சிறுபொழுது எற்பாடு. ஆனால் இப்பாட்டில் முல்லைக்குரிய மாலைப் பொழுது வந்தது. எனவே இது காலம் மயங்கியதாகும்.

*வொண்செங் கழுநீர் கண்போல் ஆயிதழ்*
*ஊசி போகிய சூழ்செய் மாலையன்*
*பக்கஞ் சேர்த்திய செச்சை கண்ணியன்*
*குயமண் டாகஞ் செஞ்சாந்து நீவி*

அகம்: 48:8-11

இவ்வகநானூற்றுப் பாடல் குறிஞ்சிக்குரிய கருப்பொருளாகிய வெட்சிப்பூ (செச்சைப் பூ) சொல்லப்பட்ட தோடல்லாமல் மருதத்துக் கருப்பொருளாகிய கழுநீரும் சொல்லப்பட்டுள்ளது. எனவே இது கருப்பொருள் மயக்கமாயிற்று.

*நீர்வளர் ஆம்பல் தூம்புடைத் திரள்கால்*
……….. ………… ……… …….
……. *குமிழின் கொடுமூக்கு விளைகனி*
*எறிமட மாற்கு வல்சி யாகும்*

நற்: 6:1,7-8

என்ற நற்றிணைக் குறிஞ்சித் திணைப்பாடலில் மருதத்திணைக் கருப்பொருளாகிய ஆம்பல் பூவும் முல்லைத் திணை விலங்காகிய மானும் இடம் பெற்றுள்ளன.

*ஆம்பற் பூவின் சாம்ப லன்ன*
*கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ*
*முன்றில் உணங்கல் மாந்தி மன்றத்து*
*எருவினுண் தாது குடைவன ஆடி*
*இல்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும்*
*புன்கண் மாலையும் புலம்பும்*
*இன்றுகொல் தோழியவர் சென்ற நாட்டே*

குறுந்: 46

என்ற குறுந்தொகைப்பாடலில் ஆம்பல் பூ என்ற மருதத்துக் கருப்பொருளும் மாலை என்ற முல்லையின் பொழுதும் கூறப்பட்டுள்ளது. மேலும் துறை விளக்கம் தலைவன் பிரிந்த காலத்தில் (பிரிதல் என்ற பாலையின் உரிப்பொருள்) தலைவி ஆற்றமாட்டாள் என்று கவலையுற்ற தோழியை நோக்கி யான் ஆற்றுவேன் என்று தலைவி கூறியது என்று கூறுகிறது.

ஆகையால் இப்பாடல் எத்திணையைச் சார்ந்தது என்று அறிய இயலவில்லை.

*__கடற்கரை__ மெலிக்குங் காவிரிப் பேரியாற்*
*றறல்வார் நெடுங்கயத் தருநிலை கலங்க*
*மாலிரு __ணடுநாட்__ போகித் தன்னையர்*
*காலைத் தந்த கணைக்கோட்டு __வாளைக்__*
*கவ்வாங் குந்தி யஞ்சொற் பாண்மக*
*ணெடுங்கொடி நுடங்கு நறவுமலி மறுகிற்*
*பழஞ்__செந் நெல்லின்__ முகவை கொள்ளள்*
*கழங்குறழ் முத்தமொடு நன்கலம் பெறூஉம்*
*பயங்கெழு வைப்பிற் பல்வே லெவ்வி*
*நயம்புரி நன்மொழி யடக்கவு மடங்கான்*
*பொன்னிணர் நறுமலர் __புன்னை__ வெ·கித்*
*திதியனொடு பொருத வன்னி போல*
*விளிகுவை கொல்லோ நீயே __கிளியெனச்__*
*சிறிய மிழற்றுஞ் செவ்வாய்ப் பெரிய*
*__கயலென__ வமர்த்த வுண்கண் புயலெனப்*
*புறந்தாழ் பிருளிய பிறங்குகுர லைம்பான்*
*மின்னோர் மருங்குற் குறுமகள்*
*பின்னிலை விடாஅ மடங்கெழு நெஞ்சே*

அகம்: 126:5-22

என்ற அகநானூற்றுச் செய்யுளானது 1. உணர்ப்பு வயின் வாரா ஊடற்கண் தலைமகன் நெஞ்சிற்குச் சொல்லியது 2. அல்லகுறிப்பட்டழிந்ததுமாம் 3. தோழியைப் பின்னின்ற தலைமகன் தன்னெஞ்சிற்கு சொல்லியதுமாம் என்ற மூன்று துறைகள் கூறப்பட்டுள்ளன. பாடலில் கடற்கரை நிலமும், நடுநாள் என்ற சிறுபொழுதும் வாளை, செந்நெல், புன்னை, கிளி, கயல் என்ற

கருப்பொருட்களும் (குறிஞ்சி, மருதம், நெய்தலுக்குரிய கருப்பொருள்கள்) வந்துள்ளன.

### 3.6 திணைப் பெயரும் குறியீடும்

அகத்திணைகளுள் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய திணைகள் முறையே காடு, மலை, வயல், கடற்கரை எனக் குறிப்பிடப்படுகின்றன. இந்நிலப் பெயர்கள் அவ்வந்நிலங்களில் தோன்றி வளரும் தாவரங்களின் பூப்பெயரும் (குறிஞ்சி, முல்லை, நெய்தல்) மரப்பெயரும் (மருதம், பாலை) ஆகும். இங்கு நிலங்களின் பெயர் ஒழுக்கத்திற்கு ஆகிவந்ததா? அல்லது ஒழுக்கத்தின் பெயர் நிலத்திற்கு ஆகி வந்ததா? என்பது ஆராய்ச்சிக்குரியதாக அமைகிறது. நிலத்தின் பெயர் ஆகி வந்ததென்றால் அந்த நிலத்திற்கு அந்தப்பெயர் வரக் காரணம் என்ன? என்ற வினா எழுகிறது. ஒழுக்கத்தின் பெயர் நிலத்துக்கு ஆகி வந்ததென்றால் ஏனைய நிலங்களில் அவ்வொழுக்கம் நிகழாது என்று பொருள் கொள்ள இடமேற்படுகிறது. மேலும் நிலம்பெறாத பாலைக்குப் பெயர் எங்கிருந்து வந்தது? என்ற வினா எழுகின்றது இதனை இளம்பூரணர், "முல்லையும், குறிஞ்சியும் பூக்களின் பெயராலும், மருதமும் பாலையும், மரத்தின் பெயராலும் மீன்பிடித் தொழிலால் நெய்தலும் பெயர் பெற்றதாகக் கருதுகிறார்" (2001:10). நிலங்கள் பெயர் பெற்று குறியீடாக மாறிய காரணங்கள் இங்கே விளக்கப்படுகின்றன.

தனிப்பட்ட பொருளைக் குறிக்கும் மொழி வெளிப்பாடே பெயர். இது உண்மைப்பொருளாகவும் இருக்கலாம். அல்லது கற்பனைப் பொருளாகவும் இருக்கலாம். பெயர்கள் குறியீடுகளே. பெயராவது அது குறிக்கும்

பொருளைப்பற்றிய கருத்தை உணர்த்தவல்லது. ஆக்டன் - ரிச்சர்ட்ஸின் பொருண்மை முக்கோணத்தின்படி குறியீடு, கருத்து, குறி பொருள் என்ற மூன்றில் ஒரு குறிபொருளைப் பற்றிய கருத்தானது குறியீட்டின் மூலமாக உணர்த்தப்படுகிறது.




கிரேக்கத் தத்துவவியலார் சாக்ரடீசும் பிளாட்டோவும் குறியீட்டிற்கும் அது குறிப்பிடும் பொருளுக்கும் உள்ள தொடர்பைப் பெயர் என்றனர். குறிப்பிட்ட ஒரு நிகழ்ச்சிக்கு, பொருளுக்கு அல்லது செயலுக்குப் பெயரிடுதலும் அப்பெயரைக் கேட்டவுடன் அந்நிகழ்ச்சியை, பொருளை அல்லது செயலை அதனுடன் தொடர்புபடுத்தி உணர்தலும் முக்கியம். இங்ஙனம் பெயராவது குறிபொருளின் அமைப்பிற்கும் (System of Objects) புறமே பயன்படுகிறது. பெயர்களைச் சூழ்நிலைக்குப் புறமேயும் அவற்றின் புறத்திற்குப் புறமேயும் பயன்படுத்தலாம் என்பர் (இராதா செல்லப்பன், 2006:1). எனவே, ஐந்திணைப் பெயர்கள் எவ்வாறு அந்நிலங்களுக்குக் குறியீடாகியது என்பதனை ஆய்வது அவசியமாகிறது.

### 3.6.1 திணைப்பெயர்க் காரணம்

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்னும் பெயர்கள் நிலங்களுக்கு ஏற்பட்ட காரணத்தை உரையாசிரியர் இருவகையாகக் கூறுவர்.

ஒன்று, பூவின் மிகுதி அல்லது சிறப்பு காரணமாக வழங்கப்பட்டமை மற்றொன்று ஒழுக்கம் காரணமாக வழங்கப்பட்டமை ஆகும்.

### 3.6.2 பூவினால் வந்த பெயர்

பூவின் சிறப்பு காரணமாகவே நிலங்கள் பெயர் பெற்றன எனக் கூறுவாருள் இளம்பூரணரும் நாற்கவிராச நம்பியும் குறிப்படத்தக்கவராவர். முல்லை, குறிஞ்சி என்பன இடுகுறியோ காரணக்குறியோ எனின் ஏகதேச காரணம் பற்றி முதலாசிரியர் இட்டதோர் குறி என்று சொல்லப்படும் என்னைக் காரணம் எனின்

*நெல்லொடு*
*நாழி கொண்ட நறுவீ முல்லை*
*அரும் பவிழ் அலரி தூஉர்*

முல்லைப்: 8-10

என்றமையால் காடுறை உலகிற்கு முல்லைப்பூ சிறந்தது ஆகலானும் இவ்வாறு குறியிட்டார் என்று சொல்லப்படும் என்பர் இளம்பூரணர் (தொல்:அகத்: 5). குறிஞ்சி முதலாகிய பெயர் இந்நிலங்கட்கு ஏந்தியவாறு என்னையெனில், உலகத்தார் வழங்கிப் போந்த முறையாம் எனக் கொள்க. அன்றியும் குறிஞ்சியும் பாலையும் மருதமும் நெய்தலும் என்னும் பொருள்கள் அவ்வந்நிலத்துக்குச் சிறந்தனவாதலால் அவற்றுள் பெற்ற பெயர் எனவுமாம். 'முல்லையந் தண் பொழில்' எனக் கொள்க என்பர் நாற்கவிராசநம்பி (அகப்பொருள் விளககம்: 1992: நூ.எண்: 6). மேற்கூறிய இரு கூற்றுகளில் இளம்பூரணர் கருத்திற்கு ஏற்றவாறு முல்லை முதலான நிலங்கள் பூக்களின் சிறப்புக் காரணமாகவே பெயர் பெறுகின்றன என்பது பெரும்பான்மையினர் கருத்தாகும், அவர்களுள் பேராசிரியர் மு. இராகவையங்கார் அவர்கள்

இப்பெயர்கள் மரம் அல்லது பூ விசேடங்களுக்கு உரியன என்பதும் முல்லை முதலியவற்றின் மிகுதி அல்லது சிறப்புப் பற்றி அந்நிலங்கட்குப் பெயர்கள் வழங்கலாயின என்பதும் புலப்படும் என்கிறார் (இராகவ ஐயங்கார், 29).

*கருங்கார் குறிஞ்சி சான்ற வெற்பு அணிந்து*
*மருதம் சான்ற மருதத் தண்பணை*

மதுரைக்: 30-31

*மருதம் சான்ற மருதத் தண்பணை*
*அந்தணர் அருகா அருங்கடி வியனகா*

சிறுபாண்: 186-187

*முல்லை சான்ற முல்லையம் புறவின்*
*விடர்கால் அருவி வியன்மலை மூழ்கிச்*
*சுடர்கால் மாறிய செவ்வி நோக்கி*

சிறுபாண்: 169-171

என்னும் இப்பாடலடிகளால் பூவின் சிறப்புப்பற்றி அந்நிலங்களின் பெயர்கள் வழங்கப்படுவதை அறியமுடிகிறது. ஐந்திணைகள் மலர்களாலேயே பெயர் பெறுகின்றன; ஒவ்வொரு மலரும் ஒவ்வொரு நிலத்திற்கே உரியதாகிச் சிறக்கின்றன என்பதை இதன் வாயிலாக அறியமுடிகின்றது.

மரம் அல்லது பூவின் மிகுதியாலேயே நிலங்கள் பெயர் பெற்றன என்று வி.ஆர். தீட்சிதரும் எந்தப் பூ அதிகமாகக் குறிக்கப்படுகிறதோ அதுவே மிகுதி அல்லது சிறப்பு பற்றி அந்நிலங்கட்கு அந்நிலத்தின் சின்னமாக அமைகிறது என்று தவத்திரு தனிநாயகம் அவர்களும் சுட்டியுள்ளனர் (க. அண்ணாமலை, 1977:126).

**குறிஞ்சி**

மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி ஆகும். குறிஞ்சி என்பது மலைப்பகுதியில் வளரும் ஒரு வகைச் செடியில் பூக்கும் பூவின் பெயர். மலைப்பிரதேசங்களில் பலவகைப்பட்ட செடிகள் காணப்படினும் இப்பெயர் பெற்றதற்கான காரணத்தைப் பழந்தமிழரின் நுண்மாண் நுழைபுலத்தைக் கொண்டு அறியலாம்.

குறிஞ்சிச் செடியானது பன்னிரண்டு ஆண்டுக்கொருமுறை பூக்கும் தன்மை உடையது. வேறு எந்த செடிக்கும் இத்தன்மை கிடையாது. மலையிலும் மலை சார்ந்த இடத்திலும் காணப்படும். இந்தப் பூவின் பெயராலேயே இந்த இடத்தை அழைத்தனர் (பி.எல். சாமி, 1967:28). குறிஞ்சிப்பூ நன்றாகப் பூத்துள்ள நாளில் மலை முழுவதும் அழகொழுகும் நல்ல நீலமாகக் காணப்படும். இதனால் தான் நீலகிரி இப்பெயர் பெற்றதெனலாம் என்கிறார் சீனிவாசன் (1987:560). மேலும் இந்தப் பூவில் நிறையத் தேனுண்டு. பல்லாயிரக்கணக்கான பூக்கள் ஒரு குறிப்பிட்ட காலத்தில் தோன்றுவதால் தேன் மலிந்துபோய்விடுகின்றது. அதனால் தேனீக்கள் மலைச் சாரல்களில் பெரிய பெரிய தேன் கூடுகளை நிறையக் கட்டுகின்றன. இச்செடி பூக்கத் தொடங்கியதும் தேன் கூடுகள் மலைச்சாரல்களில் மலிந்து விடுகின்றன. இதைக் கண்டே சங்கப் புலவரொருவர்.

*கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு*
*பெருந்தேனி ழைக்கும் நாடனொடு நட்பே*

குறுந்: 3

என்று பாடினார். குறிஞ்சிப் பூக்களின் தேனால் இழைக்கப்படும் கூட்டில் பிற

பூக்களின் தேன் கலப்பதில்லை. ஏனெனில், குறிஞ்சிச் செடி பூக்க ஆரம்பித்தால் தேனீக்கள் குறிஞ்சித் தேனையே கூடுகளில் சேர்க்கின்றன என்று பி.எல். சாமி குறிப்பிடுகிறார் (1967:29). இத்தகைய சிறப்பு வாய்ந்த தன்மையாலேயே இம்மலைப் பகுதி குறிஞ்சி என்ற பெயர் பெற்றது. குறிஞ்சி என்றதுமே அனைவருக்கும் மலைப்பகுதியும் அதைச்சார்ந்த பகுதியுமே நினைவுக்கு வரும் ஒரு குறியீட்டுப் பெயராக இது அமைந்ததை இதன் வாயிலாக அறிய முடிகிறது.

***முல்லை***

காடும் காடு சார்ந்த நிலமும் முல்லை நிலம் எனப்படும். பண்டைத் தமிழ் மக்களின் ஒழுக்க மலராக முல்லை மலர் கருதப்பட்டது. மகளிரின் கற்பு ஒழுக்கத்திற்கு அடையாளமாக முல்லைப் பூவைக் கூறினர். கன்னியாக இருந்த ஒரு பெண் முல்லை மலரைச் சூடிய அளவில் அவள் கற்பு ஒழுக்கத்திற்கு உரியவள் ஆகிறாள். அன்றி கற்பின் மிகுதி தோன்ற முல்லைசூடுதல் இயல்பு என்பர் நச்சினார்க்கினியர். அதனால் கற்பின் சின்னம் முல்லை என்பதாம். இவ்வுண்மையைச் சங்கச் சான்றோர் பாடியுள்ளனர்.

*முல்லை சான்ற கற்பின் மெல்லியல்*
*மடமான் நோக்கின் வாணுதல் விறலியர்*
*நடைமெலிந் தசைஇய நன்மென் சீறடி*

சிறுபாண்: 30-32

*முல்லை சான்ற கற்பின்*
*மெல்லியல் குறுமகள் உறைவின் ஊரே*

நற்: 142:10-11

முல்லை சான்ற கற்பின் என்ற சொற்றொடருக்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் முல்லை சூடுதற்கு அமைந்த கற்பு என்ற உரை கூறுதலின் இவ்வுண்மை வலியுறுத்தப்படும். அகவாழ்விலும் புறவாழ்விலும் ஏறத்தாழ பத்து வகையாகப் பாடப்பட்டுள்ள தனிமலர் முல்லை ஆகும். சங்க இலக்கியங்களில் மிகுதியாகப் பாடப்பட்ட மலர் முல்லை.

| | | | |
|---|---|---|---|
| 1. | முல்லை | - | முல்லைப் பூ |
| 2. | தவளம் | - | வெண்ணிறமுல்லை |
| 3. | செம்மல் | - | சாதி முல்லை |
| 4. | தளவம் | - | செம்முல்லை |
| 5. | கொகுடி | - | காட்டு முல்லை |
| 6. | மயிலை | - | நள்ளிருள் நாறி |
| 7. | குளவி | - | காட்டு மல்லிகை |
| 8. | அதிரல் | - | மோசி மல்லிகை |
| 9. | சேடல் | - | பவள மல்லிகை |
| 10. | மௌவல் | - | மனை மல்லிகை |

சங்க இலக்கியங்களாகிய எட்டுத்தொகையிலும் பத்துப்பாட்டிலும் இடம் பெற்றுள்ள முல்லைத் திணைப் பாடல்களின் மொத்த எண்ணிக்கை இருநூற்று முப்பத்தேழு. இம்முல்லைத் திணைப் பாடல்களில் காணும் முல்லைச் சொற்களில் அறுபது சொற்கள் முல்லைப் பூவினைக் குறிக்க மட்டுமே வழங்கப்பட்டுள்ளன என்று புள்ளி விவரம் தருகிறார் அண்ணாமலை (1977). முல்லைப் பூவின் சிறப்பாலும் மிகுதியாலும் இந்நிலப்பகுதி முல்லை எனப் பெயர் பெற்றது எனலாம்.

## மருதம்

மருதம் என்பது வயலும் வயலைச் சார்ந்த இடமுமாகும்.

*ஊர்க்குறு மகளிர் குறுவழி விறந்த*
*இறாஅல் அருந்திய சிறுசிரல் மருதின்*
*தாழ்சினை உறங்கும் தன்துறை ஊர*
*விழையா வுள்ளம் விழையு மாயினும்*

அகம்: 286:5-8

என்பதால் தீம்புனல் நிலத்திற்கு மருது சிறந்தது எனலாம் என்று இளம்பூரணர் கூறுகிறார். மருதமரம் உயர்ந்து பருத்து வளரும். இதன் அடிமரம் மிகவும் பருத்திருக்கும். இம்மரம் காவிரி, வையை முதலிய ஆறுகளின் கரைகளில் வளர்வதைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. மேலும் இம்மரம் நீர்நிலைக்கருகாமையிலும், ஆற்றோரங்களிலும் காணப்படுவதாகக் கூறப்படுகிறது.

*வாரலெஞ் சேரி தாரனின் றாரே*
*அலரா கின்றாள் பெரும காவிரிப்*
*பலராடு பெருந்துறை மருதொடு பிணித்த*
*ஏந்து கோட்டு யானைச் சேந்தன் தந்தை*

குறுந்: 258:1-4

*வருபுனல் வையை வார்மணல் லடைகரை*
*திருமரு தோங்கிய விரிமலர்க் காவி*

அகம்: 36:9-12

*செல்லல் மகிழ்நநிற் செய்கடன் உடையென்மன்*
*கல்லா யானை கடிபுனல் கற்றென*
*மலிபுனல் பொருத மருதோங்கு படப்பை*
*ஒலிகதிர்க் கழனிக் கழாஅர் முன்றுறைக்*

அகம்: 376:1-4

*மருதுயர்ந் தோங்கிய விரிபூம் பெருந்துறை*
*பெண்டிரொடு ஆடும் என்ப*

ஐங்: 33:2-3

மருதமரம் ஆற்றருகே இயற்கையாகவே பெரிதும் காணப்படும் என்று செடி நூலில் கூறியிருக்கின்றனர் (பி.எல். சாமி, 1967:47). இம்மரத்தின் நிழல் சூழ்ந்த பெரிய துறைகளில் ஆடவரும் மகளிரும் நீராடுவர் என்றும் ஓங்கிவளரும் மருதமரநிழலில் செந்நெல்லடித்துப் போரிடும் களம் அமைப்பர் எனவும் மருதமரத்தின் பயன் துய்த்தலைச் சங்கப் பாக்கள் விதந்து கூறியுள்ளன.

*பைதுஅற விளைந்த பெருஞ்செந் நெல்லின்*
*தூம்பிடைத் திரள்தாள் துமித்த வினைஞர்*
*பாம்புறை மருதின் ஓங்குசினை நீழல்*
*பலிபெறு வியன்கள மலிய வேற்றி*

பெரும்பாண்: 230-233

எனவே, நிலவளமும் நீர்வளமும் கொண்ட வயல் சார்ந்த பகுதியிலே நன்கு வளர்ந்து சிறப்புற்றதால் இப்பகுதி மருதத்திணை என்ற பெயர் பெற்றுக் குறியீடாகியது என்பதைச் சங்கப் பாடல்களின் வழி அறிந்து கொள்ள முடிகிறது.

## நெய்தல்

நெய்தல் நிலம் என்பது கடலும் கடல் சார்ந்த பகுதியாகும். இவ்வியற்கைச் சூழலுக்கு ஏற்பக் கடலோரங்களில் கழிகளிலும் நன்னீர் நிலைகளிலும் நெய்தல் செடி காணப்படுவதாகச் சங்க நூல்கள் கூறுகின்றன.

*பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்*
*இனமீ னிருங்கழி யோத மல்குதொறும்*

குறுந்: 9:4-5

என்றதால் பெருமணல் உலகிற்கு நெய்தல் சிறந்தது என்கிறார் இளம்பூரணர். விழாக் காலத்து விழவணி மகளிர் இதனுடைய இலைகளை தனித்தும் ஆம்பல் இலைகளுடன் சேர்த்தும் தலையணி செய்வர்.

*அறாஅ யாணர் அகன்கண் செறுவின்*
*அருவி ஆம்பல் நெய்தலொடு அரிந்து*
*செறுவினை மகளிர் மலிந்த வெக்கை*

பதிற்று: 71:1-3

கழியிடத்துப் பூக்கும் நெய்தல் மலரை மகளிர் கொய்து சூடிக்கொள்வர். நீலமான நெய்தற் பூவிதழ்களுடன் அடும்பின் செவ்விய பூக்களை விரவித் தொடுத்து மகளிர் கூந்தலில் அணிவர்.

*அடும்பின் ஆய்மலர் விரைஇ நெய்தல்*
*நெடுந்தொடை வேய்ந்த நீர்வார் கூந்தல்*

குறுந்: 401:1-2

இதன் மலர்களைச் செருந்தி பூக்களுடன் விரவி மாலையாகப் புனைந்து ஆடவரும் அணிவர்.

*நெய்தல் நறுமலர் செருந்தியொடு விரைஇக்*
*கைபுனை நறுந்தார் கமழும் மார்பன்*

ஐங்: 182

நெய்தற் பூவின் பூவிதழ்களை ஒடித்து மாலைக் கட்டிச் சூடுவதற்கு நெய்தல் நெறித்தல் என்று பெயர். இவ்வாறு நெய்தல் பூவை அந்நில மக்கள் பயன்படுத்தியதன் சிறப்பைச் *சீனிவாசன்* குறிப்பிடுகிறார் (1986:44,46). எனவே, நெய்தல் பூ கடலும் கடல் சார்ந்த பகுதிக்குச் சிறப்பாய்ப் பெயர் பெற்றதைக் காணலாம்.

**பாலை**

பாலை என்பதற்கு நிலம் இல்லை எனினும் "முல்லையும் குறிஞ்சியும் தம்மியல்பு திரிந்து பாலை என்பதோர் படிவங் கொள்ளும்" எனக் கூறிப் பாலை நிலத்தைக் குறிப்பிடுகிறார் இளங்கோவடிகள். வேனில் காலத்தில் தளிரும் சினையும் வாடுதலின்றி நிற்பது பாலை என்ற மரம் ஆகும். எனவே அச்சிறப்பு நோக்கியே அந்நிலத்திற்கு அப்பெயர் வந்தது எனலாம்.

## 3.7 உரிப்பொருளும் குறியீடும்

சங்கப் பாடல்களில் அகப்பாடல்களின் பாகுபாட்டிற்கு அடிப்படையாக அமைவது உரிப்பொருளேயாகும். ஓர் அகப்பாடலிலே முதல், கரு, உரி என்னும் மூன்று பொருள்களும் அமைந்திருப்பது சிறப்பானதாகும்.

*புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்*
*ஊடல் இவற்றின் நிமித்த மென்றிவை*
*தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே*

தொல்:அகத்: 16

எனத் தொல்காப்பியர் உரிப்பொருள் எவையென விளக்கியுள்ளார். இச்சூத்திரத்திலே உரிப்பொருள்கள் கூறப்பட்டுள்ள ஒழுங்குமுறைமைக்கு உரையாசிரியர் பின்வருமாறு விளக்கங் கூறுகிறார். "அகப்பொருளாவது புணர்ச்சியாகலானும் அஃது இருவர்க்கும் ஒப்ப நிகழ்தலானும் புணர்ச்சியை முற்கூறி புணர்ந்துழியல்லது பிரிவின்மையாலும் அது தலைவன் கண்ணதாகிய சிறப்பானுந் தலைவி பிரிவிற்குப் புலனெறி வழக்கு இன்மையானும் பிரிவினை அதன்பின் கூறிப் பிரிந்துழித் தலைவி

ஆற்றியிருப்பது முல்லையாகலின் இருத்தலை அதன்பின் கூறி அங்ஙனம் ஆற்றியிராது தலைவனேவலிற் சிறிது வேறுபட்டிருந்து இரங்கல் பெரும்பான்மை தலைமகளதே ஆதலின் அவ்விரங்கற் பொருளை அதன்பின் கூறி இந்நான்கு பொருட்கும் பொதுவாதலானுங் காமத்திற்குச் சிறத்தலானும் ஊடலை அதன்பின் கூறி இங்ஙனம் முறைப்படுத்தினார்'' என்பர் நச்சினார்க்கினியர். இதன்படி, திணை என்ற சொல் நிலத்தையும், ஒழுக்கத்தையும் ஒருங்கே குறிக்கும். இங்கே திணை என்ற சொல்லை ஒழுக்கம் என்ற பொருள் கொள்ளும் போது உரி என்பதனை உரிய என்ற பொருளிலே கையாண்டுள்ளார் காப்பியர் என்பதை அறியலாம். ''மனிதனுடைய உணவு, உடை, உறைவிடம், பழக்கவழக்கம், பண்பாடு, சிந்தனை ஆகிய அனைத்தையும் அவன் சார்ந்து இருக்கும் நிலச்சூழலே பெரிதும் தீர்மானிக்கின்றது. நிலத்தின் தட்பவெப்பநிலை, மண், நிலநீர், மலை, சமவெளி, காய்கறிகள், விலங்குகள், பெரும்பொழுதுகளின் மாற்றங்கள், புயல், பூகம்பம், கடல் பொங்குதல் முதலான இயற்கைப் பெரு நிகழ்வுகள், புவி ஈர்ப்பு முதலியன சமுதாயத்தின் வாழ்க்கைப் படி நிலையை முற்றிலும் தீர்மானிக்கின்றன'' என்று கூறுகிறார் க.ப. அறவாணன் (1998:284).

''புணர்தல் என்ற நிகழ்ச்சிக்கு இயற்கை வளமும் தனிமையும் மிக்க மலை நிலம் ஏற்றது. அமைதி குளிர்காலத்தில் நடுயாமத்தில் இயல்பாக அமைவது. எனவே குறிஞ்சி உரிப்பொருளாகிய புணர்ச்சி நடைபெறுவது அதன் தனிப்பட்ட இன்பச் சுவையை உணரலாம் என்றும் பாலை நிலத்தில் பிரிவு நிகழ்வதாகச் சொன்னால்தான் சுவைமிகுதியாகத் தோன்றும். வேனிற்காலத்தில் வெப்பத்தின் கொடுமையும், நீரின்றி வாடும் யானையும் உணவின்றி உழலும் புலியும் காணப்பெறும் சூழ்நிலையில் தலைவியை

விட்டுத் தலைவன் பிரிந்ததாகக் கவிதை புனைந்தால் அதில் அவலச்சுவை சிறப்பாக அமையும் என்றும், இருத்தல் என்பது பிரிவுற்ற தலைமகன் வருந்துணையும் தலைவி தலைமகன் திரும்பிவிடுவான் என்று ஆற்றியிருத்தல் அதாவது நம்பிக்கையோடு பொறுத்திருத்தல் என்றும் இரங்கல் என்பது ஆற்றாமை என்றும் ஊடல் என்பது தலைவன் தலைவியரிடையே நேரிடும் சிறு பிணக்கு" என்றும் உரிப்பொருள்களைப் பற்றி விளக்குகிறார் சுப்பு ரெட்டியார் (1998:268).

பிரிவின் வெம்மையை நண்பகல் வேனில் பொழியும் பின்புலத்தில் படைப்பதும் கார்மழை பொழியும் மாலைப் பொழுதில் முல்லை மலர, ஆநிரைகள் தொழுவை நோக்கி விரைய, தலைவன் எதிர்நோக்கி நிற்கும் தலைவியின் உணர்வை வடிப்பதும் வாடைவீசும் கூதிர் யாமப் பொழுதில் மரஞ்செறிந்த குறிஞ்சிக் காட்டில் தலைவியை நாடிச்செல்லும் தலைவனைப் படைப்பதும் என உணர்விற்கு ஏற்ற சூழலைப் படைத்தளிக்கும் திறத்தைக் குளோரியா சுந்தரமதி குறிப்பிடுகிறார் (1998:357).

## குறிஞ்சி

புணர்தல் ஒழுக்கம் என்பது மலைநிலத்து மக்களின் ஒழுக்கமாகும். மலையின் தன்மையும் கூதிர்காலக் கடுங்குளிரும் நள்ளிரவின் தனிமையும் அந்நில மக்களுக்குப் புணர்ச்சி வேட்கையைத் தூண்டுகிறது எனலாம். இந்நிலத்து பூக்கும் குறிஞ்சி பன்னிரண்டு ஆண்டுக்கு ஒரு முறை பூப்பது போலப் பெண் பன்னிரண்டு ஆண்டில் பூப்பெய்தி மண வாழ்க்கைக்குத் தகுதி பெற்றவளாகிறாள் என்பது பழந்தமிழ் மரபு. இளங்கோவடிகள் கண்ணகியை ஈராண்டு அகவையளாகக் காட்டுதலை இங்கு இணைத்துக் காணலாம்.

குறிஞ்சி நீலம், சிவப்பு, மஞ்சள் ஆகிய மூன்று நிறங்களில் பூக்கும் வகைகளையுடையது. சங்க இலக்கியத்தில் அதிகமாக நீலக் குறிஞ்சியே இடம் பெறுகிறது. இது களவொழுக்கத்தைக் (மறைவொழுக்கம்) காட்டும் குறியீடாகிறது எனலாம். செடியில் தேன் மிகுந்திருத்தல் களவின்பத்தைக் குறிப்பிடுகிறது.

**பாலை**

பாலை என்பது முல்லையும் குறிஞ்சியும் திரிந்த நிலை ஆகும். இந்நிலத்து தலைவன் பொருளிற்காகவும் வினைவயிற்காரணமாகவும் தலைவியை விட்டுப் பிரிகிறான். எனவே பாலை நிலத்திற்குப் பிரிதல் ஒழுக்கம் கூறப்பட்டுள்ளது. பாலை மரத்தின் காய் ஒன்றாகத் தோன்றி இரண்டாகப் பிரிந்து கடைசியில் . சேருகின்றது. இதனை நற்றிணைப் பாடல் காட்டுகிது.

*உள்ளுதொறு நகுவேன் றோழி வள்ளுகிர்ப்*
*பிடிபிளந் திட்ட நாரில்வெண் கோட்டுக்*
***கொடிறுபோல்*** *காய வாலிணர்ப் பாலைச்*
*செல்வளி தூக்கலின் ஒல்லென ஒலிக்கும்*

நற்: 107:1-5

பிரிந்து சேரும் தலைமக்களின் ஒழுக்கத்தைக் குறிப்பிட இக்காயை உடைய பாலை மரத்தைக் குறியீடாக்கினர் எனலாம்.

**முல்லை**

காடும் காடு சார்ந்த பகுதியுமாகிய முல்லை நிலத்திற்கு இருத்தல் ஒழுக்கம் சிறப்பானது. வினைமேற்சென்ற தலைவன் கார்காலம் தொடங்கியதும் வருவான் என்று தலைவி காத்திருக்கிறாள். கார்காலம்

வந்ததும் தலைவன் எப்பொழுது வரப்போகிறான் என்ற தவிப்போடு இருத்தலால் இங்கு இருத்தல் நிமித்தம் சிறப்பாயிற்று.

பண்டைக் காலத்தில் மலரணியும் வழக்கம் இருபாலரிடத்தும் இருந்தது. மகளிரின் கற்பு ஒழுக்கத்திற்கு முல்லை குறியீடாகும். கன்னியாக இருந்த ஒரு பெண் முல்லை மலரைத் தேடிய அளவாலே அவள் கற்புக்கு உரியவள் ஆகிறாள் என்பர் நச்சினார்க்கினியர். முல்லை மலர் கார்காலத்தில் மாலையில் மலரும் இயல்புடையது. இது வெண்மை நிறமும் நறிய நாற்றமும் (மணமும்) உடைய பூவாகும். பொதுவாக இரவில் மலரும் பூக்கள் வெண்மை நிறத்துடனும் வாசனையுடனும் இருக்கும் என்பது அறிவியல் உண்மை. பூவிற்கு நாற்றம், வண்ணம், அழகு, தேன் மிகுந்திருத்தல் போன்றவை மகரந்த சேர்க்கைச் செய்ய உதவும் பூச்சிகளைத் தன்பக்கம் ஈர்ப்பதற்கான இயற்கையின் செயலாகும். மலர் மணம் மனிதர்களையும் ஈர்க்கும் வல்லமையுடையது. பெண்கள் வாசனையுடைய பூக்களைச் சூடி இருக்கும்போது அது ஆடவருக்கு புணர்வின்பத்தைத் தூண்டும். அதனால்தான் இன்றளவில் கணவனை இழந்தோர் தலையில் பூச்சூடுதல் இல்லை எனலாம். எனவே, கார்காலம் வரும் வரை பொருத்திருந்து தலைவனைச் சேருவதால் முல்லை நிலத்திற்கு, இருத்தல் நிமித்தமும் காடு வெயிலின் கொடுமையால் கவினழிந்து கார் காலத்தின் மழையால் கவின் பெறுதலால் கார் பொழுதும் குறியீடாயிற்று.

**மருதம்**

மருதம் வயலும் வயல் சார்ந்த பகுதியும் ஆகும். மருதம் உணவுப்பொருள் வளம் நிறைந்த இப்பகுதி வாழ்மக்கள் அதிக உடலுழைப்பின்றி இருப்பர். ஆகையால் தலைவனின் சிந்தனை பரத்தையர்

பக்கம் செல்கிறது. ஆறு பருவங்களிலும் வேளாண் தொழில் சிறப்புற்றிருப்பதாலும் பரத்தையிற் பிரிந்த தலைவன் ஊரார் அறியும் முன் இல்லம் செல்லவேண்டும் என்ற எண்ணம் உடையவனாதலாலும் வைகறை விடியல் என்ற இரு சிறுபொழுதும் இந்நிலத்திற்குக் குறியீடாயிற்று.

மருதமரம் நீர்வளம் நிறைந்த வயல்சார்ந்த பகுதியில் வளரும் அழகிய பெருமரமாகும். இதன் பூக்கள் செந்நிறமானது என்றும் இதன் புற இதழ்கள் கரிய நிறமுடையதென்றும் திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகிறது.

*துவர முடித்த துகளறு முச்சிப்*
*பெருந்தண் சணபகஞ் செறீஇக் **கருந்தகட்டு***
*உளைப்பூ மருதின் ஒள்ளினர் அட்டிக்*
*கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்பு*

திருமுருகு: 26-29

மருதத்தின் செந்நிறம் தலைவியின் பூப்புக்காலத்தை குறிக்கின்றது எனலாம். இப்பூப்புக் காலத்திலேயே தலைவன் பரத்தையிடம் செல்லத் துணிகிறான். பூவின் புற இதழ்கள் கரிய நிறத்துடன் இருப்பது ஊடல்கொண்ட தலைவியின் எதிர்ப்பைத் தெரிவிக்கிறது எனலாம். எனவே மருத நிலத்துக்கு ஊடல் ஒழுக்கம் குறியீடாயிற்று எனலாம். இன்றைய சூழலிலும் மக்கள் தங்கள் எதிர்ப்பினைத் தெரிவிக்க கறுப்புக் கொடி காட்டுதல் உண்டு.

**நெய்தல்**

கடலும் கடல் சார்ந்த பகுதியும் நெய்தல் ஆகும். கடல் பகுதியானது மீன் வளமும் கடல் பொருள் வளமும் நிறைந்த ஒன்றாகும். இப்பகுதி

எக்காலத்தும் மீன் வளம் குன்றாததாகையால் ஆறு பெரும்பொழுது சிறப்புடையதாயிற்று.

நெய்தல் மலர் காலையில் மலர்ந்து மாலையில் கூம்பும் தன்மையுடையது.

*அம்பல் வாய்த்த தெய்ய தண்புலர்*
*வைகுறு விடியல் போகிய எருமை*
*நெய்தலம் புதுமலர் மாந்தும்*
*கைதையம் படைப்பைஎம் மழுங்க லூரே*

அகம்: 100:15-18

என்ற அடிகள் நெய்தல் காலையில் மலரும் என்றும்

*வள் ளிதழ் நெய்தல் கூம்பப் புள்ளுடன்*
*கமழ்பூம் பொதும்பர்க் காட்சி சேரச்*
*செல்சுடர் மழுங்கச் சிவந்துவாங்கு மண்டிலம்*

நற்: 117:3-5

என்ற அடிகள் நெய்தல் பூ கூம்பும் நேரம் மாலை என்பதையும் குறிப்பிடுகிறது. மாலையில் தலைவி மனம் வருந்தி இருத்தலை இப்பூ சுட்டுகிறது எனலாம்.

கடலுக்குச் சென்ற தலைவனைக் காணப்பெறாமையால் அவன் வருவானா? மாட்டானா? என்று ஏங்கி இரங்கி எதிர்பார்த்திருப்பதால் இரங்கல் நிமித்தம் குறியீடாயிற்று. இன்றைய நாளில் இறந்தவருக்குத் துக்கம் அனுட்டித்தலை இரங்கல் தெரிவித்தல் என்று குறிப்பிடுகின்றனர். இரங்கல் நிமித்தமே இவ்வாறாக மாறி இருக்கலாம்.

மேற்கண்ட கருத்துகளின் வாயிலாக உரிப்பொருள் என்பது மக்கள் ஒழுக்கத்தையே குறித்தமையை அறியமுடிகிறது. அன்பின் ஐந்திணையாகச் சிறப்பித்துக் கூறப்பட்ட புணர்தல், இருத்தல், இரங்கல், ஊடல், பிரிதல், என்பவை மன உணர்வுகளைத் தெளிவாகப் வெளிப்படுத்தும் குறியீட்டுச் சொற்களாயமைந்தன என்பதை இதன் வழி தெளியலாம்.

## 3.8 கருப்பொருளும் குறியீடும்

சங்ககாலப் புலவர்கள் மக்கள் வாழ்வையும் இயற்கையையும் இணைத்துப் பாடினர். "மனித வாழ்க்கையில் பல்வேறு கூறுகளையும் வருணித்துத் தெளிவுபடுத்துவதற்காகவே பண்டைத் தமிழ்ச்சான்றோர் இயற்கையைப் பயன்படுத்தினர். மனித இதயத்தின் உணர்வுகளையும் இயற்கையின் எழிலையும் நெருங்கிய பிணைப்புடையனவாய் இணைத்துப் பாடினர் எனினும் அவர்கள் பாடலுள் மக்கள் வாழ்வே முதன்மையும் சிறப்பும் பெற இயற்கை சார்பு நிலை பெற்றது. மலையும் காடும், வயலும், கானலும், விலங்கும், பறவையும், செடியும், கொடியும், அருவியும், ஆறுமாகிய இயற்கைப் பொருளோடு அவர்கள் உறவும் உரிமையும் கொண்டு வாழ்ந்தனர். அவர்கள் வாழ்வு இயற்கையில் தோன்றி இயற்கையில் வளர்ந்து இயற்கையில் இன்புற்ற வாழ்வென குறிப்பிடுவார்" ஔவை. துரைசாமிப்பிள்ளை (1972:54). மக்கள் யாவர்க்கும் இயல்பாக அமைந்த காதல் உணர்ச்சியும் வீர உணர்ச்சியுமே அக்கால இலக்கியங்களில் சிறப்பிக்கப்பட்டன. அக்கால இலக்கியப் பொருள் மரபு முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என வகுக்கப்பட்டது. உரிப்பொருளாகிய ஒழுக்கம் நிகழுதற்கு முதற்பொருள் நிலைக்களமாகவும் கருப்பொருள்

அதற்கு உதவுமாறும் செய்யுட்கள் செய்யப்பட்டன என்று வேலுப்பிள்ளை கருப்பொருளின் முக்கியத்துவத்தை எடுத்தியம்புகின்றார் (1978:12).

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பன சிறப்பாக அவ்வந்நிலங்களில் தோன்றும் கருப்பொருள்களின் பெயர்கள் ஆகும். இவை குறியீடுகளாகி அவ்வந்நிலங்களான முதற்பொருளை முறையே சுட்டுகின்றன. பழந்தமிழர் இயற்கையினைத் தனியாகக் கற்பனை செய்து பாடாமல் மக்களின் வாழ்விற்கும் உணர்விற்கும் பின்னணியாகப் பாடியுள்ளனர். அகப்பாடல்களில் முதல் பொருளும் கருப்பொருளும் பற்றிய புனைவு உரிப்பொருளுக்கும் புலவரால் அமைக்கப்பெற்று இயற்கைப் பின்னணியில் மனிதனுடைய இன்ப துன்ப உணர்வுகளை வெளிப்படுத்துவதாகப் பாடல் புனைந்துள்ளனர்.

*மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத்*
*துணைபுணர் அன்றில் உயவுக்குரல் கேட்டொறும்*
*துஞ்சாக் கண்ணள் துயரடச் சாஅய்*

நற்: 303:4-6

என்ற நற்றிணைப் பாடலடிகள் தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவியைத் துயிலாக் கண்ணாளாகத் துன்பத்தில் ஆழ்த்துகின்றது.

மக்கள் வாழ்வு பற்றிக் கூறுவதை முதன்மை நோக்கமாகக் கொண்டிருந்ததால் இயற்கையைத் தனித்துப் பாடும் மரபைச் சங்கப் புலவர்கள் பின்பற்றவில்லை. சங்க காலப் புலவர் மானுடம் பாடுவதையே தங்கள் இலக்கியக் குறிக்கோளாகக் கொண்டார் என்கிறார் எ.வி. சுப்பிரமணிய ஐயர் (1959:72). சங்க இலக்கியத்தின் மையம் மானிட வாழ்வே ஆகும். இயற்கை அதற்கு உறுதுணையாய் இரண்டாம் இடமே பெறுகின்றது.

இயற்கையைத் தலைமைப்பொருளாக மேற்கொண்டு பாடுபவர் இயற்கைப் புலவர் எனப்படுவர். சங்க இலக்கியப் புலவர் இயற்கைக் குறித்துப் தனித்துப்பாடவில்லை. இயற்கை, பாடுபொருளுக்குத் துணைப் பொருளாயிற்றே அன்றி பாடற்பொருளாகவில்லை. சங்க இலக்கியத்தில் தனி இயற்கை பற்றி ஒரு பாடல் கூட இல்லை, தனியாக இயற்கையைப் புனைந்ததில்லை என்பர் மு. வரதராசனார் (1979:12). சங்க இலக்கிய அகப்பாடல்களெல்லாம் தனிச் செய்யுட்களே ஆயினும் இயற்கையைத் தனிப் பொருளாகக் கொண்டு எச்செய்யுளும் எழவில்லை என்பார் வ.சுப. மாணிக்கம் (1962:190). சங்கப் புலவர் மானிட வாழ்வைப் பாடுவதைக் குறிக்கோளாகக் கொண்டனர் என்பதையும் அதற்கு அணிசெய்யும் வகையில் இயற்கையைப் பின்னணியாகப் புனைவு செய்தனர் என்பதையும் சங்கப்பாடல்கள் புலப்படுத்துகின்றன.

சங்கப் பாடல்களின் உயிர்ப் பொருளான உரிப்பொருளை விளக்குவதற்கும் மனித உணர்வுகளைச் சிறப்பாகச் சித்திரித்துக் காட்டவும் துணைபுரியும் குறியீடுகளாகவே கருப்பொருள்கள் பயன்படுத்தப்படுகின்றன. நாடெங்கணும் காடெங்கணும் மண்டிக்கிடக்கும் இயற்கைப் பகுதிகளே புலவர்தம் அறிவைக் கவர்ந்து அவர்பாடும் மதிப்பைப் பெற்றன. இயற்கை மாந்தர்களின் எண்ணங்களையும் உணர்வுகளையும் மிகவும் தாக்கியது என்பதை அகத்திணைப் பாடல்களில் சிறப்பாக ஐந்திணைப் பாடல்களில் காணமுடிகிறது. ஒவ்வொரு அகத்திணையும் காதலுணர்வும் இயற்கையொடு ஒட்டிய உறவும் உடையது. குறுந்தொகைப் பாடலொன்றில் இரவுக்குறி வந்தொழுகும் தலைவனுக்குப் பன்றியைக் குறியீடாகக் காட்டுகிறாள் தோழி.

*கடுங்கட் பன்றியின் நடுங்காது துறந்து*
*நாம வருந்துறைப் பேர்தந் தியாமத்*
*தீங்கும் வருபவோ ஓங்கல் வெற்ப*

அகம்: 18:6-8

இரவில் கட்டுக் காவல்களை மதியாது. உயிர்க்கேதம் விளைவதற்கும் அஞ்சாது களவுப் புணர்ச்சி. பாலுறவுக்கு வேட்டுவரையும் தலைவனுக்குப் பன்றியையும் குறியீடாகக் காட்டுகிறாள் தோழி.

இவ்வாறு பண்டைத் தமிழரின் காதல் உள்ளத்தொடு கலந்த ஓர் அக உறுப்பாகவே கருப்பொருள் விளங்கியது என்பதை அறிய முடிகிறது. இயற்கையியல், குறியீட்டியல் (Naturalism and Semiotics) ஆகிய இரண்டும் சங்க இலக்கியத்தின் பண்புகளாக உள்ளன. சங்க இலக்கிய அகப்பாடல்களில் இடம் பெறும் இயற்கைக் காட்சிகளின் வழி உவமை, உள்ளுறை, இறைச்சி போன்ற கருத்து விளக்கம் அமைந்திருப்பினும் அவையாவும் மக்கள் வாழ்வுக்களத்திற்குப் பின்புலமாக விளங்கும் குறியீடுகளாகின்றன. இயற்கையையும் வாழ்வையும் தனியாகப் பிரித்துக்காணாது மானுட வாழ்வின் செயல்களை உள்ளத்து உணர்வுகளை விளக்கமுறச் செய்வதற்காகச் சங்கப் புலவர் இயற்கையைப் பயன்படுத்தினார்.

எனவே, சங்க இலக்கியத்தில் இயற்கை, நேர் பொருளாக இடம் பெறாது குறியீட்டுப் பொருளாக இடம் பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. கருப்பொருட்கள் சங்கப் புலவர்களுக்கு உள்ளுறை பொதியப் பயன்படும் கருவியாகும். இந்நோக்கில் காதற்கடுவனும், அன்பின் இரலையும், வலிமிகு களிறும், தலைவனுக்கும் அன்னமும், அன்றிலும்,

கிளியும், தலைவிக்கும் குறியீட்டுப் பொருட்களாய் அமைந்து இயற்கை சித்திரிப்பில் உயர்ந்த வாழ்க்கை உண்மைகளை எடுத்துரைக்கப் பயன்படும் பாங்கைச் சங்க இலக்கியம் காட்டுகிறது.

## 3.9 முடிவுரை

திணைசார் குறியீட்டாட்சி என்ற இந்த இயலில் திணை என்ற சொல், நிலம், ஒழுக்கம் என்ற இரண்டையும் குறிக்கும் என்பது தொல்காப்பியரின் நூற்பா மற்றும் உரையாசிரியர்களின் வாயிலாகப் பெறப்பட்டது.

ஐந்திணைப் பெயர்கள் அவ்வந்நிலங்களில் சிறப்பாக வளரும் தாவரத்தின் பெயரால் அழைக்கப்பட்டுப் பின்பு அப்பெயரே அவ்வந்நிலங்களுக்கு குறியீடாகின என்பதை அறியமுடிகின்றது.

ஒவ்வொரு நிலத்திற்கும் இயல்பான தட்பவெப்பத்தாலும் இயற்கைச் சூழலாலும் மக்களின் பழக்க வழக்கங்கள் மாறுபடுகின்றன. அதன் அடிப்படையிலே மக்களின் மன உணர்வுகளை வெளிப்படுத்தும் குறியீடுகளாக உரிப்பொருள் குறியீடுகள் அமைந்தமை பெறப்படுகிறது.

சங்கப் புலவர் மனித வாழ்வியலை இயற்கையோடு இணைத்துப் பாடினர். அவர்கள் பாடல் புனையும்போது தாங்கள் நேரில் கண்டவற்றையும் கற்பனையில் தோன்றியதையும் இயற்கையைக் கொண்டு அதன் கருப்பொருள்களின் வாயிலாகச் மனிதச் செயல்களை இலைமறைகாயாய் வெளிப்படுத்தினர். இயற்கைப் பொருள்கள் இருக்கும் இடத்தில் மனிதனையும், மனிதச்செயல்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது அவை சிறந்த குறியீடாகின என்பதை இதன் வாயிலாக அறிந்துகொள்ள முடிகிறது.

# 4. அகப்பாடல்களில் குறியீடுகள்

முன்னுரை

4.1 புணர்ச்சிக் குறியீடு

4.1.1 களவுப் புணர்ச்சிக் குறியீடு

4.1.1.1 விலங்கு கனியை உண்ணுதல்

4.1.1.2 விலங்கு இறைச்சியை உண்ணுதல்

4.1.1.3 ஊசல்

4.1.1.4 உரல் - உலக்கை

4.1.1.5 அருவி

4.1.1.6 புணர்ச்சி வேறுபாட்டை மறைத்தல்

4.2 வெறியாட்டு

4.3 அலருக்கான குறியீடுகள்

4.3.1 அலர் பரவுதல்

4.3.2 அலர் நீக்குதல்

4.3.3 உடன் போக்கு

4.4 வரைவு (திருமணம்)

4.4.1 சிலம்பு கழி நோன்பெனும் சடங்கு

4.4.2 மலரணிதல்

4.4.3 வதுவைச் சடங்கு

4.5 கற்புப் புணர்ச்சிக் குறியீடு

4.5.1 விலங்கு கனியை உண்ணுதல்

4.5.2 விலங்கு இறைச்சியை உண்ணுதல்

# 4. அகப்பாடல்களில் குறியீடுகள்

**முன்னுரை**

சங்க இலக்கிய அகப்பாடல்களில் மாந்தர்களின் உணர்வுகளும் எண்ணங்களும் மிக நுண்மையாக வெளிப்படுத்தப்பட்டுள்ளன. அகம் பற்றிய பாடலாகையால் அதனைப் பண்பாடு குறைவுபடாமல் உணர்த்தும் பொறுப்பு புலவர்க்கு இருந்திருக்கின்றது. எனவே, அகப்பாடல்களைப் பாடிய புலவர்கள் குறிப்பாகப் பொருளுணர்த்தும் குறியீடுகளைப் பயன்படுத்தினர் எனலாம். புலவர்கள் அவற்றை இயற்கைக் கருப்பொருள்களைக் கொண்டு நயமான மொழிகளால் பாடியுள்ளனர் என்பதை ஒவ்வொரு பாடலும் விளக்கி நிற்பதைக் காணலாம். குறியீடுகளாக விளங்கும் கருப்பொருள்கள் ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் அதே குறியீட்டுப் பொருளை ஏற்பதற்கு மனித உணர்வுகளோடு ஒத்திருத்தல், இயற்கைப் பொருள்களின் பண்புகளோடு ஒத்திருத்தல் ஆகியன காரணமாகின்றன.

அகத்திணைப் புலவர்கள் வாழ்வின் அனைத்து நிலைகளிலிருந்தும் குறியீடுகளைக் கண்டு வெளிப்படுத்தியுள்ளனர். தலைவன் வரைவு நீட்டிக்கும் போதும் பரத்தையர் ஒழுக்கத்தின் போதும் பிரிந்த தலைவனை எண்ணி ஆற்றி இருக்கும் இடங்களிலும் கடலுக்குள் சென்ற தலைவன் மீண்டும் வரும்வரை எதிர்நோக்கி இருக்கும்போதும் தலைவனின் பிரிவாற்றாமையாலும் தலைவியும் தோழியும் மன அளவில் பாதிப்புக்கு உள்ளாகின்றனர். அவர்கள் தமது எண்ணங்களையும் உணர்வுகளையும் தலைவனிடம் நேரடியாகக் கூறமுடியாத சூழல் ஏற்படுகிறது. வெளிப்படையாகக் கூறவும் இயலாது. எனவே தலைவனின் செயல்களையும்

அவற்றால் தாமடைந்த மனத்துயரினையும் குறிப்பாகவே வெளிப்படுத்தியாக வேண்டிய நிலை ஏற்படுகிறது. இந்த நெருக்கடியான சூழலில் அகமாந்தரைப் படைக்கும் புலவருக்குக் குறியீடுகள் உதவுகின்றன. ஒருவரது நடத்தையை அவர்தம் தவறுகளை வெளிப்படுத்த இயலாத, ஆனால் வெளிப்படுத்தியே ஆகவும் வேண்டிய கட்டாயச் சூழலில் குறியீடுகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. மேலும் தலைவியை பிரிந்திருக்கும் தலைவன் தன் ஆற்றாமையை வெளிப்படுத்தும் இடங்களிலும் தாய், உடன்போகிய மகள், அதாவது தலைவியை நினைந்து வருந்தும் இடங்களிலும் இயற்கை நிகழ்வுகள் குறியீடாக்கப்பட்டுள்ளன.

புணர்ச்சியை உணர்த்த விலங்குகள், பறவைகள் கனி உண்ணல், ஏர் உழுதல், பன்றி நிலம் தோண்டுதல், ஊசல் ஆடுதல், உரலை உலக்கைக் கொண்டு இடித்தல் ஆகியன குறியீடாக்கப்பட்டுள்ளன. யானை பிளிறல், போர் ஆரவாரம், மலர் மணம் பரப்புதல் போன்றவை அலர் பரவுதலுக்குக் காட்டப்படுகின்றன. பிரிவினை உணர்த்த பசு, தேரை ஆகியவற்றின் செயல்கள் குறியீடாக்கப்பட்டுள்ளன. தலைவன், தலைவியின் பண்பு நிலைகளைக் காட்ட மலை, அருவி, பூக்கள் போன்றவற்றினையும், முரண்பட்ட கருத்துகளைத் தெரிவிக்க இருளும் ஒளியும், கையுறை ஏற்றலும் மறுத்தலும் ஆகியன காட்டப்படுகின்றன.

## 4.1 புணர்ச்சிக் குறியீடு

ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் புணர்ந்ததனைச் சங்கப் புலவர்கள் குறியீடாக்கியிருக்கின்றனர். இது களவுப்புணர்ச்சிக்

குறியீடு, கற்புப்புணர்ச்சிக் குறியீடு என்று இரண்டுவகையாகப் பிரிக்கப்படுகின்றது.

### 4.1.1 களவுப் புணர்ச்சிக் குறியீடு

தலைவனும் தலைவியும் பிறர் கொடுப்பவும் அடுப்பவுமின்றி தாமே எதிர்ப்பட்டுக் கூடுவது களவு ஆகும். இவ்விருவரும் எதிர்ப்பட்ட வேளையில் வேட்கை மிகுதியால் புணர்வது களவுப் புணர்ச்சியாகும். இக்களவுக்காலப் புணர்ச்சியினைச் சுட்ட, விலங்கு கனியை உண்ணுதல், விலங்கு இறைச்சியை உண்ணுதல், ஊஞ்சலாடுதல், உரலை உலக்கைக் கொண்டு இடித்தல் ஆகியன குறியீடாக்கப்பட்டுள்ளன.

#### 4.1.1.1 விலங்கு கனியை உண்ணுதல்

கனி உலகியல் விருப்பங்களின் குறியீடாய்த் திகழ்கின்றது. சங்க இலக்கிய அகப்பாடல்களில் கனி உலகியல் இன்பமாகிய காதல் வேட்கையைக் குறிக்கும் குறியீடாகப் பல இடங்களில் ஆளப்படுகிறது.

இனிமை, மென்மை, இனப்பெருக்கத்துக்குரிய விதையைத் தன்னகத்தே கொண்டிருத்தல் ஆகிய பண்புகளால் கனி, பால் உறவு இன்பத்தைக் குறிக்கும் குறியீடாகியுள்ளது எனலாம்.

**பலா**

தோல்முழுக்க வேல் போன்ற காப்பு மிகுதியுடைமை; உள்ளே சுளைகளைச் சுற்றி பொதிந்த நாரின் பாதுகாப்பு; உயர்கிளையில் காய்த்துக் கனிந்து எட்டாக்கனியாக இருப்பது போன்றவை பலாவின் சிறப்புகள் ஆகும். சுவையும் மணமும் மிக்க பலநூறு சுளைகள் கொண்ட முள்ளை உடைய

பெரிய கனி பலா. கட்டுக்காவல்கள் கொண்ட காதல் இன்பத்தைச் சுட்டும் அழகிய குறியீடாகப் பலாக்கனி திகழ்கிறது எனலாம்.

*அப்பன் சொறியன் ஆத்தாள் சடைச்சி*
*அண்ணன் முழியன்*
*நான் சர்க்கரைக் குட்டி*

என வழங்கும் விடுகதை இங்கு குறியீட்டுத் தன்மையைக் குறிக்கிறது எனலாம். பெண்ணுடைய தந்தையின் புறக்காவலையும் தாயின் அகக் காவலையும் தமையன்மார் கூர் விழிகளையும் தாண்டி வந்தால் களவில் தலைவனுக்கு இன்பம் கிடைக்கிறது. முட்புறத் தோலும் உட்புறம் சுளையைத் தழுவிக் காத்து வரும் நாரும் முறையே தந்தையாகவும் தாயாகவும் இவ்விடுகதையில் குறிக்கப்படுகிறது பொருத்தமாகவே உள்ளது எனலாம். எனவே பலாக்கனி களவின்பத்தைக் குறிக்கும் குறியீடு எனத் தெளியலாம்.

**பசு : பலா = தலைவன் : தலைவி (துறை – மதியுடம்படுத்தல்)**

பலாவின் கொழுஞ்சுளை தின்ற சிவந்த பசு பகற்குறி புணர்ச்சிபெறும் களவுத் தலைவனைச் சுட்டுகிறது.

*அருவி ஆர்க்கும் பெருவரை நண்ணிக்*
*கன்றுகால் யாத்த மன்றப் பலவின்*
*வேர்க்கொண்டு தூங்குங் கொழுஞ்சுளைப் பெரும்பழம்*
*குழவிச் சேதா மாந்தி*

நற்: 213:1-4

தலைவன் இயற்கைப் புணர்ச்சிக்குப் பிறகு ஒரு நாள் தலைவியும் தோழியும் இருக்கும் இடத்திற்கு வருகிறான். இதற்குமுன்பு அவர்களை

அறியாதவன் போல அங்கு விளையாடிக் கொண்டிருக்கும் சிறுமிகளிடம், பெரிய மலைப்பக்கத்தில் உள்ள சிவந்த பசுவானது பலாமரத்தின் வேரிலே தொங்கக்கூடிய பலாவின் சுளையைத் தின்று குளிர்ந்த நீரைப் பருகும் சிறுகுடியோ நும்மூர் என்று கேட்கிறான். இதன்மூலம் தலைவன் அவர்களுக்குத் தாம் முன்பு புணர்ந்ததைக் குறிப்பாகச் சுட்டுகிறான். இங்கு உண்ணுதல் என்பது புணர்ச்சியைச் சுட்டும் குறியீடாகும். இதில் பசு தலைவனையும் பலா தலைவியையும் சுட்டும் குறியீடுகளாகின்றன.

**குரங்கு – பலா = தலைவன் : தலைவி (துறை – வரைவுகடாதல்)**

*சாரற் பலவின் சுளையொ டூழ்படு*
*பாறை நெடுஞ்சுனை விளைந்த தேற*
*லறியா துண்ட கடுவ னயலது*
*கறிவளர் சாந்த மேறல்செல் லாது*
*நறுவீ யடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்குங்*

அகம்: 2:3-7

களவுப் புணர்ச்சியில் தலைவி நலனுகர்ந்து அவ்வின்பத்தில் மயங்கி வரைதல் முயற்சியே இன்றி இருக்கிறான் தலைவன். வாழைக்கனியும் பலாவும் கனிந்து விழுந்து உண்டாகிய தேறல் பாறைச் சுனையில் தேங்கிக்கிடக்க, அதை அறியாதுண்ட கடுவன் அருகிலுள்ள மிளகு படரும் சந்தனமரத்தில் ஏறமாட்டாது மயங்கி உறங்கும் காட்சியைக் கூறி வரைவுகடாவுகிறாள் தோழி. இங்கு கடுவன் தலைவனைச் சுட்டும் குறியீடாய் அமைந்துள்ளது. சந்தன மரமானது பிற மரங்களின், செடிகளின் வேர்களிலிருந்து உணவைப் பெறவில்லையெனில் வைரம் பாயாது என்று பி.எல். சாமி குறிப்பிடுகிறார் (1967:6). திருமணம் செய்துகொள்ளும் எண்ணம் இல்லாது இருக்கும் தலைவனுக்கு இல்லற வாழ்வின் சிறப்பை

எண்ணாதிருக்கிறான் என்பதைச் சுட்ட மிளகுபடரும் சந்தன மரம் காட்டப்பட்டது.

**குரங்கு:வாழை = தலைவன்:தலைவி (துறை – செறிப்பு அறிவுறுத்தியது)**

*நெடுநீர் அருவிய கடும்பாட்டு ஆங்கண்*
*பிணிமுதல் அரைய பெருங்கல் வாழைக்*
*கொழுமுதல் ஆய்கனி மந்தி கவரும்*
*நன்மலை நாடனை .....*

நற்: 251:1-4

எனவரும் நற்றிணைப் பாடல் அருவி முழங்குமிடத்து வாழையின் அழகிய கனியை மந்தி கவரும் நிகழ்ச்சியானது, வெறியாட்டு நிகழும் ஆரவாரமிக்க இடத்தும் தலைவன் அஞ்சாது வந்து தலைவியின் நலம் நுகர்வான் என்பதைக் குறிப்பாக உணர்த்துகிறது. இதில் மந்தி தலைவனையும் வாழை தலைவியையும் சுட்டும் குறியீடுகளாகின்றன.

**யானை : வாழை=தலைவன் : தலைவி ( துறை - இரவுக்குறி வரக்கூறுதல்)**

விலங்குகளில் பெரியது யானை, பெருமித நடையும் பேராற்றலும் அறிவுக்கூர்மையும் உடையது. ஆண் யானை களிறு எனவும் பெண் யானை பிடி எனவும் அழைக்கப்படுகிறது. களிறு தலைமைப் பண்புகளுக்கெல்லாம் உரிய குறியீடாகப் பயின்று வந்துள்ளது.

பகற்குறி வரும் தலைவனை இரவுக்குறி வரும்படி தோழி கூறுகிறாள். இரவுக்குறி வரக்கூறுவதின் நோக்கம் விரைவில் மணந்துகொள்ளக் கூறுவதாகும். அதனால்தான் தன் தந்தைக்கு உரிய பாக்கத்திற்கு வரும்படிக் கூறுகிறாள்.

*சிறுகண் யானைப் பெருங்கை ஈரினம்*
*குளவித் தண்கயங் குழையத் தீண்டிச்*
*சோலை வாழை முனைஇ அயலது*
*வேரல் வேலிச் சிறுகுடி அலறச்*
*செங்கால் பலவின் தீம்பழ மிசையும்*
*மாமலை நாட தாமம் நல்கென*
*வேண்டுதும் வாழிய எந்தை வேங்கை*
*வீயுக விரிந்த முன்றில்*
*கல்கெழு பாக்கத்து அல்கினை செலினே*

நற்: 232

என்ற முறுவெங்கண்ணனாரின் நற்றிணைப் பாடலில் வாழைக்கனியை வெறுத்து பலாக்கனியை உண்ணும் களிறும் பிடியும் தலைவனையும் தலைவியையும் சுட்டும் குறியீடுகளாகின்றன. களவுப்புணர்ச்சியை நீக்கி இல்லறமாகிய கற்புவாழ்வில் இன்பம் பெறவேண்டும் என்று குறிப்பாக வரைவு கடாவுகிறாள் தோழி. வாழை களவின்பமும் பலா கற்பின்பமும் சுட்டும் குறியீடுகளாகும்.

**யானை : தினை = தலைவன் : தலைவி ( துறை - இரவுக்குறி வரக்கூறியது)**

களவுக்காலத்தில் காப்பு மிகுதியின் காரணமாக பகல்குறி வரும் தலைவனை இரவில் வரும்படி கூறுகிறாள் தோழி. இரவுக்குறி ஏதம்மிக்கதாயினும் அதனை வெல்லும் வலிமை தலைவனுக்கு இருக்கிறது என்பதை யானையின் வாயிலாகக் காட்டுகிறாள்.

*பனைத்திர ளன்ன பரேரெறுழ்த் தடக்கைக்*
*கொலைச்சினந் தவிர மதனுடை முன்பின்*
*வண்படு கடாஅத் துயர்மருப் பியனை*

*தண்கமழ் சிலம்பின் மரம்படத் தொலைச்சி*
*உறுபுலி யுரறக் குத்தி விறல்கடிந்து*
*சிறுதினைப் பெரும்புனம் வவ்வு நாட*

அகம்: 148:1-6

வலிமையான தும்பிக்கையும் உடல் வலிமையும் உடைய யானை தன் எதிரே வந்த புலியைக் கோட்டால் குத்தி துன்புறுத்திவிட்டு தினைப்புனத்தில் உள்ள தினையை உண்ணும் என்பது மனவலிமையும் உடல்வலிமையும் உடைய தலைவன் அலரொழித்து தலைவியை வரைந்து கொள்ளுதலைச் சுட்டியதாகும். தினையை உண்ணுதல் என்பது புணர்ச்சியைச் சுட்டியதாகும்.

தாய்மைப்பண்பு கருதி பெண்யானைக் குறியீட்டால் தலைவன் சுட்டப்படுதலும் உண்டு.

*கன்றுதன் பயமுலை மாந்த முன்றில்*
*தினைபிடி உண்ணும் பெருங்கல் நாட*

குறுந்: 225:1-2

என்ற இப்பாடலடிகள் கன்றும் பசியாலே வருந்தாதபடி ஊட்டிக் கொண்டே தனக்கு வேண்டிய தினையையும் பிடி உண்ணும் என்றது தலைவி பிரிவுத்துன்பம் உறாதவாறும் அதேசமயம் வரைவிற்கு வேண்டிய பொருளையும் ஈட்ட வேண்டும் என்ற கருத்தினைக் கொண்டது. இங்கு பிடி பொருளிடைப்பிரியும் தலைவனைச் சுட்டும் குறியீடாகியது.

**யானை : கொருக்கச்சி = தலைவன்:தலைவி (துறை-வரைவிடை ஆற்றாமை)**

பலவும் கூறுகவ.ஃ. தறியா தோரே
*அருவி தந்த நாட்குர லெருவை*

*கயனா டியானை கவள மாந்தும்*
*மலைகெழு நாடன் கேண்மை*

குறுந்: 170:1-4

என்ற குறுந்தொகைப் பாடலில் வரைவிடைப் பிரிந்த தலைவனை எண்ணி ஆற்றுவாளோ என்று தோழி கவலையுற்று இருக்கிறாள். அதற்குத் தலைவி 'நீ கவலைப்படாதே தலைவனுடைய நட்பைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். அவன் கண்டிப்பாக வரைந்து முயங்குவான்' என்று கூறுகிறாள். இதற்கு யானை அருவியில் வந்த கொருக்கச்சி மலரை உண்ணுதலைக் காட்டுகிறாள். இதில் யானை தலைவனுக்கு காட்டப்பட்ட குறியீடாகும். கொருக்கச்சி தலைவியைச் சுட்டிய குறியீடாகும்.

**நண்டு : நாவல் = தலைவன் : தலைவி ( துறை – குறைநயத்தல்)**

தலைவியைத் தன்னோடு கூட்டுவிக்க வேண்டுமென்ற தலைவனுக்கு உடன்பட்ட தோழி நண்டு நாவல் கனி உண்ணுதலைக் காட்டி தலைவன் விருப்பத்திற்கு இணங்குமாறு செய்கிறாள் தோழி.

*முன்னாட் போகிய துறைவன் நெருநை*
*அகலிலை நாவல் உண்டுறை உதிர்த்த*
*கனிகவின் சிதைய வாங்கிக் கொண்டுதன்*
*தாழை வேரளை வீழ்துணைக் கிடூஉம்*
*அலவற் காட்டி நற்பாற் றிதுவென*
*நினைந்த நெஞ்சமொடு நெடிதுபெயர்ந் தோனே*

அகம்: 380:3-8

தலைவியின் இன்பப் புணர்வை விரும்பும் தலைவனுக்கு நண்டு நாவற்கனி உண்ணுதலைத் தோழி காட்டியது காதலின்பக் குறியீடாகும். இங்கு நண்டு

தலைவனையும் நாவற்கனி தலைவியையும் உண்ணுதல் புணர்ச்சியையும் சுட்டும் குறியீடுகளாயின.

**பன்றி**

அஞ்சாமையும் மன உரமும் கொண்ட விலங்கு பன்றி. சங்க இலக்கியத்தில் காட்டுப் பன்றிக்குக் கேழல் என்ற பெயரே பல இடங்களில் வழங்கப்பட்டுள்ளது.

ஐங்குறுநூற்றுப் பாடல்கள் பன்றி நிலம் தோண்டுதலை உழுதல் எனக் குறிப்பிடுகின்றன. உழுதல் என்பது பாலியற்குறியீடாகும். எனவே பன்றி பாலியல் குறியீட்டுப் பொருண்மை பெற்றுள்ளது. மேலும் பன்றி இனப்பெருக்கக் கருவளம் மிக்க விலங்காக இருப்பதும் (பன்றிபலகுட்டி ஈனும்) அதன் பாலியற்குறியீட்டுப் பண்புக்குக் காரணமாக இருக்கலாம்.

**பன்றி : மலைநெல் = தலைவன் : தலைவி ( துறை – வரைவுகடாதல்)**

மலைவாழ் மக்களின் உழவுத் தொழிலுக்குத் தொல்லையாக வேலிதாண்டி இரவில் புனத்தில் விளைந்த தினையையும் கிழங்கையும் மேய்ந்து செல்லும் பன்றியின் செயல் பருவம் அடைந்த தலைவியின் பாதுகாக்கப்படும் நலனை இரவுத் தடைகளை விலக்கிப் பெறும் தலைவனைச் சுட்டியதாகும். இக்காரணங்களால் பன்றி களவுப் புணர்ச்சிபெறும் தலைவனைச் சுட்டும் பாலியற் குறியீடாகிறது.

*சிறுகட் பன்றி பெருஞ்சின ஒருத்தல்*
*துறுகல் அடுக்கத்து வில்லோர் மாற்றி*
*ஐவனம் கவரும் குன்ற நாடன்*

ஐங்: 267:1-3

இங்கு வில்லேந்தி புனம்காப்போரை ஏமாற்றி அவர்கள் விளைத்த மலைநெல்லைக் கவர்ந்த பன்றி தலைவனைச் சுட்டும் குறியீடாகியது. மலைநெல் தலைவியையும் புனம்காப்போர் பெற்றோரையும் சுட்டும் குறியீடுகளாகின்றன.

**வண்டு : மலர் = தலைவன் : தலைவி**

வண்டும் மலரும் ஒன்றும் தன்மை அகப்பொருளில் இன்பத் தழுவலையும் தழுவியதை நினைந்து வாழ்வதையும் உணர்த்தும். பூ மென்மையையும் தேன் இன்பத்தையும் குறித்தல் இலக்கியத்தில் ஒரு மரபாகும். இனிய தேனுண்டு மகரந்தச் சேர்க்கைக்கும் உதவுவதால் வண்டு தலைவனுக்குக் குறியீடாயிற்று எனலாம். களவில் தலைவியின் நலனுகரும் தலைவனை வண்டு குறிப்பிடுகிறது.

*காந்த ளூதிய மணிநிறத் தும்பி*
*தீந்தொடை நரம்பின் முரலும்*
*வான்றோய் வெற்பன் மார்பணங் கெனவே*

நற்: 17:10-13

*வண்டுமூசு நெய்தல் நெல்லிடை மலரும்*

நற்: 190-5

*பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த*
*தாதுண் பறவை பேதுறல் அஞ்சி*

அகம்: 4:10-11

*வண்பெயற்கு அவிழ்ந்த பைங்கொடி முல்லை*
*வீகமழ் நெடுவரி ஊதுவண்டு இரிய*

அகம்: 124:11-12

என்ற பாடலடிகளில் வரும் வண்டு தலைவனையும் பூ தலைவியையும் தேனுண்ணுதல் இன்பப் புணர்ச்சியையும் சுட்டும் குறியீடாகும்.

**கிளி : தினை = தலைவன்:தலைவி (துறை - இரவுக்குறி வாரற்க என்று அறிவுறுத்தியது)**

குறிஞ்சித் திணைக் கருப்பொருள் கிளி. இதன் தினையை உண்ணும் செயல் தலைவன் தலைவியின் நலன் துய்த்தலின் பாலியல் குறியீடாக அகப்பாடல்களில் இடம் பெறுகிறது.

*சாரற் புறத்த பெருங்குரற் சிறுதினைப்*
*பேரமர் மழைக்கண் கொடிச்சி கடியவும்*
*சோலை சிறுகிளி உண்ணும் நாட*
*ஆரிருள் பெருகின வாரல் -*
*கோட்டுமா வழங்கும் காட்டக நெறியே*

ஐங்: 282

என்ற இப்பாடலில் தினை தலைவியையும், கிளி தலைவனையும், கொடிச்சி தோழியையும் காட்டிய குறியீடுகளாகும். இரவுக்குறி வந்து புணர்ந்து நீங்கும் தலைவனுக்கு வரும் ஏதம் கூறி வரவேண்டாம் என்று கூறும் தோழி கூற்றுப் பாடலாகும். இதில் கிளி தினையை உண்ணுதல் புணர்ச்சி செயலைக் காட்டும் குறியீடாகி உள்ளது.

### 4.1.1.2 விலங்கு இறைச்சியை உண்ணுதல்

**புலி : யானைக்குட்டி = தலைவன்:தலைவி (துறை—வரைவு நீட்டித்தவிடத்து)**

*குறுங்கை இரும்புலிக் கோள் வல் என்ற*
*நெடும் புதல் கானத்து மடப்பிடி ஈன்ற*
*நெடுங்கு நடைக் குழவி கொளீஇய பலவின்*

*பழம் தூங்கு கொழுநிழல் ஒளிக்கும் நாடற்கு*
ஐங்: 216:1-4

என்ற இப்பாடலில் புலியேறு பிடியீன்ற குழவியைக் கொல்ல வேண்டிக் காலம் பார்த்து மறைந்திருக்கும் நாடன் என்றது தலைவன் தன் வஞ்சனையால் தலைவியின் பெண்மையை நுகரும் தன்மையைக் கொண்டதாகும். இதில் புலி தலைவனுக்கும் மடப்பிடி தலைவிக்கும் பிடி ஈன்ற குட்டி தலைவியின் பருவத்துக்கும் குறியீடுகளாகின்றன.

**கரடி**

கரடி காடுகளிலும் மலைப்பகுதிகளிலும் மிகுதியாய்க் காணப்படும் விலங்கு. முன்னங்கால்களைக் கைகளைப்போல பயன்படுத்தவும் மனிதர் போலவே தம் பின்னங்கால்கள் இரண்டால் நடக்கவும் இதனால் முடியும். சங்க இலக்கியத்தில் எண்கு, உளியம் என்ற பெயர்களே கரடியின் பெயர்களாக வழங்கின.

ஆசையும் அவசரமும் மிக்கத் தலைவன் தன்மீது அன்புகொண்ட தலைவியை இடர்ப்பாடுகளுக்காளாக்கும் இரவு சந்திப்புகளில் ஈடுபாடு காட்டுகிறான்.

மணம்புரிந்துகொண்டால் தன் இல்லத்தில் இன்பத்தை வேண்டும்போது துய்க்கலாம் என்ற அடிப்படையறிவுகூட இல்லாத பக்குவமற்றவன் போல் நடந்துகொள்கிறான்.

*கள்ளடு குழிசியுங் கழிமுடை நாற்றமும்*
*வெள்ளென் புனங்கலும் விரவி இருக்கையாய்*
*யெண்குதன் பிணவோடிருந்தது போல*
மணிமேகலை 16 ஆதிரைபிச்சையிட்டகாதை

என்று நாகரிகமற்ற நாகர்கள் கரடிபோல இருந்ததாக மணிமேகலை கூறுகிறது.

இன்றும் அழகற்றும் முடிநீண்டு வளர்ந்தும் இருப்பவரை கண்டால் கரடி போல இருக்கிறான் என்று கூறுவதுண்டு. எனவே இத்தகைய பக்குவமில்லாத தன்மையுடைய கரடியின் செயல்கள் மூலம் தலைவனைச் சுட்டும் பண்பு சங்கப் புலவரின் குறியீட்டாட்சியை வரைவுகடாவும் களவுப்பாடல்களில் பல இடங்களில் காண முடிகிறது. ஈயல் புற்றில் புற்றாஞ் சோற்றை உண்டு அலையும் கூனல் எண்கினுடைய செயலின் மூலம் தலைவனைச் சுட்டுவதை இங்குக் காணலாம்.

**கரடி : பாம்பு = தலைவன்:தலைவி (துறை – வரைவு நீட்டித்தவிடத்து)**

கரடி புற்றகழ்தலும் அதன் கூர்நகம்பட்டு பாம்பு வருந்துவதும் கூறப்படும் பாடல்களில் கரடியும் பாம்பும் குறியீடுகளாக்கப்பட்டுள்ளன. கரடி இரையுண்ணும் போது புற்றிலே கிடந்த பாம்பு நடுங்கும் என்பது வரையாது இரவுக்குறி வரும் தலைவனை எண்ணி வருந்திய தலைவியைச் சுட்டியதாகும்.

*இரைதேர் எண்கின் பகுவாய் ஏற்றை*
*கொடுவரிப் புற்றம் வாய்ப்ப வாங்கி*
*நல்லரா நடுங்க உரறிக் கொல்லன்*
*ஊதுலைக் குருகின் உள்ளுயிர்த்து அகழும்*
*நடுநாள் வருதல் அஞ்சுதும் யாமென*

நற்றி: 125:1-5

என்ற நற்றிணைப் பாடலிலும்

*ஈயற் புற்றத் தீர்ம்புறத் திறுத்த*
*குறும்பி வல்சிப் பெருங்கை யேற்றை*

*தூங்குதோற் றுதிய வள்ளுகிற் கதுவலிற்*
*பாம்புமத னழியும் பானாட் கங்குலு*

அகம்: 8:1-4

என்ற அகநானூற்றுப் பாடலிலும் கரடி தலைவனையும் பாம்பு தலைவியையும் சுட்டும் குறியீடுகளாயின.

**கரடி : பாம்பு = தலைவன் : தலைவி ( துறை – வரைவு நீட்டித்தவிடத்து)**

*கூனல் எண்கின் குறுநடைத் தொழுதி*
*சிதலை செய்த செந்நிலைப் புற்றின்*
*மண்புனை நெடுங்கோடு உடைய வாங்கி*
*இரைநசைஇப் பரிக்கும் அரைநாட் கங்குல்*
*ஈன்றணி வயவுப்பிணப் பசித்தென மறப்புலி*
*ஒளிறேந்து மருப்பின் களிறட்டுக் குழுமும்*
*பனியிருஞ் சோலை யெமியம் என்னாய்*

அகம்: 112:1-8

குட்டி ஈன்ற பிணவுக்காகப் புலி களிறட்டுக் குழுமும் காட்டு வழியில் வந்த தலைவனைத் 'தீங்கு செய்தனை' என்று கடிந்து வரைவுகடாவும் தோழி கூற்றில் கரடி தலைவனைச் சுட்டும் குறியீடாக ஆளப்பட்டுள்ளது. இரவுக்குறிக் களவு பெருமைக்குரியதன்று, மணம் புரிந்து இன்புறுதலே அறத்தின் வழியது என்னும் கருத்தை உணர்த்தவே புற்றகழும் கரடி இங்கு தலைவனுக்குக் குறியீடாகியது.

**நீர்நாய் : மீன் = தலைவன் : தலைவி ( துறை – வரைவுகடாயது)**

*அருளா யாகலோ கொடிதே இருங்கழிக்*
*குருளை நீர்நாய் கொழுமீன் மாந்தித்*
*தில்லையம் பொதும்பிற் பள்ளி கொள்ளும்*

நற்: 195:1-3

என்ற நற்றிணையடிகள் நீர்நாய் தான் விரும்பியபடி மீனைத் தின்று பொந்துகளில் உறைந்து கொள்வது என்பது தலைவியின் நலன் துய்த்து வரையாது இருக்கும் தலைவனைக் காட்டவந்த குறியீடாகும். இங்கு நீர்நாய் களவுப் புணர்ச்சி மேற்கொண்ட தலைவனைச் சுட்டியது. மீன் தலைவியையும், உண்ணுதல் புணர்ச்சியையும் சுட்டும் குறியீடுகளாகும்.

**கொக்கு : நண்டு = அயலோர் : தலைவி (துறை - வரைவு நீட்டித்தவிடத்து)**

*மாரி ஆம்ப லன்ன கொக்கின்*
*பார்வல் அஞ்சிய பருவரல் ஈர்ஞெண்டு*
*கண்டல் வேரளைச் சொலீஇயர் அண்டர்*
*கயிறரி யெருத்திற் கதழுந் துறைவன்*
*வாரா தமையினும் அமைக*
*சிறியவும் உளவீண்டு விலைஞர்கை வளையே*

குறுந்: 117

என்ற குறுந்தொகைப் பாடலடிகளில் வரும் நண்டு கொக்கின் பார்வைக்கு அஞ்சி வளைபுகும் என்று அதன் செயலைக் குறிப்பிடுகிறது. இது களவு மேற்கொண்ட தலைவன் வரைவு மேற்கொள்ளாததால் அதனை அறிந்து அயலோர் அலர் தூற்றுவதற்கு முன் தலைவனை மணந்து அவன் மனை புக விழையும் தலைவியைச் சுட்டிய குறியீடாக நண்டு குறிப்பிடப்படுகிறது.

### 4.1.1.3 ஊசல்

ஊசலாடுதல் மகளிர் விளையாட்டுகளில் ஒன்று. இதனைச் சங்கப்புலவர் குறியீட்டுப் பொருளில் கையாண்டுள்ளனர். மரத்தில் கயிற்றால் கட்டிய ஊசலில் முன்னும் பின்னும் சென்று வரும் விளையாட்டில் ஆடி

மகிழ்வா் மகளிா். இந்த ஊசல் பாலுறவைக் குறிக்கும் குறியீடாகச் சங்கப்பாடலில் இடம் பெற்றுள்ளதைக் காண முடிகிறது.

*பெரும்புனம் கவருஞ் சிறுகிளி ஓப்பிக்*
*கருங்கால் வேங்கை ஊசல் துங்கிக்*
*கோடேந்து அல்குல் தழையணிந்து உம்மோடு*
*ஆடினம் வருதலின் இனியதும் உண்டோ*
*நெறிபடு கூழைக் கார்முதிர்பு இருந்த*
*வெறிகமழ் கொண்ட நாற்றமுஞ் சிறிய*

நற்: 368:1-6

வேங்கை மரத்தில் ஊசல் ஆடியது புணா்ச்சியையும் கூந்தல் வெறிமணம் களவில் புணா்ந்ததையும் சுட்டும் குறியீடுகள் ஆகின்றன.

தலைவி இற்செறிக்கப்பட்டதால் அவளுக்குத் தலைவனைக் காணவும் முயங்கவும் முடியாமல் போகிறது. இந்தச் சூழலில் சிறைப்புறம் இருக்கும் தலைவனுக்குக் கேட்குமாறு கூறுகிறாள் தோழி. நான் உன்னை ஊசலில் வைத்து ஆட்டுகிறேன். நீ உயரப்போகும்போது அவனது மலையைக் கண்டு மகிழ்வாயாக என்று கூறுகிறாள்.

*கருங்கால் வேங்கை செவ்வீ வாங்குசினை*
*வடுக்கொளப் பிணித்த விடுமுரி முரற்சிக்*
*கைபுனை சிறுநெறி வாங்கிப் பையென*
*விசும்பாடு ஆய்மயில் கடுப்பயான் இன்று*
*பசுங்கா ழல்குல் பற்றுவான் ஊக்கிச்*
*செலவுடன் விடுகோ தோழி*

நற்: 222:1-6

இங்கு ஊசல் என்பது காதலரின் புணா்ச்சியைச் சுட்டும் குறியீடாக வந்துள்ளது.

மந்திகள் ஊசலாடுவதும் கூட குறிப்பாகத் தலைவன் தலைவி புணர்ச்சியைச் சுட்டும் குறியீடாகும்.

*கருவிரல் மந்திச் செம்முகப் பெருங்கிளை*
*பெருவரை அடுக்கத்து அருவி ஆடி*
*ஓங்குகழை ஊசல் தூங்கி வேங்கை*
*வெற்பணி நறுவீ கற்சுனை உறைப்பக்*
*கலையொடு திளைக்கும் வரையக நாடன்*

நற்: 334:1:-5

என்ற இப்பாடல் பெருங் கூட்டமாகிய குரங்குகளைத் தன் சுற்றமாக உடைய பெண்குரங்கு அருவியில் ஆடியும் மூங்கில் கிளையில் ஊசலாடியும் கடுவனோடு திளைத்தது என்பது பெருஞ்சினமும் கட்டுக்காவலுடைய சுற்றத்தையும் கொண்ட தலைவியைப் புணர வரும் தலைவனைச் சுட்டும் குறியீடாகும். இப்பாடலில் கடுவன் - தலைவன், மந்தி - தலைவி, ஊசலாடுதல் - புணர்ச்சி, குரங்குக் கூட்டம் - சுற்றம் என்ற குறியீட்டமைவினைக் கொண்டுள்ளது.

இங்கு வேங்கை மரம் மணம் நிகழுவதன் தேவையைச் சுட்ட வந்தது எனலாம். அந்தக்காலத்தில் திருமணம் போன்ற மங்களச் சடங்குகளைப் பரந்து விரிந்திருக்கும் வேங்கை மரநிழலில் செய்வது வழக்கம். மேலும் வேங்கைப் பூ மலருகின்ற காலம் தினை அரியப்படும் காலம் ஆகையால் தினைப்புனம் காக்க தலைவி இனி வீட்டைக் கடந்து வெளியே வருவது கடினம். ஆகையால் தலைவியைத் திருமணம் செய்து கொள்வதுதான் சிறந்தது என்ற கருத்திற்கு இக்காட்சியினைப் புலவர்கள் பயன்படுத்துவர் என்ற சேவியர் தனிநாயகத்தின் Nature in ancient tamil poetry என்ற நூலின் கருத்தை இரா. சீதா சுட்டுகிறார் (1998:210).

### 4.1.1.4 உரல் - உலக்கை

உலக்கை இடித்துக் கொண்டே மகளிர் பாடும் பாடல் வள்ளைப் பாடலாகும். வள்ளைப்பாடல் பற்றிய செய்திகள் அக இலக்கியத்தில் காணப்படுகின்றன. மகளிர் தமக்கு மிக விருப்பமான ஆடவர் மீது வள்ளை பாடுவராம்.

*முகைவளர் சாந்துரல் முத்தார் மருப்பின்*
*வகைசால் உலக்கை வயின்வயின் ஒச்சிப்*
*பகையில்நோய் செய்தான் பயமலை யேத்தி*
*அகவினம் பாடுவம் நாம்*

கலித்: 40:4-7

*சாந்த மரத்தின் இயன்ற உலக்கையால்*
*ஐவன வெண்ணெல் அரையுரலுட் பெய்திருவாம்*
*ஐயனை ஏத்துவாம் போல அணிபெற்ற*
*மைபடு சென்னிப் பயமலை நாடனைத்*
*தையலாய் பாடுவம் நாம்*

கலித்: 43:3-7

என்ற இக்கலிப் பாடல்களில் இடம்பெறும் உலக்கை பாலுறவைச் சுட்டித் தலைவனைக் குறிக்கும் குறியீடாக வந்துள்ளமையைக் காணலாம். இதே போன்று குறுந்தொகைப் பாடலிலும் பாலுறவைக் குறிக்கும் குறியீடாக உலக்கை வந்துள்ளது.

*பாவடி உரல பகுவாய் வள்ளை*
*ஏதின் மாக்கள் நுவறலும் நுவல்ப*

குறுந்: 89:1-2

என்ற இக்குறுந்தொகைப் பாடலில தலைவனை நினைத்துப் பாடியதால்

அதைக்கேட்ட ஊர் மக்கள் அலர் தூற்றலாயினர் என்று கூறுவதிலிருந்து அறிய முடிகின்றது.

### 4.1.1.5 அருவி

மலையில் மழை பொழிந்தால் மலை தூவெள்ளருவி சூடிப் பொலிகிறது. எனவே தலைமக்களின் தவறாத அகவாழ்வு நேர்மைக்கு அருவி குறியீடாகிறது. அருவி தலைவனின் சூள்பொய்யாமை, பேரன்பு ஆகியவற்றுக்கும் புணர்ச்சிக்கும் குறியீடாகத் திகழ்கிறது. அருவி புணர்ச்சியின் குறியீடாகிறது.

*நெஞ்சுடம் படுதலின் ஒன்று புரிந்தடங்கி*
*இரவின் வரூஉம் இடும்பை நீங்க*
*வரையக் கருதும் ஆயின் பெரிதுவந்து*
*ஓங்குவரை யிழிதரும் வீங்குபெயல் நீத்தம்*
*காந்தளஞ் சிறுகுடிக் கௌவை பேணாது*
*அரிதமர் மழைக்கண் சிவப்ப நாளைப்*
*பெருமலை நாடன் மார்புபணை யாக*
*ஆடுகம் வம்மோ காதலந்தோழி*

அகம்: 312:1-8

என்ற பாடலில் தலைவி சிறைப்புறத் தலைவனிடம், வரைவுக்கு உடன்பட்டாயாயின், இன்றே ஊரார் தூற்றும் அலருக்கும் அஞ்சாது மழையால் உண்டான அருவி வெள்ளத்தில் உன் மார்பே தெப்பமாகக் கொண்டு ஆட வருகுவேன் என்று கூறுவதிலிருந்து அறியமுடிகிறது. இங்கு வெள்ளம் காமத்தையும் அருவியில் ஆடுதல் என்பது புணர்ச்சியையும் காட்டும் குறியீடுகளாகும்.

*காமம் ஒழிவ தாயினும் யாமத்துக்*
*கருவி மாமழை வீழ்ந்தென அருவி*
*விடரகத் தியம்பு நாடவெம்*
*தொடர்புந் தேயுமா நின்வயி னானே*

குறுந்: 42

என்ற இப்பாடலில் நள்ளிரவில் மலையில் பெய்த மழை மறுநாள் அருவியாக வெளிப்படுவது போலத் தலைவனின் மறைப் புணர்ச்சி தலைவியின் உடல் வேறுபாட்டால் அறியமுடியும். எனவே இங்கு அருவி புணர்ச்சி சுட்டும் குறியீடாகிறது

### 4.1.1.6 புணர்ச்சி வேறுபாட்டை மறைத்தல்

தலைவி தன் உடல் வேறுபாட்டை இல்லத்தார் அறியாத வண்ணம் மறைத்தாள் என்பதைக் குரங்கின் வழியாகக் கூறி வரைவு கடாவும் தோழி.

*.......................................கடுவன்*
*முறியார் பெருங்கிளை அறிதல் அஞ்சிக்*
*கறிவளர் அடுக்கத்தில் களவினில் புணர்ந்த*
*செம்முக மந்தி செல்குறி கருங்கால்*
*பொன் இணர் வேங்கைப் பூஞ்சினைச் செலீஇயர்*
*குண்டு நீர் நெடுஞ்சினை நோக்கிக் கவிழ்துதன்*
*புன்றலைப் பாருமயிர் திருத்துங்*
*குன்ற நாடன் இரவி னானே.*

நற்: 151:5-11

என்று கூறுகிறாள். களவினில் புணரப்பட்ட மந்தி அப்புணர்குறியைத் தன் சுற்றம் நோக்குமென்று அஞ்சிப் பாறுமயிர் திருத்தும் என்பது களவொழுக்கத்தால் புணரப்பட்ட தலைமகள் புணர்ச்சி வேறுபாட்டைத் தன் சுற்றத்தார் அறியாதவாறு மெய்திருத்திக்கொள்வாள் என்பதற்குக்

காட்டப்பட்டதாகும். இங்கு களவினில் புணரப்பட்ட மந்தி தலைவியையும் கடுவன் தலைவனையும் சுட்டும் குறியீடாக அமைந்திருப்பதைக் காண முடிகிறது.

## 4.2 வெறியாட்டு

தினைப்புனக் காவலுக்குச் சென்று காதலில் வீழ்ந்த தலைவியின் உடற்கூறுகளில் தலைவனின் உறவாலும் பிரிவாலும் வேறுபாடுகள் தோன்றும். இவற்றைக் கூர்ந்து ஆராயும் தாய் முதலியோர் கட்டுவிச்சியிடம் குறிகேட்பர். அவள் தெய்வம் அணங்கியது என்பாள். வெறியாடும் வேலனை அழைத்து முருகனுக்குத் தினைக்கதிர் படைத்து மாலை சூட்டி மறியறுத்துப் பலிகொடுத்துத் துயர்தீர்க்க முயல்வர். இச்செயல் வெறியாட்டெடுத்தல் எனப்படும். வெறியாட்டு என்ற சமயஞ்சார்ந்த சடங்கு சிறந்த அகத்திணை குறியீடாக சங்க இலக்கியத்தில் இடம் பெறுதலை அறிய முடிகின்றது.

*முருகயர்ந் துவந்த முதுவாய் வேல*
*சினவ லோம்புமதி வினவுவ துடையேன்*
*பல்வே றுருவிற் சில்லவிழ் மடையொடு*
*சிறுமறி கொன்றிவள் நறுநுதல் நீவி*
*வணங்கினை கொடுத்தி யாயின் அணங்கிய*
*விண்தோய் மாமலைச் சிலம்பன்*
*ஒண்தார் அகலமும் உண்ணுமோ பலியே*

குறுந்: 362

என்ற குறுந்தொகைப் பாடலில் இற்செறிக்கப்பட்டத் தலைவிக்கு ஏற்பட்ட உடல்வேறுபாட்டை அறிந்த செவிலி வெறியாட்டெடுக்கிறாள். வெறியெடுக்கும் வேலனிடம் தோழி, ஆட்டினைக் கொன்று அதன் குருதி தோய்ந்த மண்ணைத் தலைவியின் நுதலிலே தடவி வணங்குகின்றாயே அப்பலியை

ஏற்று மார்பின் சுணங்கு நோய் மாறுமா என்று கேட்கிறாள். இதில் தோழி குறிப்பாக அறத்தொடு நிற்பதை அறியமுடியும்.

கூறாய் தோழி செய்வது வேறுணர்ந்து
*அன்னையும் பொருளுகுத் தலமரும் மென்முறிச்*
*சிறுகுள கருந்து தாய்முலை பெறாஅ*
*மறிகொலைப் படுத்தல் வேண்டி வெறிபுரி*
*ஏதில் வேலன்......................*

அகம்: 292:1-5

என்ற பாடலில் தாய்முலை பெறாத ஆட்டுக்குட்டி தலைவனைப் பெறாது பிரிவில் சிறுகச் சிறுக உடல் மெலியும் தலைவியைச் சுட்டும் குறியீடாக வந்துள்ளது. தலைவனோடு கொண்ட நட்பை அறியாத அன்னை, வேலனைக் கொண்டு வெறியெடுக்கத் தயாராகிறாள். இதனைத் தலைவனுக்கு தோழி ஆட்டுக்குட்டியின் மூலம் குறிப்பாகத் தெரிவிக்கிறாள்.

*பெய்ம்மணல் முற்றங் கடிகொண்டு*
*மெய்ம்மலி கழங்கின் வேலற் றந்தே*

நற்: 268:8-9

*வளநகர் சிலம்பப் பாடிப் பலிகொடுத்*
*துருவச் செந்தினை குருதியொடு தூஉய்*
*முருகாற்றுப் படுத்த வுருகெழு நடுநா*

அகம்: 22:9-11

*செல்வன் பெரும்பெயர் ஏத்தி வேலன்*
*வெறியார் வியன்களம் பொற்ப வல்லோன்*

அகம்: 98:18-19

போன்ற பாடல்களில் வெறி பற்றி விரிவாகப் பாடியதால் அப்பெண்பாற் புலவர் வெறிபாடிய காமக்கண்ணியார் எனப் பெயர் பெற்றார்.

களவில் தலைவி தலைமகனைப் புணர்ந்ததையும் அதனால் அவள் உடற்கூறு, நடத்தை, உளவியல், இவற்றிலேற்படும் பாலியல் தொடர்பான வேறுபாடுகளையும் நாகரிகமாக உணர்த்த வெறியாட்டு உதவுகிறது எனலாம்.

## 4.3 அலருக்கான குறியீடுகள்

தலைவன் தலைவியரின் களவு வாழ்க்கை ஊரார் அறிய வெளிப்படுவது அலராகும். இவ்வலருக்கான குறியீடுகள் அலர் பரவுதல், அலர் நீக்குதல் என்று இருவகையாகப் பிரிக்கப்பட்டு விளக்கப்படுகிறது. மலரின் மணம் பரவுதல், கனியின் மணம் பரவுதல், போர் ஆரவாரம் ஆகியவை அலர் பரவியதற்கான குறியீடுகள் ஆகும். புலவு நாற்றத்தை மலர் மணம் போக்குதல், நண்டைக் கடலலை ஏந்திச் செல்லுதல் ஆகியவை அலர் நீக்கியதற்கான குறியீடுகளாகும். இக்குறியீடுகள் பற்றி இங்கு விரிவாகக் காணலாம்.

### 4.3.1 அலர் பரவுதல்

துலைவன், தலைவி களவுச் செய்தி ஊர்ப்பெண்டிர் காதோடு பேசிக் கொள்வது தலைவி மனதை வருத்தும். ஊர்மகளிர் தூற்றும் பழியுரை தலைவிக்கும் தோழிக்கும் கடலோசையினும் பெரிதாயும் அருவியொலியினும் அரவமிக்கதாயும் தோன்றும். அலரை உணர்த்தப் பூவின் மணம், கனியின் மணம், ஊனின் நாற்றம், போரின் ஆரவாரம் ஆகியவற்றைக் குறியீடாக்கியிருக்கின்றனர்.

#### மலரின் மணம்

மலர் மலர்ந்து காற்றில் மணம் பரப்புவது அலர் பரவுதலைக் காட்டும்.

தலைவியின் உடல் வேறுபாடு கண்டு இற்செறிக்கப்பட்டதை தோழி சிறைப்புறத் தலைவனிடம் இவ்வாறு கூறுகிறாள்.

**நண்டு:ஞாழல்:மனம் = ஏதிலாட்டியர்:தலைவி:அலர் (துறை – சிறைப்புறம்)**

*நொச்சி மாஅரும் பன்ன கண்ண*
*எக்கர் ஞெண்டின் இருங்கிளைத் தொழுதி*
*இலங்கெயிற்று ஏஎர் இன்நகை மகளிர்*
*உணங்குதினை துழவும் கைபோன் ஞாழல்*
*மணங்கமழ் நறுவீ வரிக்குந் துறைவன்*

நற்: 267:1-5

என்ற இப்பாடலில் மணம் கமழும் ஞாழல் பூவை நண்டு துழவும் என்றது தலைவன் தலைவியரின் காதலை அறிந்த ஏதிலாட்டியர் அலர் தூற்றினர் என்பதைக் காட்டும் குறியீடாகும். இங்கு ஞாழல் பூவின் மணம் அலருக்கும் நண்டு ஏதிலாட்டியர்க்கும் குறியீடாக்கப்பட்டுள்ளன.

### பலாவின் மணம்

**கலை:பலா:மணம்தலைவன்:தலைவி:அலர் (துறை–செறிப்பு அறிவுறுத்தியது)**

பலாப்பழத்தைக் குரங்கு தோண்டியதால் காடு கமழ்தல் அலர் பரவியதைக் குறிக்கும் குறியீடாகிறது.

*கலைகை தொட்ட கமழ்சுளைப் பெரும்பழம்*
*காவல் மறந்த கானவன் ஞாங்கர்க்*
*கடியுடை மரம்தொறும் படுவலை மாட்டும்*

குறுந்: 342:1-4

என்று கூறி உணர்த்துகிறாள். இதில் கலை பலாக்கனியைத் தொட்டதால் எழுந்த மணம் எங்கும் பரவியது என்பது அலரைக் குறித்தது. கானவன்

கனியைத் தொடாதவாறு வலைமாட்டியது தலைவியை இற்செறித்தலைக் குறிக்கிறது இப்பாடல். கலை தலைவனாகவும் பலாக்கனி தலைவி, கானவன் பெற்றோர், வலைமாட்டுதல் இற்செறிக்கப்படுதல் என்ற குறியீட்டமைவினைக் கொண்டுள்ளது.

*கடும்பல் ஊகக் கறைவிரல் ஏற்றை*
*புடைத்தொடு புடைஇப் பூநாறு பலவுக்கனி*
*காந்தளஞ் சிறுகுடிக் கமழும்*

குறுந்: 373:5-7

குரங்கு தோண்டிய பலாக்கனி சிறுகுடியின்கண் சென்று கமழும் என்றது தலைவனோடு கொண்ட நட்பு ஊரவர் அறிய வெளிப்பட்டதற்குக் காட்டப்பட்டதாகும். இங்கு அலர் பரவியது பலாக்கனி வாயிலாகக் கூறப்பட்டுள்ளது.

### புலவு நாற்றம்

**புலி:பன்றி:நாற்றம் = தலைவன்:தலைவி:அலர் (துறை – சிறைப்புறம்)**

புலி அலரை உண்டாக்கிய தலைவனைக் குறிக்கும் குறியீடாகப் பல பாடல்களில் வந்துள்ளது. புலி பன்றியை வீழ்த்திப் பலாக்காடு புலவு நாறும்படி அப்பன்றியை இழுத்துச்செல்லுதல்

*கேழ லட்ட பேழ்வா யேற்றை*
*பலாவம லடுக்கம் புலவ வீக்குங்*

அகம்: 8:6-7

என்ற பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. பலா மணம் கமழும் பக்க மலை புலவு நாறும்படி புலி பன்றியை இழுத்துச் சென்றது தலைவியின் நலன்

துய்த்ததை அறிந்த ஊரார் அலர் தூற்றினர் என்பதைக் காட்டுகிறது. இங்கு புலி தலைவனையும், பன்றி தலைவியையும் நாற்றம் அலரையும் குறிக்கும் குறியீடாகின்றன.

**கொக்கு:மீன்:நாற்றம் = தலைவன்:தலைவி:அலர் (துறை—வரைவுகடாதல்)**

*கொழுஞ்சுளைப் பலவின் பயங்கெழு கவாஅன்*
*செழுங்கோள் வாங்கிய மாச்சினைக் கொக்கின்*
*மீன்குடை நாற்றம் தாங்கல்செல் லாது*
*துய்த்தலை மந்தி தும்மும் நாட*

நற்: 326:1-4

என்ற பாடலில் கொக்கு தலைவனையும், அது குடைந்து உண்ட மீன் தலைவி தந்த புணர்ச்சியின்பத்தையும் நாற்றம் அலரெடுத்ததையும் மந்தி தும்முதல் அன்னை வெகுண்டு காப்பு மிகுதி செய்தலையும் குறித்தன.

## போர் ஆரவாரம் : அலர்

*தோளும் தொல்கவின் தொலைந்தன நாளும்*
*அன்னையும் அருந்துயர் உற்றனள் அலரே*
*பொன்னணி நெடுந்தேர்த் தென்னர் கோமான்*
*எழுவுறழ் திணிதோள் இயல்தேர்ச் செழியன்*
*நேரா எழுவர் அடிப்படக் கடந்த*
*ஆலங் கானத்து ஆர்பினும் பெரிதென*
*ஆழல் வாழி தோழி அவரே*

அகம்: 209:1-7

பாண்டியன் நெடுஞ்செழியன் எழுவரை வென்ற ஆலங்கானத்து ஆர்ப்பினும் பெரியது என்று தலைவியின் பால் உண்டான அலரை இவ்வாறு கல்லாடனார் குறிப்பிடுகிறார்.

*ஆடினை யென்ப நெருநை அலரே*
*காய்சின மொய்ம்பிற் பெரும்பெயர்க் கரிகால்*

பரத்தையொழுக்கம் கொண்ட தலைவன் பரத்தையுடன் பொழிலினும், நீரிலும் ஆடியதனால் எழுந்த அலரைப் பரணர் குறிப்பிடுகிறார்.

*ஆர்கலி நறவின் வெண்ணி வாயில்*
*சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்*
*இமிழிசை முரசம் பொருகளத் தொழியப்*
*பதினொரு வேளிரொடு வேந்தர் சாய*
*மொய்வலி யறுத்த ஞான்றைத்*
*தொய்யா அழுந்தூர் ஆர்ப்பினும் பெரிதே*

அகம்: 246:7:14

கரிகால் மன்னன் வெண்ணிப் போர்க்களத்தில் பதினொரு வேளிர் என்னும் குறுநிலமன்னரையும் சேரனையும் பாண்டியனையும் ஒருசேரவென்று வாகை சூடினான். அப்பொழுது அழுந்தூர் என்னுமிடத்தே எழுந்த ஆரவாரத்தைவிட உம்பால் ஏற்பட்ட அலர் பெரியதாக இருந்தது என்று கூறி தோழி தலைவனுக்கு வாயில் மறுக்கிறாள்.

### 4.3.2 அலர் நீக்குதல்

**புலவுநாற்றம்:மலர்மணம் = அலர்:திருமணம் (துறை – வரைவு கடாதல்)**

புலவு நாற்றத்தை மலர் மணம் போக்குதல் என்பது அலர்நீங்க வரைந்து கொள்ளுலை உணர்த்தும் குறியீடாகும். களவொழுக்கத் தலைவன் வரைவு நீட்டித்தலால் ஊரில் எழுந்த அலரைக் கூறி தோழி வரைவு கடாவுகிறாள்.

*முழங்குதிரைக் கொழீஇய மூரி எக்கர்த்*
*தடந்தாள் தாழை முள்ளுடை நெடுந்தோட்டு*
*அகமற் பொதுளிய முண்முதிற் வான்பூங்*
*கோடுவார்ந் தன்ன* ***வெண்பூத் தாழை***
*எறிதிரை உதைத்தலிற் பொங்கி தாது சோர்பு*
*சிறுகுடிப் பாக்கத்து* ***மறுகுபுலா மறுக்கும்***
***மணங்கமழ் கானல்......***

நற்: 203:1-7

என்ற நற்றிணைப் பாடலடிகள் தலைவிபால் எழுந்த அலர் நீங்க மணம் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்குப் புலால் நாற்றமும், தாழம்பூ மணமும் குறியீடுகளாகக் காட்டப்படுகின்றன. தாழம்பூவின் மணம் புலால் நாற்றத்தைப் போக்குதல் என்பது திருமணத்தால் அலர்மொழியை நீக்குதல் ஆகும். இதில்

*புலால் நாற்றம் - அலர்*
*தாழம்பூ மணம் - திருமணம்*

என்ற குறியீட்டமைவினைக் காணமுடிகிறது.

அலவன், களவன், ஞெண்டு என்று வழங்கும் நண்டைக் கடற்கரை மணலில் ஆட்டியலைத்து விளையாடுதல் பண்டை இளமகளிர் வழக்கமெனத் தெரிகிறது.

*ஓரை மகளி ரோராங் காட்ட*
*வாய்ந்த வலவன் துன்புறு துணைபரி*
*ஓங்குவரல் விரிதிரை களையும்*

குறுந்: 316:5-8

விளையாட்டு மகளிரால் அலைக்கழிக்கப்பட்ட நண்டின் துயரையும் அதை ஏந்திச் செல்லும் அலைகளையும் கூறி வருந்தும் தலைவி கூற்றில்

அலரால் வருந்திய தலைவியைச் சுட்டிய குறியீடாக நண்டு அமைகிறது. இதில் ஓரை மகளிர் என்பது அலர் கூறும் ஏதிலாட்டியரையும், அலை நண்டை ஏந்திச் செல்லுதல் தலைவன் வரைந்து செல்லுதலையும் சுட்டும் குறியீடுகளாகும்.

### 4.3.3 உடன் போக்கு

களவு மேற்கொண்ட காதலர்களின் மறைவொழுக்கம் வெளிப்பட்டு அலராகும் போது தலைவன், தலைவியை ஒருவருக்கும் தெரியாமல் தன் மனைக்கு அழைத்துச் செல்கிறான். இந்நிலையில் தலைவியின் மனநிலையை வெளிப்படுத்தும் குறியீடுகளாக நெல்லி, வேம்பு, இருப்பை ஆகிய பழங்கள் காட்டப்பட்டுள்ளன.

முதலில் துவர்த்துப் பின் நீர்குடித்தால் இனிக்கும் இயல்புடையது நெல்லிக்காய். இது உடன்போக்கு மேற்கொண்ட தலைவிக்குக் குறியீடாக்கப்பட்டுள்ளது.

*பைங்காய் நெல்லி பலஉடன் மிசைந்து*
*செங்கால் மராஅத்த வரிநிழல் இருந்தோர்*

ஐங்: 381:12

*தானே இருக்க தன்மனை யானே*
*நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க*
*உணலாய்ந் திசினா லவரொடு சேய்நாட்டு*

குறுந்: 262:3-5

என்ற பாடலடிகள் தலைவி உறவுகளைப் பிரிகையில் வருந்தி, தலைவனுடன் புது உறவடையும் போது மகிழ்கிறாள். இங்கு உடன்போகிய தலைவி பெறும் இன்பத்திற்குக் குறியீடாக நெல்லிக்காய் வந்துள்ளது.

*நல்லான் தீம்பால் நிலத்துக் காஅங்*
*கெனக்கு மாகா தென்னைக்கு முதவாது*
*பசலை உணீஇயர் வேண்டும்*
*திதலை அல்குலென் மாமைக் கவினே.*

குறுந்: 27

என்ற குறுந்தொகைப் பாடலில் பசுவின் கன்றாலும் உண்ணப்படாது கலத்தினும் வீழாது மண்ணிலே வீணே சிந்தினாற்போல தன்மாமை எழில் பசலையால் உண்ணப்படுவதைச் சுட்டுகிறாள். இதில் பசு தலைவியையும் கன்று, உண்ணப்படாத பால் என்பது புணர்ச்சி பெறாததையும், பசலையால் உண்ணப்படுவது என்பது வீணே கழியும் நாட்களையும் காட்டும் குறியீடுகளாகும்.

பூந்தாது உதிர்ந்து நிலத்தில் சிதறுதல் என்பது இளமைச் செவ்வி பயனின்றிக் கழிதலைக்காட்டும் குறியீடாகின்றது.

*சிறுவீ ஞாழல் பெருங்கடற் சேர்பனை*
*ஏதி லாளனும் என்ப போதவிழ்*
*புதுமணற் கானல் புன்னைநுண் தாது*
கொண்டல் அசைவளி தூக்குதொறுங் குருகின்
வெண்புற மொசிய..........

நற்: 74:5-9

என்ற அடிகள் இதனைக் காட்டுகின்றன. காற்றால் புன்னையின் தாது உதிர்ந்து குருகின் உடலை மறைத்தது என்பது காமநோயினால் பசலை படர்ந்து தலைவியின் மெய்யை மறைத்தது என்பதற்குக் காட்டியதாகும். இங்கு புணர்ச்சி பெறாததால் தலைவிக்குப் பசலை வந்தது என்பதை

அறியமுடிகிறது. எனவே, இது இளமைச் செவ்வி பயனின்றிக் கழிதலைக் காட்டும் குறியீடாகிறது.

**மத்து**

உடன் போக முனைந்த தலைவி இளங்காலைப் பொழுதில் தன் சிலம்பொலி கேட்டு மனையுளோர் எழாதவாறு அதனைக் களையச் சென்று மனம்மாறிய செய்தியைத் தோழி உரைக்கிறாள்.

*விளம்பழம் கமழும் கமஞ்சூற் குழிசிப்*
*பாசம் தின்ற தேய்கான் மத்த*
*நெய்தெரி இயக்கம் வெளில்முதன் முழங்கும்*

நற்: 12:1-3

இங்கு பாசம் தின்ற (கயிறு பட்டு தேய்ந்த) மத்து என்பது உடன்போக்குச் செல்ல இருந்த தலைவியின் எண்ணத்தில் ஏற்பட்ட தொய்வினைக் குறிக்கும் குறியீடாக வந்துள்ளது.

## 4.4 வரைவு (திருமணம்)

களவு நீண்டு போகும் காலத்து, தலைவியை மணம்பேச வேற்றார் வரும்போது அதனை விலக்கித் தலைவன் அவளை வரைய வேண்டும் என உணர்த்த வரும் தோழி, அதற்குப் புலியோடு மாறுபடும் பன்றியின் செயல்களைக் கொண்டு குறியீடாக்குகிறாள்.

*சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தலொடு*
*குறுங்கை இரும்புலி பொரூஉம் நாட*

ஐங்: 266:1-2

சிறிய கண்ணையும் பெரிய சினத்தையும் உடைய பன்றி குறுகிய முன்னங்கால்களை உடைய புலியோடு போரிடற்கு இடனான மலைநாட்டுத் தலைவனே என்று கூறுவதிலிருந்து, புலி வேற்று வரைவையும் பன்றி தலைவனையும் சுட்டும் குறியீடாகும் என்பதைப் பெறமுடியும்.

*சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்*
*சேறாடு இரும்புறம் நீறொடு சிவண*
*வெள்வசிப் படீஇயர் மொய்த்த வள்புஅழீஇ*
*கோள்நாய் கொண்ட கொள்ளைக்*
*கானவர் பெயர்க்குஞ் சிறுகுடி யானே*

நற்: 82:7-11

என்ற இப்பாடலடிகளில் வரும் பன்றி காமநோயில் அகப்பட்டு தவிக்கும் தலைவியைக் குறித்தது. நாய் பன்றியின் தசையைப் பற்றி இழுத்தல் பசலை நோய்க்கும் கானவர் பெயர்க்குதல் என்பது அப்பசலையை நீக்கியதற்கும் காட்டப்பட்டதாகும். இப்பாடலில் பன்றி - தலைவி, நாய் - பசலை, கானவர் - தலைவன் என்ற குறியீட்டமைவினைக் கொண்டுள்ளது.

கொடிச்சி காக்கும் தினைக் கதிரைக் கசக்கி கடுவனொடு மந்தி வாயில் இட்டிருத்தல் தலைவன் பொருளீட்டி வரைவுடன் வந்ததைச் சுட்டும் குறியீடாக அமைந்துள்ளது.

*கொடிச்சி காக்கும் அடுக்கற் பைந்தினை*
*முந்துவிளை பெருங்குரல் கொண்ட மந்தி*
*கல்லாக் கடுவனொடு நல்வரை யேறி*
*அங்கை நிறைய ஞெமிடிக் கொண்டுதன்*
*திரையணற் கொடுங்கவுள் நிறைய முக்கி*

நற்: 22:1-5

காளைப் பருவமெய்திய ஆண் வீரச்செயல் புரிந்து கழல் அணிகிறான். கன்னிப் பருவமெய்தியமை குறிக்கப் பெண்ணுக்குச் சிலம்பணிந்திருக்கலாம். கழல் ஆடவன் வீரத்திற்குக் குறியீடாவது போல சிலம்பு பெண்ணின் கன்னிமைக் கற்புக்குக் குறியீடாகலாம்.

சிலம்புகழிதல் எனும் சடங்கு பெறற்கரும் பேறாகக் கருதப்பட்டது. மகட்போக்கிய தாய் தன் மகளின் சிலம்பு கழியும் சடங்கு பிறர் மனையில் நிகழ்ந்ததே என்று புலம்புவதிலிருந்து அவளின் பெருவருத்தம் உணர்த்தப்படுகிறது.

*சிறியோர் கொத்தவென் பெருமடத் தகுவி*
*சிறப்புஞ் சீரும் இன்றிச் சீறூர்*
*நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை*
*ஒரா யாத்த ஒருதூண் முன்றில்*
*ஏதில் வறுமனைச்* ***சிலம்புடன் கழீஇ***
*மேயினள் கொல்லென நோவல் யானே*

அகம்: 369:21-26

என்ற பாடலடிகளில் சீரும் சிறப்பும் மிக்க தம்மனை நீங்கி தலைவனின் ஒரேயொரு பசு கட்டிய வறிய புற்குடிசையில் சிலம்பு கழிக்க நேர்ந்த மகளை நினைந்து வருந்தும் தாயை நக்கீரர் காட்டுகிறார். உடன்போகிய மகளை நினைக்கும் தாயின் நெஞ்சில் அவள் சிலம்பு கழியாது சென்ற வருத்தம் உள்ளார்ந்து நிற்பதை அறிய முடிகின்றது.

*அதருழந்து அசையின கொல்லோ ததரல்வாய்ச்*
***சிலம்பு கழீஇய செல்வம்***
*பிறருணக் கழிந்தஎன் ஆயிழை அடியே*

நற்: 279:8-11

என்ற நற்றிணைப் பாடலின் வழி தாய் தன் மகளின் சிலம்பு கழியும் விழாச் சிறப்பினை தான் காணாது பிறர் கண்டு மகிழும்படி உடன்போயினளே என்று கூறுவதிலிருந்து அவளின் துன்பத்தை அறிய முடிகின்றது. இதன் வழியாக சிலம்பு கழிதல் என்னும் சடங்கு சிறந்த குறியீடாக அமைந்துள்ளமை பெறப்படும்.

தலைவனுடன் உடன்போக நினைந்த தலைவி தானே தன் காற்சிலம்பினைக் கழிதலை கயமனார் குறிப்பிடுகிறார்.

*வைகுபுலர் விடியல் மெய்கரந்து தன்கா*
*லரியாமை **சிலம்பு கழீஇப்** பன்மாண்*
*வரிபுனை பந்தொடு வைஇய செல்வோள்*
*இவைகாண் தோறு நோவர் மாதோ*

நற்: 12:4-7

அக இலக்கியத்தில் 'சிலம்பு கழீஇ நோன்பு' என்ற சடங்கு உணர்வு நிலைகளைத் தூண்டும் குறியீடாக விளங்குவதைத் தெளியலாம்.

### 4.4.2 மலரணிதல்

தமிழர் வாழ்வியல், மலர்களோடுப் பின்னிப் பிணைந்த பண்பாட்டுச் சிறப்பு வாய்ந்தது. ஆடவரும் பூச்சூடினர் என்பதைப் போர்க்குச் செல்லும் போது அடையாளப் பூக்களைச் சூடினர் என்பதின் வழி அறியமுடிகின்றது. பழந்தமிழர் ஒழுக்கங்களை வகுத்து அவற்றிற்கும் மலர்களால் பெயரிட்டு வழங்கியிருக்கின்றனர்.

திருமணத்திற்குப் பின்னரே தலைவன் தலைவியின் கூந்தலில் பூச்சூட்டும் உரிமை பெறுகிறான். வதுவைச் சடங்கில் தலைவன் தலைவி

கூந்தலில் மலரணியும் நிகழ்ச்சி இவ்வுரிமை சுட்டும் வழக்குக் குறியீடாகும். இதனை

*எரிமருள் வேங்கை இருந்த தோகை*
*இழையணி மடந்தையின் தோன்று நாட*
*இனிதுசெய் தனையால் நுந்தை வாழியர்*
*நன்மனை வதுவை யயர இவள்*
*பின்னிருங் கூந்தல் மலரணிந் தோயே*

ஐங்: 294

என்ற ஐங்குறுநூற்றுப்பாடலில் தோழி, களவுக் காலத்தே இவளுக்கு மலரணிந்து நீயே கணவன் என்பதனை உறுதி செய்தனை யெனினும், இக்களவு கற்பாக எவ்வகை இடையூறுமின்றி மாறுமோ மாறாதோ என்று பலகாலம் வருந்தி இருந்தோம். வதுவை நாளான இன்று எல்லோரும் அறிய மலர்சூட்டி எம்மை இன்புறுத்திய நீ இவளோடு நீடு வாழ்க என்று தலைவனை வாழ்த்துகிறாள்.

*நள்ளென் கங்குல் நம்மோ ரன்னள்*
*கூந்தல் வேய்ந்த விரவுமலர் உதிர்த்துச்*
*சாந்துளர் நறுங்கதுப் பெண்ணெய் நீவி*
*அமரா முகத்த ளாகித்*
*தமரோ ரன்னள் வைகரை யனே.*

குறுந்: 312:4-8

என்ற இப்பாடல் தன் களவுச் செயலால் தலைவி இருவேறு ஒழுகலாற்றை உடையவளாகத் திகழ்கிறாள் என்பதைக் குறிப்பிடுகிறது. நள்ளிரவில் தம்மோடு ஒத்து தமரோடு மாறுபாடுகிறாள். பகலில் தலைவனை அறியாதாள் போல் இரவில் அவன்சூட்டிய மலரைக் உதிர்த்து விட்டு மயிர்ச்சந்தன மிட்டு

கோதிய நறிய கூந்தலை உடையவளாக தாய் முதலியோரோடு ஒத்து ஒழுகுகின்றாள் என்று தலைவியின் இயல்பைத் தலைவன் கூறுகிறான்.

*சில்லை, செவிமறைக் கொண்டவன் சென்னிக் குவிமுல்லைக்*
*கோட்டங்காழ் கோட்டின் எடுத்துக்கொண் டாட்டிய*
*ஏழை யிரும்புகர் பொங்கஅப் பூவந்தென்*
*கூழையுள் வீழ்ந்தன்று மன்*
*அதனைக் கெடுத்தது பெற்றார்போற் கொண்டியான் முடித்தது*
*கேட்டன ளென்பவோ யாய்*
*இ·தொன்று கூறு*
*கேட்டா லெவன்செய்ய வேண்டுமோ மற்றிகா*
*அவன் கண்ணி யன்றோ அது*
*பெய்போ தறியாத்தன் கூழையுள் ஏதிலான்*
*கைபுனை கண்ணி முடித்தாளென் றியாய்கேட்பின்*
*செய்வதி லாகுமோ*

கலி: 107:5-17

என்ற முல்லைக் கலியில் ஏறுதழுவும் காளை தலையிலணிந்த பூமாலையைத் துள்ளும் ஏறு கொம்பால் எடுத்து வீச அது தலைவி கூந்தலில் விழுந்தது. ஆசையோடு எடுத்துக் கூந்தலில் முடிந்து கொண்ட தலைவி எவரோ தந்த பூவை ஏன் புனைந்தாய் என அன்னை கேட்பாளே என்று அஞ்சுகிறாள். தோழி விரைவில் மணம் நிகழும் என்று அவளைத் தேற்றுகிறாள்.

*முல்லையொரு காழுங் கண்ணியும் மெல்லியால்*
*கூந்தலுட் பெய்து முடித்தேன்மன் தோழியாய்*
*வெண்ணெய் உரைஇ விரிந்த கதுப்போடே*

*அன்னையும் அத்தனும் இல்லரா யாய்நாண*
*அன்னைமுன் வீழ்ந்தன்றப் பூ*
*அதனை வினவலுஞ் செய்யாள் சினவலுஞ் செய்யாள்*
*நெருப்புக்கை தொட்டவர் போல விதிர்த்திட்டு*
*நீங்கிப் புறங்கடைப் போயினாள் யானுமென்*
*சாந்துளர் கூழை முடியா நிலந்தாழ்ந்த*
*பூங்கரை நீலந் தழீஇத் தளர்பொல்கிப்*
*பாங்கருங் கானத் தொளித்தேன் அதற்கெல்லா*
*ஈங்கெவன் அஞ்சு வது*

கலி: 115:5-16

குறியிடத்தில் தலைவன் கூந்தலிற் சூடிய பூ அன்னை முன் விழ அவள் 'நெருப்புக்கை தொட்டவள் போல்' விதிர்த்ததைத் தலைவி கூற தோழி அஞ்சாதே வதுவை நிகழவுள்ளதென நற்செய்தியுரைத்தலை இப்பாடல் காட்டுகிறது.

*அரைநாள் யாமத்து விழுமழை கரந்து*
*கார்விரை கமழுங் கூந்தல் தூவினை*
*நுண்நூல் ஆகம் பொருந்தினள் வெற்பின்*
*இளமழை சூழ்ந்த மடமயில் போல*
*வண்டுவழிப் படரத் தண்மலர் வேய்ந்து*
*வில்வகுப் புற்ற நல்வாங்கு குடச்சூல்*
*அஞ்சிலம் பொடுக்கி அஞ்சினள் வந்து*

அகம்: 198:4-10

மணம் கமழும் முல்லைப் பூவினைக் கூந்தலினுள் மறைத்தும் காற்சிலம்பின் ஒலியை அடக்கியும் சுற்றத்தார்க்கு அஞ்சி அஞ்சி வந்து புணர்ந்து சென்ற தலைவியின் பண்பை நினைந்து மகிழ்கிறான் தலைவன் என்பதை இவ்வகநானூற்றுப்பாடல் குறிப்பிடுகிறது.

கணவனைப் பிரிந்துவாழும் நாட்களில் மலரணிதல் தவிர்த்தலை

*வருது மென்ற நாளும் பொய்த்தன*
*வரியே ருண்க ணீரு நில்லா*
*தண்கார்க் கீன்ற பைங்கொடி முல்லை*
*வைவாய் வான்முகை யவிழ்ந்த கோதை*

அகம்: 144:1-4

தலைவன் வருவேன் என்று கூறிச்சென்ற கார்காலம் வந்தது. கார்காலம் வந்ததால் முல்லையும் பூத்துவிட்டது. தன் தலைவன் இல்லாததால் மலர் அணிதலைத் தவிர்க்கிறாள் என்பதை இப்பாடல் காட்டுகிறது.

மலரணிந்து கணவரோடு மகிழ்ந்திருக்கும் மகளிர், கூந்தல் மகளிரெனப்படுகின்றனர்.

*மாக்கொடி அடும்பின் மாயிதழ் அலரி*
*கூந்தன் மகளிர் கோதைக் கூட்டுங்*

நற்: 145:2-3

மேற்கண்ட பாடல்களின் வழி மணமாகாத மகளிர் மணமுள்ள மலரை வெளிப்படையாக அணிய அஞ்சியதை காணமுடிகிறது. இதன் வாயிலாக மணமான பிறகே மகளிர் வெளிப்படையாக மலரணிந்திருக்கக் கூடும் என்பது பெறப்படுகிறது. எனவே மலரணிந்த மகளிர் மணமானவர் என்பதைக் காட்டும் குறியீடாகிறது எனலாம்.

### 4.4.3 வதுவைச் சடங்கு

வதுவை என்ற சொல் திருமணத்தைக் குறிக்கும் சொல்லாகும். திருமணச் சடங்கில் நீராட்டுதல் முக்கிய இடத்தைப் பெறுகிறது. இதனை அகநானூற்றின் 86,136 ஆகிய பாடல்கள் விரிவாக உரைக்கின்றன.

*உச்சிக் குடத்தர் புத்தகல் மண்டையர்*
*பொதுசெய் கம்பலை முது பெண்டிர்*
*முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்*
*புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று*
*வாலிழை மகளிர் நால்வர் கூடிக்*
*கற்பினின் வழாஅ நற்பல உதவிப்*
*பெற்றோற் பெட்கும் பிணையை யாகென*
*நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி*
*பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க*
*வதுவை நன்மணம்.........................*

அகம்: 86:8-17

தலையில் நிறை குடத்தையும் கைகளில் அகன்ற மண்டையெனும் கலத்தையும் உடைய புதுசெம் பெண்டிர் அவற்றை முறைப்படி கொடுக்க புதல்வரைப் பெற்ற மங்கல மகளிர் நால்வர் கூடி நின்று உன்னை மனைவியாகப் பெற்ற நின் கணவனை நீ பெரிதும் விரும்புகின்றவள் ஆகுக என்று வாழ்த்தி நீரொடு கூட்டிப்பெய்த மலரும் நெல்லும் கூந்தலில் தங்கி விளங்கத் தலைவிக்கு நீராட்டுச் செய்யும் வதுவையை நல்லூர்க் கிழார் வருணிக்கிறார்.

ஊடல் கொண்டிருந்த தலைவியிடம் தலைவன் தான் தவறிலன் என்று கூறி ஊடல் தீர்க்க முயல்கிறான். அவள் ஊடல் தீர்ந்தாளில்லை. அப்பொழுது தலைவன் தன்நெஞ்சிடம் பண்டை வதுவைச் சடங்கு நிகழ்ந்த நாளன்று தம்மைக் கண்டு நாணம் கொண்டவள் இப்பொழுது தன் தவறின்மையை எவ்வளவு கூறினும் ஏற்க மறுக்கிறாளே என்று புலம்பும் போது திருமணநிகழ்வுகள் அவன் மனக்கண் முன் வருவதை இப்பாடல் காட்டுகிறது.

முதலில் மழை பெய்தபோது தோன்றி வளர்ந்த அருகம்புல்லைக் கிழங்கோடு பிடுங்கி வெண்ணூலில் சுற்றி விரவித் தொடுத்த காப்பு நூலைத் தலைவி அணிந்திருந்த செய்தியை

*சகட மண்டிய துகளூர் கூட்டத்துக்*
*கடிநகர் புனைந்து கடவுட் பேணிப்*
*படுமண முழவொரு பரூஉப்பணை யிமிழ*
*வதுவை மண்ணிய மகளிர் விருப்புற்றுப்*
*பூக்கணு மிமையர் நோக்குபு மறைய*
*மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை*
*பழங்கன்று கறித்த பயம்பம லறுகைத்*
*தழங்குரல் வானின் றலைப்பெயற் கீன்ற*
*மண்ணுமணி யன்ன மாயிதழ்ப் பாவைத்*
*தண்ணாறு முகையொடு வெண்ணூல் சூட்டித்*
*தூவுடைப் பொலிந்து மேவரத் துவன்றி*
*மழைபட் டன்ன மணன்மலி பந்த*
*ரிழையணி சிறப்பின் பெயர்வியர்ப் பாற்றித்*
*தமர்நமக் கீத்த தலைநா ளிரவி*

அகம்: 136:5-18

குறிப்பிடுகிறது. இவ்விரு பாடல்களிலும் வரும் நெல், மலர், அருகங்கிழங்கு ஆகியவை முறையே கருவளம், காதல்உணர்வு, இனவிருத்தி ஆகியவற்றுக்குக் குறியீடுகளாக ஆளப்பட்டுள்ளன. கணவனுக்கு நல்ல மக்களை ஈன்று, குறைவில்லா காதலின்பத்தை வழங்கி, குலம் தழைக்க வாழ்க என்பதை இச்சடங்கு குறிக்கிறதெனலாம்.

## 4.5 கற்புப் புணர்ச்சிக் குறியீடு

களவில் கூடி இன்புற்ற காதலர்கள், எல்லோரும் அறியத் திருமணம் புரிந்துகொண்டு வாழ்வது கற்பு ஆகும். இக்காலத்து, தலைவன்

தலைவியின் புணர்ச்சி கற்புப் புணர்ச்சி எனப்படும். இக்கற்புப் புணர்ச்சியைச் சுட்ட மண்ணில் மழைபெய்தல், உண்ணுதல், நிலத்தை உழுதல், உரலை உலக்கைக் கொண்டு இடித்தல் ஆகியவை குறியீடாக்கப்பட்டிருப்பதை இங்கே காணலாம்.

### 4.5.1 விலங்கு கனியை உண்ணுதல்

**மீன் : மாங்கனி = பரத்தை : தலைவன் (துறை - இயற்பழித்தல்)**

மாமரம் மருத நிலத்திலே மிகுந்து செழித்து வளரக் கூடியது. அகப்பாடல்களில் ஊடலுக்குக் காரணமாகும் பரத்தையின் காமத்தை உரைக்கும் குறியீடாகப் பெரிதும் ஆளப்படுகிறது.

*கழனி மாத்து விளைந்துகு தீம்பழம்*
*பழன வாளை கதூஉ மூரண்*

குறுந்: 8:1-2

என்று பரத்தை தலைவனை அடையாளப்படுத்துகிறாள். மாங்கனி விளைந்து கனிந்து நீர் தேங்கிய வயலுள் வீழ்ந்ததால் வாளைக்குக் கிடைத்தது என்பது பாடலின் பொருள். இதில் மாங்கனி தலைவனையும் வாளை பரத்தையையும் சுட்டும் குறியீடுகளாகின்றன.

தலைவி தன்னைப் புறங்கூறினாள் என்பதைக் கேட்ட காதற்பரத்தை, தலைவி தன் அறியாமையாலே புலந்து என்னைப் புறங் கூறுகிறாள். அவள் புறங்கூறும் அளவிற்கு நான் தவறுடையேன் அல்லேன் எனக் கூறுகிறாள்.

*கணைக்கோட்டு வாளை கமஞ்சூல் மடநாகு*
*துணர்த்தேக் கொக்கின் தீம்பழம் கதூஉம்*
*.......... ......... ............. ........*

மனையோள் மடமையிற் புலக்கும்
அனையே மகிழ்நற்கியா மாயினும் எனின்

குறுந்: 164:1-2:5-6

என்ற பரத்தைக் கூற்று, பாடலில் மருதநிலத் தலைவனின் மிகு காமத்திற்குக் குறியீடாக மாங்கனி ஆளப்பட்டுள்ளது. குளத்தில் வாழும் வாளைமீன், மாமரத்திலிருந்து கனிந்து விழுந்த கனியை உண்டது என்பது பாடல் பொருள். இங்கு "எம்பால் வலிய வந்த தலைவனை நுகர்ந்தேனல்லாது தாம் வலிய சென்று நுகரவில்லை" என்று பரத்தை கூறுகின்றாள். இதில் மாங்கனி தலைவனையும், வாளை பரத்தையையும் சுட்டும் குறியீடுகளாகின்றன.

**எருமை:தாமரை:கழுநீர்ப்பூ = தலைவன்:தலைவி:பரத்தை (துறை – ஊடல் மறுத்தல்)**

நீர்நிலைகளில் உகந்தும் சிவந்த கண்களுடனும் சோம்பித் திரிவது எருமை. இது செருக்கும் வளமையும் மிக்க மருதத் தலைவனுக்குக் குறியீடாகிறது. அவனுடைய பரத்தமை ஒழுக்கத்தைச் சுட்டுவதாகப் பாடல்களில் பயின்று வருகிறது.

*கழுநீர் மேய்ந்த கருந்தாள் எருமை*
*பழனத் தாமரைப் பனிமலர் முனைஇத்*
*தண்டுசேர் மள்ளரின் இயலி அயலது*
*குன்றுசேர் வெண்மணல் துஞ்சும் ஊர*

நற்: 260:1-4

என்னும் அடிகளில் தாமரை மலரை வெறுத்துக் கழுநீரை மேய்ந்த எருமை மணற்குன்றிலே சென்று தங்கு மென்பதைக் குறிப்பிடுகிறது. இங்கு தலைவி

நலனை வெறுத்துக் காதற் பரத்தையின் இன்பம் துய்த்துச் சேரிப்பரத்தையிடம் சென்ற மருதநிலத் தலைவனை எருமை குறியீடாய்ச் சுட்டுகிறது எனலாம். தாமரை மலர் தலைவியையும் கழுநீர்ப்பூ பரத்தையையும் சுட்டும் குறியீடுகளாகும். எருமை மருதநிலத்தில் தலைவனுக்குப் பல சூழல்களில் குறியீட்டுப் பொருண்மை பெற்று வருகிறது.

### 4.5.2 விலங்கு இறைச்சியை உண்ணுதல்

**நீர்நாய்:மீன்:வாளைமீன் = தலைவன்:தலைவி:பரத்தை (துறை – வாயில் மறுத்தல்)**

மருதம், நெய்தல் நீர்நிலையான பெரிய ஏரி, குளங்களின் கரைகளிலும், ஆறு, கால்வாய் அருகிலேயும் நீர்நிறைந்த வயல்களிலும் கடற்கழிகளிலும் வாழும் இயல்புடையது நீர்நாய். இரவில் மீன் வேட்டையாடி வாழும் விலங்காகும். இது அக இலக்கியத்தில் தலைவனின் பரத்தையொழுக்கம் காட்டும் குறியீடாக ஆளப்பெறுகிறது.

*பொய்கை நீர்நாய்ப் புலவு நாறு இரும்போத்து*
*வாளை நாளிரை தேரும் ஊர*

அகம்: 386:1-2

என வரும் அகநானூற்று பாடலடிகள் பொய்கையில் வாழும் நீர்நாய் இயற்கையாக எதிர்பட்ட மீனை உண்ணாது வாளை மீனையே ஆராய்ந்து திரியும் என்கிறது. இதில் நீர்நாய் இயற்கையாக அகப்பட்ட மீனைத் தின்னாது வாளை மீனையே தேடும் என்பது தலைவியை நுகராது பரத்தையைத் தேடித் திரிகின்ற தலைவனைச் சுட்டியதாகும். இங்கு நீர்நாய் தலைவனையும் வாளைமீன் பரத்தையையும் காட்டும் குறியீடுகளாகும்.

**குருகு : நண்டு = அயலோர் : தலைவன் (துறை – வாயில் மறுத்தல்)**

*வேப்புநனை அன்ன நெடுங்கண் நீர்ஞெண்டு*
*இரைதேர் வெண்குரு கஞ்சி யயலது*
*ஒலித்த பகன்றை யிருஞ்சேற் றள்ளல்*
*திதலையின் வரிப்ப வோடி விரைந்துதன்*
*ஈர்மலி மண்ணளைச் செறியும் ஊர*

அகம்: 176:8:12

என்ற இளங்கடுங்கோவின் அகநானூற்றுப் பாடல் நண்டானது நாரைக்கு அஞ்சி சேற்றில் வரிகள் ஏற்பட ஓடி மண் வளையில் மறையும் என்று கூறுகிறது. இது பரத்தையர் சேரியில் அவர்களின் நலத்தினை நுகர்ந்திருந்த தலைவன் பழி ஏற்படுவதை அஞ்சி தன் வீட்டிற்கு விரைந்து செல்வதைச் சுட்டியதாகும்.

**எருமைக்கடா:எருமை = தலைவன்:பரத்தை (துறை –வாயில் மறுத்தல்)**

பரத்தை ஒழுக்கம் கொண்ட தலைவன் பாணன் மூலமாக வாயில் வேண்டுகிறான். அதனை மறுக்கும் தலைவி

*வலி மிகு முன்பி னண்ணல் லேஎறு*
*பனிமலர்ப் பொய்கைப் பகல்செல மறுகி*
*மடக்க ணெருமை மாணாகு தழீஇப்*
*படப்பை நண்ணிப் பழனத் தல்குங்*
*கலிமகி ழூர னொலிமணி நெடுந்தே*
*ரொள்ளிழை மகளிர் சேரிப் பன்னா*

அகம்: 146:1:6

என்று கூறுகிறாள். பகற்பொழுதெல்லாம் குளத்திலே சுழன்று கிடக்கும் எருமைக்கடா பின்னர் இள எருமையைத் தொடர்ந்து தோட்டத்துப் புகுந்து பின்னர் ஊர்ப் பொது நிலத்திலே தங்கும் என்பது தலைவன் பகற்பொழுதில்

இல்லத்திலிருந்துவிட்டுப் பின் இளைய பரத்தையோடு சோலையில் ஆடிப் பின்னர் பொதுமகளிர் இல்லங்களிலே தங்கியிருக்கிறான் என்பதைக் குறிப்பதாகும். இதில் எருமைக்கடா தலைவனுக்கும் எருமை பரத்தையையும், பொய்கை என்பது தலைவனின் இல்லத்தையும், பொது நிலம் என்பது சேரிப்பரத்தையையும் சுட்டும் குறியீடுகளாகும்.

### 4.5.3 மண்ணும் மழையும்

வளத்தின் மிகத் தொன்மையான வெளிப்படையான குறியீடு மழையாகும். மண்ணுடன் நெருங்கிய தொடர்புடையது மழை. எனவே அது வளத்துக்கும் மனிதப் பண்புகளுக்கும் குறியீடாகிறது. வள்ளல்களை மழையோடு ஒப்புமைப்படுத்துவது இலக்கிய மரபு. உயர்பண்புடையார்ப் பொருட்டே உலகில் மழை பொழிகிறது என்பது மரபான நம்பிக்கை.

அகப்பாடலில் தலைவன் மழைக்குறியீட்டால் சுட்டப்படுகின்றான். மண் தலைவியைச் சுட்டும் குறியீடாகிறது.

**மண் : மழை = தலைவன் : தலைவி ( துறை – ஊடல் தீர்தல்)**

தலைவன் பரத்தமை ஒழுக்கம் பூண்டான். தலைவியோ ஊடல் கொண்டிருந்தாள். மீண்டுவந்த தலைவனுக்கு தோழியால் வாயில் மறுக்கப்படுகிறது. வேறு வழியின்றி தலைவனே தலைவியை அணுகிப் பொய்மொழி பல கூறி ஊடல் தீர்க்கிறான். ஊடல் தீர்ந்தமையை

*சிறுபுறங் கவையின னாக வுறுபெயற்*
*றண்டுளிர்க் கேற்ற பலவுழு செஞ்செய்*
*மண்போ னெகிழ்ந்தவற் கலுழ்ந்தே*

அகம்: 26:23-25

என்று கூறுகிறாள் தலைவி. பலகாலம் மழைகாணாது ஏக்கற்றுக் கிடந்த மண் உறுபெயலால் குளிர்ந்தது என்பதில் மழை தலைவனையும் மண் என்பது தலைவியையும் சுட்டும் குறியீடுகளாயின. மேலும்

*நீரற்ற புலமே போல் புல்லென்றாள் வைகறை*
*கார்பெற்ற புலமே போல் கவின் பெறும்*

கலி: 38:11-12

என்ற பாடலடிகள் மழை தலைவனையும் மண் தலைவியையும் குறிக்கும் குறியீடுகளாயின. வரண்ட நிலம் மழையினால் வளம் பெறுவது தலைவி புணர்ச்சியால் அழகு பெறுதலுக்கு குறியீடாகிறது.

### 4.5.4 ஏர்

நிலத்தை உழுவதற்குப் பயன்படுத்தப்படும் ஒரு கருவி ஏர். இந்த ஏர்க் கருவியினைச் சங்க அகப்பாடலில் தலைவனுக்குக் குறியீடாகக் காட்டியுள்ளனர். நிலத்தைப் பெண்ணென்றும் உழவனைக் கணவனென்றும் சொல்லும் மரபு எங்கும் உள்ளது. கணவன் தமிழில் கொழுநன் எனப்படுகிறான்.

வினைமுடித்த தலைமகன் செல்வதற்குரிய நெடுந்தொலைவில் இருக்கும் தன் ஊரையும் தலைவியையும் நினைக்கிறான். தலைவியை விரைந்து சென்று காணவேண்டும் என்ற துடிப்பு அவன் உள்ளத்தில் எழுகிறது. இத்தலைவனின் நிலையை அருமையான உவமை காட்டி விளக்குகிறார் ஓரேருழவனார்.

*ஆடமை புரையும் வனப்பிற் பணைத்தோள்*
*பேரமர்க் கண்ணி யிருந்த ஊரே*

*நெடுஞ்சேண் ஆரிடை யதுவே நெஞ்சே*
*ஈரம் பட்ட செவ்விப் பைம்புனத்து*
*ஓரேர் உழவன் போலப்*
*பெருவிதுப் புற்றன்றால் நோகோ யானே*

குறுந்: 131:1-6

என்ற பாடலில் அறியலாம். இங்கு ஏர் பாலியல் குறியீடாக வந்துள்ளது. மழை பெய்து உழுதற்கு இதமான ஈரம் கொண்ட நிலத்தினை ஒரேயொரு ஏர் கொண்ட உழவன் விரைந்து உழுதல் போல நெடுந்தொலைவிலிருந்து வரும் தலைவன் தலைவியைக் காண விரைந்து வருகின்றான் என்பது புணர்ச்சி விருப்பத்தால் விரைகிறான் என்பது பெறப்படும்.

*கார்கலந் தன்றாற் புறவே பலவுடன்*
*ஏர்பரந் தனவால் புனமே ஏர்கலந்து*
*தாதார் பிரச மொய்ப்பப்*
*போதார் கூந்தல் முயங்கினள் எம்மே*

ஐங்: 417

மழை பெய்தவுடன் உழவர் தத்தம் புனத்தில் ஏர்கொண்டு உழத்தொடங்கினர். இதனால் புனங்கள் அழகு மிகுந்தன. தலைவனின் வரவால் தலைவி புதிய மலர்களைச் சூடி முயங்கினள். அதனால் தலைவி மேலும் அழகுற்றனள். இங்கு ஏர் தலைவனைச் சுட்டும் குறியீடாக வந்துள்ளதைக் காணமுடிகிறது.

### 4.5.5 உரல் - உலக்கை

*பாசவ லிடித்த கருங்கா ழுலக்கை*
*ஆய்கதிர் நெல்லின் வரம்பணைத் துயிற்றி*
*ஒண்டொடி மகளிர் வண்ட லயரும்*

*தொண்டி யன்னவென் நலந்தந்து*
*கொண்டனை சென்மோ மகிழ்நநின் சூளே*

குறுந்: 238

என்னும் குன்றியனாரின் பாடல் பரத்தையிற் பிரிந்த தலைமகனுக்கு வாயில் மறுத்த தோழியின் கூற்றாகும். தோழி மருதநில வளம் கூறுவாள்போல் ஒரு நுண்மையான பாலுறவுச் செய்தியைப் பண்பாட்டு வரம்புக்குள் நின்று பேசுகிறாள். நெல்வயல் வரம்பைத் தலையணையாக்கி; பச்சை அவலை இடித்த உலக்கையை அதில் துயிலச் செய்துவிட்டு; வண்டலயர்ந்து விளையாடச் சென்ற மகளிர் பற்றிக் கூறுகிறாள். புணர்ந்தபின் தூங்குந் தலைவனை விட்டகன்று தாம் விளையாடி மகிழப்போன பரத்தையின் செயலைக் குறிக்கிறது இது. இங்கு உலக்கை பாலுறவைச் சுட்டித் தலைவனைக் குறிக்கும் குறியீடாகிறது.

## 4.6 பிரிவிற்கான குறியீடு

பிரிவுகளைக் குறிக்கும் நிலையில் சில குறியீடுகள் ஆளப்பட்டுள்ளன. இது தலைவன் தலைவியைவிட்டுப் பொருள்தேடச் செல்லும்போது தலைவியின் நிலையைக் காட்டவும்; தலைவி தன் சுற்றத்தை விட்டுப் பிரியும்போது அவளின் இருவேறு மனநிலையை உணர்த்தவும் அருமையான குறியீடுகளைப் பயன்படுத்தியுள்ளனர் புலவர் பெருமக்கள்.

### பொருட் பிரிவு

**பசு**

பொருள் தேடிப் போன தலைவன் குறித்த காலத்தில் வந்து சேரவில்லை. தலைவியின் வருத்தத்திற்கு அளவில்லை. மேயச் சென்ற தாய்ப்பசு இருந்த இடத்தை அதன் கன்று தலை தூக்கிப் பார்த்துப் பார்த்து

மாலையில் வருந்தினாற் போல தன் பிரிவு நோய் இருந்ததாய்த் தோழியிடம் சொல்கிறாள் தலைவி.

*பல்லா நெடுநெறிக் ககன்று வந்தெனப்*
*புன்றலை மன்றம் நோக்கி மாலை*
*மடக்கண் குழவி அணவந் தன்ன*
*நோயேம் ஆகுதல் அறிந்தும்*
*சேயர் தோழி சேய்நாட் டோரே*

குறுந்: 64

என்ற இக்குறுந்தொகைப் பாடலில் பசு தலைவனையும் கன்று தலைவியையும் சுட்டும் குறியீடுகளாயின.

தலைவி வருந்தும் போது அவள் நெஞ்சம் தாய் முகம் தேடும் இளம் கன்றாய்த் தவிக்க, பசு பொருள் தேடப் பிரிந்த தலைவனுக்குத் குறியீடாய் நின்றது.

*பண்பில் கோவலர் தாய்பிரிந்து யாத்த*
*நெஞ்சமர் குழவி போல நொந்து நொந்து*

அகம்: 293:11-12

கானகம் சென்று மேய்ந்து பாலால் மடிநிரப்பி வரும் தாய்ப்பசு, நிலம் பெயர்ந்து பொருள் தேடச் சென்று மடி நிரப்பிப் பொருளோடு மனம் நிரம்பிய அருளும் கொண்டு வரும் தலைவனுக்குக் குறியீடாகியது எனலாம்.

## தேரை

இது நீரிலும் நிலத்திலும் வாழக்கூடிய விலங்கின வகையாகும். வெப்பம் மிகுந்த காலத்தில் தவளைகள் குளத்தின் அடிப்பகுதியில் சேற்றில் தம்மைப் புதைத்துக் கொண்டு உறங்கும் தன்மையுடையன. தேரை

இனங்கள் முதல் மழை பெய்யும் போது விழித்தெழுகின்றன. இவ்வியற்கை நிகழ்வைச் சங்கப்புலவர் அகப்பாட்டில் தலைவன் தலைவி மனத்தில் எழும் காதல் இன்பம் தொடர்பான நினைவுகளைக் குறிப்பாகச் சுட்டப் பயன்படுத்திக் கொண்டுள்ளனர்.

*அவல்தொறும் தேரை தெவிட்ட மிசைதொறும்*
*வெங்குரற் புள்ளின மொலிப்ப உதுக்காண்*
*கார்தொடங் கின்றாற் காலை யதனால்*
*நீர்தொடங்கி னவால் நெடுங்கண் அவர்*
*தேர்தொடங் கின்றால் நம்வயி னானே*

ஐங்: 453

என்கிறாள் தலைவி. இங்குத் தேரை பருவங்காட்டும் ஒரு குறியீடாக மட்டும் வரவில்லை. தலைவன் வினைமுடிக்கும் வரைக்கும் தனிமையைப் பொறுத்து இல்லிருந்த பெண்மை நெஞ்சில் அவன் திரும்பும் காலம் வந்தவுடன் உள்ளே உறங்கிக் கிடந்த காம உணர்வுகள் விழித்தெழுந்ததைச் சுட்டும் குறியீடாகவே தெவிட்டும் தேரை ஆளப்பட்டுள்ளது என்று கூறலாம்.

பருவங்கண்டு ஆற்றாளாகிய தலைவியைத் தோழி தேற்றும் போது பிரிந்து சென்ற சுரத்தில் தலைவன், வௌவால் வேம்பின் கனியை உண்ணுதலைக் காண்பானேயானால் அவன் விரைவில் மீண்டுவருவான் என்று கூறுகிறாள்.

*அம்ம வாழி தோழி சிறியிலைக்*
*குறுஞ்சினை வேம்பின் நறும்பழம் உணீஇய*
*வாவல் உகக்கு மாலையும்*
***இன்றுகொல் தோழி அவர்சென்ற நாட்டே***

ஐங்: 339

என்ற ஐங்குறுநூற்றுப்பாடலில் வாவல் (வௌவால்) வேம்பின் கனியை உண்ணும் செய்திக் கூறப்பட்டுள்ளது. வேம்பின் பழம் முதலில் மெல்லிதாக இனித்துப் பின் சிறிது கசக்கும் தன்மையுடையது. இது பொருள்மீது ஆவல் கொண்டு பிரிந்து பின் தலைவியை எண்ணி வருந்தும் தலைவனுக்குக் குறியீடாக்கப்பட்டுள்ளது. பொருள் மீது கொண்ட ஆவல் - இனிப்பு, தலைவியை எண்ணி வருந்துவது சிறியதாகிய கசப்பு என்ற குறியீட்டமைவினைக் கொண்டுள்ளது.

## 4.7 அகமாந்தரின் பண்பும் நிலையும்

அகவாழ்க்கையில் தலைவன் தலைவியின் ஒவ்வொரு காலச் சூழல்களிலும் அவர்களின் தனித்துவமான பண்புகளும் உணர்வு நிலைகளும் வெளிப்படுகின்றன. இதனை மலை, அருவி, தொன்மப் பாத்திரங்கள் முதலியவற்றின் வாயிலாகக் காட்டியுள்ளனர். இவை தலைவனைச் சுட்டும் குறியீடுகளாகும். தலைவியின் பண்புநிலையைக் காட்ட பூக்கள், வரலாற்றுச் சிறப்பு மிக்க இடங்கள், பாத்திரங்கள் ஆகியவை குறியீடாக்கப்பட்டுள்ளன.

### 4.7.1 தலைவனின் பண்பும் நிலையும்

உயர்ச்சியும் உறுதியும் வளமும் கொண்டு விளங்குவது மலை. தலைவனின் பெருமிதத்தன்மையும், உயர்வும் ஆகிய பண்புகளுடன் ஒத்துள்ளதால் மலை தலைவனுக்குரிய குறியீடாகத் திகழ்கிறது எனலாம்.

பெருமலைநாடன் (குறுந்:96:1) ஓங்கு மலை நாடன் (குறுந்:150:3) வான்தோய் வெற்ப (அக:112:13) என்றெல்லாம் தலைவனை அழைக்கும் போது மலையின் உயர்ச்சி மட்டுமன்றித் தலைவனின் பெருமிதக் காட்சியும் புலனாகிறது.

தலைவனைக் காணாது அவனது பெருமித உருவத்தை நினைவுறுத்தி நிற்கும் அவன் மலை தலைவிக்கு ஆறுதல் சொல்கிறது.

*.........நெடும்பெருங் குன்றத்துப்*
*பாடின் அருவி சூடி*
*வான்றோய் சிமையம் தோன்ற லானே*

அகம்: 378:22-24

என்று தலைவி கூறுகிறாள். தலைவனின் குன்றத்தைக் காணுதலாலேயே நான் உயிரோடு வாழ்கிறேன் இல்லையேல் இறந்துபடுவேன் என்பதிலிருந்து மலை தலைவனைச் சுட்டும் குறியீடாகிறது எனலாம்.

*படுமழை பொழிந்த சாரலவர் நாட்டுக்*
***குன்ற நோக்கினென் தோழி***
பண்டை யன்றோ கண்டிசின் நுதலே

குறுந்: 249:3-4

என்ற பாடலடிகளில் தலைவனின் மலை கண்டு பிரிவு நோயாகிய பசலை நோய் தீரும் என்ற மனநிலையைத் தலைவி பெற்றுவிடுகிறாள் என்பதைக் காண முடிகிறது. எனவே இங்கு மலை தலைவனைச் சுட்டும் குறியீடாகிறது.

*மணிநிற மால்வரை மறைதொறு இவள்*
*அறைமலர் நெடுங்கண் ஆர்ந்தன பனியே*

ஐங்: 208:4-5

தலைவன் நாட்டில் உள்ள பெரியமலை தலைவியின் கண்ணிலிருந்து மறைந்ததால் அவள் கண்ணீர் விடுகிறாள் என்பது காட்டப்பட்டுள்ளது. உறுதி, உயர்ச்சி, பெருமை, வளம் போன்ற சிறப்பியல்புகள் அனைத்தும் கொண்ட மலையைக் கண்டால் அவனையே கண்டது போல் மகிழ்கிறாள்.

மலையின் உறுதி அவன் உடலுறுதியை மட்டுமன்று காதலுறுதியையும் சுட்டி நம்பிக்கையூட்டுகிறது என்பதை

*பெருவரை நீழ லகளு நாடன்*
*கல்லினும் வலியன் தோழி*

குறுந்: 187:4-5

இந்தக் குறுந்தொகைப் பாடலடி காட்டுகிறது. இதன்வழி உயர்பண்புகள் அனைத்திற்கும் உரிய குறியீடாக மலை விளங்குவதை அறியலாம்.

**சூள்பொய்யாமை**

*இலங்கு மருவித் திலங்கு மருவித்தே*
*வானி னிலங்கு மருவித்தே தானுற்ற*
*சூள்பேணான் பொய்த்தான் மலை*
*பொய்த்தற் குரியனோ பொய்த்தற்குரியனோ*
*அஞ்சலோம் பென்றாரைப் பொய்த்தற் குறியனோ*
*திங்களுள் தீத்தோன்றி யற்று*

கலி: 41:18-24

என்ற கலியடிகளில் தலைவி தலைவனை இயற்பழிக்கிறாள். அதனைத் தோழி மறுக்கிறாள். இங்கு தலைவி தான் சொன்ன சூளுரையைத் தலைவன் பேணவில்லை அதனைப் பொய்த்துவிட்டான் என்று கூறுகிறாள். அதற்குத் தோழி அவன் கூறிய மொழியில் பொய்தோன்றுமாயின் அது திங்களிடத்தே தீ தோன்றிய தன்மையாகும் என்கிறாள். தலைவன் அன்பும் கருணை உள்ளமும் கொண்டவன். அவன் வர சிறிது காலம்தாழ்த்தினும் கண்டிப்பாக வருவான் என்று கூறி அவளைத் தேற்றுகிறாள். சூல் கொண்ட மேகம் இல்லை என்றால் மழை இராது, மழை இல்லையென்றால் மலையில் அருவி

இருக்காது. எனவே தலைவன் பொய்கூறான் என்பதற்கு அருவி குறியீடாகிறது.

தலைவியைப் பிரிந்து பொருள்தேடச் செல்லும் தலைவன் தன் நெஞ்சொடு புலம்பும் போது

*இருள்படு நெஞ்சத்து இடும்பை தீர்க்கும்*
*அருணன் குடைய ராயினு மீதல்*
*பொருளில் லோர்க்க.: தியையா தாகுதல்*
*யானு மறிவென் மன்னே ........*

அகம்: 335-1-4

என்கிறான். வறுமைத் துன்பத்திலிருப்போருக்கு உதவவேண்டும் என்ற கருணை உள்ளம் இருந்தாலும் கொடுப்பதற்குப் பொருள் இல்லாதது போல தான் தலைவியை விட்டுப் பிரிய வேண்டாம் என்று எண்ணினாலும் சூழல் பிரிய வைக்கிறதே என வருந்துகிறான். இங்கு இருள் என்பது வறுமைத் துன்பத்தைக் குறிக்கும் குறியீடாகிறது. இதே சூழல் கொண்ட வேறொரு பாடலில் இரவும் பகலும் இன்ப, துன்பத்திற்குக் குறியீடுகளாக்கப்பட்டுள்ளன.

*இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்*
*நண்பகல் அமையமும் இரவும் போல*
*வேறுவே றியல ஆகி மாறெதிர்ந்து*
*உளவென உணர்ந்தனை ஆயின் ஒருஉம்*

அகம்: 327:1-4

என்று தன் நெஞ்சுக்கு உரைத்த தலைவனின் மொழியில் புணர்வின்பத்தைப் பகலும் பிரிவுத் துன்பத்தை இரவும் குறிக்கும் குறியீடுகளாயின.

பழங்காலந் தொட்டே இருள் என்பது அச்சமூட்டும் ஒன்றாக இருந்துவருகிறது. எனவே இது துன்பத்தின் குறியீடாக விளங்குகிறது எனலாம். இதற்கு மறுதலையாக ஒளி நம்பிக்கையை விளைவிப்பதாய் உள்ளது. இங்கு ஒளி என்பது பகலையும் பகலைச் செய்யும் ஞாயிறையும் குறிக்கின்றது.

யானைகள் நீரற்ற வறண்ட பாலைநிலத்தில் படும் துன்பங்கள் பல. அவற்றைத் தலைவனின் மனநிலையை வெளிப்படுத்தும் குறியீடுகளாக அகத்திணைப் புலவர்கள் ஆள்கின்றனர்.

*வெம்மை தண்டா வெரியுகு பறந்தலைக்*
*கொம்மை வாடிய இயவுள் யானை*
*நீர்மருங் கறியாது தேர்மருங் கோடி*
*யறுநீர் அம்பியின் னெறிமுதல் உணங்கும்*

அகம்: 29:15-18

உணவின்றி உடம்பின் பருமன் குறைந்த யானையானது வெயிலின் கொடுமையால் நீர் வேட்கையுற்றது. பேய்த் தேரினை (கானல் நீர்) நீர் நிலை என்று கருதி அது தோன்றும் இடமெல்லாம் ஓடி ஓடி அலைந்தது என்பது தலைவியின் நினைவால் அவன் பட்ட துன்பத்தைக் காட்டியதாகும். கானல் நீர் தலைவியைச் சுட்டியதாகும். இப்பாலைக் காட்சியில் களிறு, பொருளீட்டப் பிரிந்து காதலி நினைவால்வாடும் தலைவனையே சுட்டுகிறது எனலாம்.

வினை முற்றி மீளும் தலைவன் இடைச்சுரத்தில் தன் நெஞ்சோடு பேசுகிறான். முன்பு பொருள்வயின் பிரிந்து சென்ற போது தலைவியை நினைவு கூருகிறான் அவன்.

*தீந்தயிர் கடைந்த திரல்கால் மத்தம்*
*கன்றுவாய் சுவைப்ப முன்றில் தூங்கும்*
*படலைப் பந்தர்ப் புல்வேய் குரம்பை*

அகம்: 87:1-3

தாயைப் பிரித்து வைத்ததால் பால்பெறாத கன்று, தயிர் கடையும் மத்தில் எழும் மணத்தால் அதனைச் சுவைத்து அமைதியுற்றாற்போல் தலைவியைப் பிரிந்து காதலுணர்வால் வருந்திய அவன் நெஞ்சு நினைவுகளைச் சுவைத்து அமைதியாகிறது.

## தொன்மம்

தொன்மங்கள் (myth) தனி ஒருவரால் படைக்கப்படுவன அல்ல. மக்களிடையே வழங்கி வழங்கி உருப்பெறுவன. இது பலவகை வேறுபட்ட கதைகளாக மாற்றி மாற்றிச் சொல்லப்படும். இடம் விட்டு இடம் பெயர்ந்து பல மாறுதல்களோடு கூறப்படும் ஒன்றாகும் என்று தமிழண்ணல் அவர்கள் சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம் என்னும் நூலில் குறிப்பிடுகிறார் (2000:10). நம் நாட்டில் தொன்று தொட்டு நிலவிவரும் தொன்மை வளமும் அத்தொன்மை மாந்தர்களும் நிகழ்வுகளும் மக்கள் உணர்விலும் வாழ்க்கையிலும் ஆழ்ந்த உறவு கொண்டிருப்பதால் புலவர்களின் கருத்து வெளியீட்டிற்குத் தொன்மங்கள் சரியான கருவியாகப் பயன்படுத்தப்பட்டன.

## மகாபாரதத் தொன்மம்

தலைவனின் பிரிவறிந்த தோழி, அப் பிரிவால் தலைவிபடும் துன்பத்தைக் கூறி செலவழுங்குவிக்கிறாள். இங்குத் தலைவிபடும் துன்பம் யானையின் வாயிலாகக் காட்டப்படுகிறது. உயர்ந்து விளங்குகின்ற மலைப்பகுதியின் காட்டில் சென்ற களிறுகள், உலர்ந்த மூங்கில்

தீப்பற்றியதால் அதனை வேழம் காப்பாற்றி குழுவாக அழைத்துச் செல்லும் சுரம் என்பது பாண்டவர்களை அழிக்கத் துரியோதனன் அமைத்த அரக்கு மாளிகை எரியூட்டப்பட்ட போது வீமன் அதனை அழித்துத் தன் சுற்றத்தோடு உய்துச் சென்றதற்குக் காட்டப்பட்டதாம்.

*வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர் பெற்ற*
*முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினால்*
*ஐவரென் றுலகேத்தும் அரசர்கள் அகத்தாராக்*
*கைபுனை யரக்கில்லை கதழெரி சூழ்ந்தாங்குக்*
*களிதிகழ் கடாஅத்த கடுங்களி றகத்தவா*
*முளிகழை யுயர்மலை முற்றிய முழங்கழல்*
*ஒள்ளுரு வரக்கில்லை வளிமகன் உடைத்துத்தன்*
*உள்ளத்துக் கிளைகளோ டுயப்போகு வான் போல*
*எழுவுறழ் தடக்கையின் இனங்காக்கு மெழில் வேழம்*
*அழுவஞ்சூழ் புகையழல் அதர்பட மிதித்துத்தங்*
*குழுவோடு புணர்ந்து போங்குன்றழல் வெஞ்சுரம்*

கலி: 25:1-11

என்ற கலியடி பாரதக் கதையை யானையின் செயலுக்கு உவமை கூறியிருப்பது தலைவன் தலைவியருக்கு குறியீடாக வந்துள்ளது.

| **பாரதம்** | | **உவமை** | | **குறியீடு** |
|---|---|---|---|---|
| பாண்டவர்கள் | - | களிறு | - | தலைவன் |
| வீமன் | - | வேழம் | - | தலைவி |
| அரக்கு மாளிகை தீப்பற்றி எரிதல் | - | காடு தீப்பற்றி எரிதல் | - | அலர் |

என்று பொருத்திப் பார்க்கும் போது குறியீட்டமைவு தெளிவுறும். மேலும்

*முறஞ்செவி மறைப்பாய்பு முரண்செய்த புலி செற்று*
*மறந்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்*
*குறங்கறுத் திடுவான்போற் கூர்நுதி மடுத்ததன்*
*நிறஞ்சாடி முரண்தீர்ந்த நீண்மருப் பொழில்யானை*
*மல்லரை மறஞ்சாய்த்த மால்போற்றன் சிறைநாப்பன்*
*கல்லுயர் நனஞ்சாரற் கலந்தியலு நாடகேள்*

கலி: 52:1-6

வீரம் பொருந்திய நூற்றுவர்க்குத் தலைவனாகிய துரியோதனனைத் தொடையிலே அடித்து உயிரைப் போக்கினான் வீமசேனன். அதுபோன்று தன் முறம் போன்ற செவியின் பின்புறம் மறைந்து கொண்டு தாக்கும் புலியைத் தன்னுடைய கூரிய கோட்டால் குத்திக் கொன்றது யானை. இங்கு வீமனுக்கு உவமையாகக் கூறப்பட்ட யானையின் செயல் அலர் நீக்கி வரைந்துகொண்ட தலைவனைச் சுட்டியதாகும். இது தலைவனின் பண்புக்குக் கூறப்பட்ட தொன்மக் குறியீடாகும்.

| **பாரதம்** | | **உவமை** | | **குறியீடு** |
|---|---|---|---|---|
| **வீமன்** | - | களிறு | - | தலைவன் |
| துரியோதனன் | - | புலி | - | அலர்கூறிய *அயலோர்* |

என்று பொருத்திப் பார்க்கும் போது இதன் குறியீட்டமைவு புலப்படும்

**இராமாயணத் தொன்மம்**

தலைவன் திருமணம் பேச வந்தவுடன் அதுவரை அலர்ப்பழி தூற்றிவந்த ஊர்வாய் அடங்கியது. அலர் அடங்கிய இந்த நிகழ்ச்சியைக் கூறிப் பெருமிதம் அடையும் தோழி,

*வென்வேற் கவுரியர் தொன்முது கோடி*
*முழங்கிரும் பெளவம் இரங்கும் முன்றுரை*

*வெல்போர் இராமன் அருமறைக் கவித்த*
*பல்வீழ் ஆலம் போல*
*ஒளியவந் தன்றிவ் வழுங்கல் ஊரே*

அகம்: 70:13-17

என்கிறாள். சீதையைச் சிறைமீட்கத் தன் உடனிருந்தோருடன் பல விழுதுகள் கொண்ட பெரிய ஆலமரத்தடியில் அரக்கரை வெல்லுவதற்குச் செய்யும் போர் பற்றிய அரிய மறைச்செய்தியை உரையாடியபோது அப்பழுமரத்திலிருந்த பறவைகளின் ஒலி இராமனின் பேச்சுக்குத் தடையாய் இருந்தது. அவன் தன் கையை உயர்த்திக் கவித்தபோது அத்தனைப் பறவைகளும் உடனே அமைதி பூண்டன. அதுபோலத் தலைவியைத் தலைவன் கைப்பிடித்ததும் அலர்பேசிய ஊரார் உடனே அமைதி பூண்டு விட்டனர். காதல் வெற்றியால் தலைவியும் தோழியும் அடைந்த எல்லையில்லா மகிழ்ச்சியைப் பெருமிதத்தோடு வெளிப்படுத்த இத்தொன்மம் உதவியிருக்கிறது எனலாம்.

பூத்த வேங்கையைப் புலியென்று கருதி அடிமரத்தில் குத்திய மதயானை தன் மருப்பைப் பெயர்த்தெடுக்க மாட்டாது மலைக்குகைகளில் எதிரொலிக்க வருந்திக் குரல் கொடுக்கும் நாடனே எனத் தலைவனை விளிக்கும் தோழி இதற்கு உவமையாக இராமயணத் தொன்மக் காட்சியை உரைக்கிறாள்.

*இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்*
*உமையமர்ந் துயர்மலை இருந்தன னாக*
*ஐயிரு தலையின் அரக்கர் கோமான்*
*தொடிப் பொலி தடக்கையில் கீழ்புகுந் தம்மலை*
*எடுக்கல் செல்லா துழப்பவன் போல*
*உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையைக்*
*கறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை*

*நீடிரு விடரகஞ் சிலம்பக் கூய்த்தன்*
*கோடுபுய்க் கல்லா துழக்கு நாடகேள்*

கலி: 38:1-9

சிவனும் உமையும் பொருந்தி இருந்த உயர்ந்த கயிலை மலையை அரக்கர்க்கரசன் இராவணன் தன் கையாலே பெயர்த்தெடுக்க துணிகின்றான். தன் செருக்காலே செய்ய நினைத்தது முடியாமல் போகவே இராவணன் வருந்தி நிற்கிறான். இச்செயல் பூத்த வேங்கை மரத்தைப் புலியெனப் பிறழ உணர்ந்து குத்தும் மதவேழத்தின் செயல்போல் உள்ளது என்கிறார் புலவர். இதில் மத வேழம் என்பது தோழியின் வரைவுகடாவும் மொழியைத் தன் இன்பத்திற்கு இடையூறு என பிறழ உணர்ந்த களவுத் தலைவனைக் காட்டும் குறியீடாகிறது.

இராவணன் - மதவேழம் - தலைவன்

இரவுக்குறியில் உயிர்க்கேதம் விளையக்கூடும் என்பதை எண்ணாது இளமைச் செருக்கில் களவை விரும்பி இருவரும் இணைவதற்கான மண முயற்சியைத் தவிர்க்கிறான் தலைவன். இதுவே இராவணன் செயல்கொண்டு சுட்டப்படுகிறது எனலாம். இத்தொன்மக் குறியீடுகள் தலைவனின் பண்புநிலையை வெளிப்படுத்துவனவாக உள்ளன.

தலைவன் களவுக் காலத்தில் பலதடைகளையும் கடந்து தலைவியைப் புணர்ந்ததை நெஞ்சிற்கு கூறும்போது கோசரைப் பழிதீர்த்து அன்னிமிஞிலி மகிழ்ந்தது போல இருக்கிறது என்கிறான்.

*வாய்மொழீஇத் தந்தையைக் கண்களைந் தருளா*
*தூர்முது கோசர் நவைத்த சிறுமையிற்*

*கலத்து முண்ணாள் வாலிது முடாஅள்*
*சினத்திற் கொண்ட படிவ மாறாள்*
*மறங்கெழு தானைக் கொற்றக் குறம்பியன்*
*செருவியல் நன்மான் றிதியற் குரைத்தவர்*
*இன்னுயிர் செகுட்பக் கண்டசின மாறிய*
*அன்னி மிஞிலி போல...*

அகம்: 262:5-12

இங்கு களவில் தலைவிக்கிடப்படும் கட்டுக் காவல் கோசரின் பண்புக்கும் அதனைக் கடந்த அன்னிமிஞிலி தலைவனின் பண்புக்கும் குறியீடாக்கப்பட்டுள்ளன.

### 4.7.2 தலைவியின் பண்பும் நிலையும்

வரைவிடை வைத்துப் பொருள் தேடப் பிரிந்த தலைவனை எண்ணி வருந்துகிறாள் தலைவி, அப்பொழுது தோழியிடம் “நான் பகற்பொழுதில் நந்தலைவருடைய குன்றத்தைக் காண்பதன் வாயிலாக ஆற்றியிருக்கின்றேன். எனது பிரிவுத் துயரை பெருக்கிட இரவு கடலாய்ப் பெருகிவருகிறது” என்கிறாள். கடலில் மூழ்கும் கப்பலைப்போல் தலைவனின் குன்றை மூழ்கடிக்க வரும் துன்பப் பெருவெள்ளமாக இரவு அவள் பார்வையில் குறியீடாகியது.

*கடலாழ் கலத்திற் றோன்றி*
*மாலை மறையுமவர் மணிநெடுங் குன்றே*

குறுந்: 240:6-7

என்று தலைவியின் உள்ளத்தில் தன்னைப் பிரிந்த தலைவன் பற்றிய துயர அலைகள் எழுப்புகின்றன என்பதைப் பாடலடிகள் உணர்த்துகின்றன. தலைவனைப் பிரிந்த தலைவியின் உள்ளம்

*வந்தன்று வாழியோ மாலை*
*ஒருதான் அன்றே கங்குலும் உடைத்தே*

குறுந்: 122:3-4

என்ற குறுந்தொகைப் பாடலடிகளில் மாலைப் பொழுது வந்துவிட்டதே இனி துன்பம் தரும் இரவுப் பொழுதினை ஆற்றுவது எவ்வாறு என்று அவள் புலம்புவதைக் காண முடிகிறது. இங்கு இரவு துன்பத்தின் குறியீடாகிறது.

வரைவிடைப் பிரிந்திருக்கும் குறுந்தொகைத் தலைவி இரவை இன்னாதது என்று குறிப்பிடுகிறாள்.

*நமக்கொன் றுரையா ராயினுந் தமக்கொன்*
*றின்னா இரவின் இன்றுணை யாகிய*

குறுந்: 266:1-2

என்ற பாடலடிகள் இரவை இன்னாதது என்று குறிப்பிடுகின்றன. இங்கு இரவு துன்பத்தின் குறியீடாகிறது.

பகலைச் செய்த ஞாயிறு மாலையில் மலையில் மறைந்த போது காரிருளால் கவ்வப்பட்டு கலங்கிக் கவினழிந்து கிடக்கும் ஞாலத்தை நல்லந்துவனார், பல்வேறு அரச உவமைகளாற் கலித்தொகையில் காட்டுவதையும் அவ்வருணனை தலைமகள் உள்ளம் துயருற்று மருள்தலைக் குறிப்பித்து நிற்றலையும் இங்கே காணலாம்.

*அருள்தீர்ந்த காட்சியான் அறநோக்கான் நயஞ்செய்யான்*
*வெருவுற உய்த்தவன் நெஞ்சமபோற் பைபய*
*இருள் தூர்பு புலம்பூரக் கனைசுடா கல்சேர*

கலி: 120:1-4

எனவரும் கலியடிகளிலும் "காணாமை இருள் பரப்பிக் கையற்ற கங்குல்" (கலி:126:6) என்ற கலியடியிலும் இருள் துன்பத்தின் குறியீடாகி நிற்கிறது.

தினந்தோறும் தலைவியைச் சந்தித்துச் சென்ற தலைவன் இன்று பகலிலே எல்லோரும் காணவருகின்றான் என்பதை

*........ ........ .......... கரவா*
*தொல்லென வொலிக்கு மிளையரொடு வல்வா*
*யரவச் சீறூர் காணப்*
*பகல்வந் தன்றாற் பாய்பரி சிறந்தே*

அகம்: 160:17-18

என்ற அகநானூற்றடிகளில் தோழி கூறுவதாவது; இரவிலே வந்து கொண்டிருந்த தேர், பகலிலே எல்லோரும் காண வருவது நின்னை மணம் புரிந்து கொள்ளவே என்ற மகிழ்ச்சியான செய்தியைத் தலைவிக்குத் தெரிவிக்கிறாள். இங்கு பகல் இன்பத்தின் குறியீடாகிறது.

பகலைச் செய்யும் பரிதி உயிர்க்கெல்லாம் காப்பளித்து மகிழ்ச்சியின் குறியீடு ஆதலை

*ஒண்ணுதல் மகளிர் ஓங்குகழிக் குற்ற*
*கண்நேர் ஒப்பின் கமழ்நறு நெய்தல்*
*அகல்வரிச் சிறுமனை அணியுந் துறைவ*
*வல்லோர் ஆய்ந்த தொல்கவின் தொலைய*
*இன்னை ஆகுதல் தகுமோ ஓங்குதிரை*
*முந்நீர் மீமிசைப் பலர்தொழத் தோன்றி*
*ஏமுற விளங்கிய சுடரினும்*
*வாய்மை* சான்றநின் சொல்நயந் தோர்க்கே

நற்: 283

என்ற நற்றிணைப் பாடல் காட்டுகிறது. தலைவியை வரைந்து கொண்டால் அவள் பெருமகிழ்ச்சியடைவாள் என்பதைக் குறிக்க வந்த பாடலடிகளாக இங்கு அமைந்துள்ளது.

## பூவும் பெண்ணும்

சங்க இலக்கியத்தில் பூக்கள் அவற்றின் தன்மைக்கேற்ப நுட்பமான வாழ்க்கை நிகழ்ச்சிகளை உணர்த்த ஆளப்பட்டுள்ளன.

“பூவின் வளர்பருவங்களைச் சங்கத்தமிழ் மக்கள் நன்கு அறிந்திருந்தனர். பூவின் வளர் பருவங்கள் ஏழு ஆகும். அவை நனை, அரும்பு, முகை, போது, மலர், அலர், வீ என்பனவாகும். பெண்ணின் பருவங்களும் ஏழு என இலக்கியங்கள் கூறுகின்றன. அதனால் தான் பூவைப் பெண்ணோடு ஒப்பிடும் தன்மை உண்டாயிற்று போலும்.

1. **நனை** என்பது தோன்றல் அல்லது பிறப்புப் பருவமாகும்
2. **அரும்பு** பூவின் இரண்டாவது வளர்ச்சிப் பருவமாகும்.
3. **முகை** இது மூன்றாவது வளர்ச்சிப் பருவம்
4. **போது** பூவின் நான்காவது வளர்பருவமாகும் முகை திறக்கும் நிலையைப் போது குறிக்கும். அதாவது முகைக்கும் மலருக்கும் இடைப்பட்ட பருவம் ஆகும்.
5. பூவின் ஐந்தாவது வளர்பருவம் **மலர்** ஆகும். பூவிதழ்கள் விரிந்து காணப்படும் நிலையைக் குறிப்பது மலர். இந்த வளர்பருவத்தில் தான் பூ மகரந்தச் சேர்க்கைக்குத் தயாராகிறது. இது ஆங்கிலத்தில் Anthesis என்று சொல்லப்படும் நிகழ்வு ஆகும்.

6. பூவின் ஆறாவது வளர் பருவம் **அலர்** ஆகும். இந்நிலையில் மகரந்தப்பையில் இருந்து மகரந்தங்கள் வெளியேற்றப்பட்டு வேறு பூவின் மகரந்தங்கள் மகரந்தச் சேர்க்கை மூலம் சூலகத்தை அடைந்து அதனைக் கருவுறச் செய்யும் நிகழ்வுகள் நடைபெறுகின்றன. இதனை Post – Anthesis நிலை என்று ஆங்கிலத்தில் கூறுவர்.

7. பூவின் ஏழாவது பருவமாகிய கடைப் பருவம் **வீ** எனப்படும். பூக்காம்பிலிருந்து கழன்று பூவிதழ்கள் விழுதலைக் குறிக்கும் பருவம் இது. வீ என்றால் நீங்குதல், விழுதல், ஒழிதல் எனப் பொருள்படும்.

*பொகுட்டரை யிருப்பைக் குவிகுலைக் கழன்ற*
*ஆலி யொப்பின் தூம்புடைத் திரள் வீ*

அகம்: 95:6-7

வீ பருவம் உண்மையில் வீழும் பருவமல்ல பூவின் இதழ்கள் வீழ்ந்தாலும் கருவுற்ற சூலகம் புதிய வீரியத்தோடு வளர ஆரம்பிக்கும் நிலையைப் பூ உணர்த்துகிறது" (கிருஷ்ணமூர்த்தி, 2007:67-68).

இப்பூக்களின் தன்மையையே சங்க இலக்கிய தலைவிக்கு குறியீடாக்கியிருக்கின்றனர் புலவர் பெருமக்கள்.

குவிமுகைத் தன்மையும், போதுநிலையும் தலைவன் காதலன்பு கொண்ட சூழலையும் வதுவைக்கு முயலா பேதமையையும் காட்டும்.

*இவளே, நின்சொற் கொண்ட என்சொல் தேறிப்*
***பசுநனை** ஞாழற் பல்சினை ஒருசிறைப்*

*புதுநலன் இழந்த புலம்புமார் உடையள்*

குறுந்: 81:1-3

என்ற இக்குறுந்தொகையடிகளில் தோழி, தலைவனே உன்னுடைய சொல்லைக் கேட்டு நான் சொல்லியதனாலேயே உன்னோடு சேர்ந்தனள் என்று தலைவி தலைவனோடு நட்புக் கொண்டதைக் கூறுகிறாள்.

***அரும்புமுதிர்*** *வேங்கை அலங்கல் மென்சினைச்*
*சுரும்புவாய் திறந்த பொன்புரை நுண்தாது*

அகம்: 242:1-2

என்ற இப்பாடலடிகள் தலைவியின் விருப்பமின்றி தலைவன் உறவுகொள்ளுதலைச் சுட்டுகிறது.

சிறிதே அரும்பிய தோற்றம் என்பது அன்பு முதிர்ச்சியும் ஆழமும் அறியாத பேதமையைக் காட்டும்.

*மண்ணாப் பசுமுத்து ஏய்ப்பக் குவியிணர்ப்*
***புன்னை அரும்பிய*** *புலவுநீர்ச் சேர்ப்பன்*

நற்: 94:5-6

என்ற அடிகளிலும்

*மண்ணா முத்தம் அரும்பிய* ***புன்னைத்***
*தண்ணருங் கானல் வந்துநும்*
*வண்ண மெவனோ வென்றனிர் செலினே*

அகம்: 30:13-15

என்ற அடிகளிலும் வரும் சிறிதே அரும்பிய தோற்றம் பேதமையைக் காட்டும் குறியீடாகும். மண்ணா முத்தம் என்பது கடலிலிருந்து எடுக்கப்பட்ட கழுவப் படாத பளிச்சென்றில்லாத முத்தாகும்.

நறுமணமில்லா மலர்கள் பொருள் வறட்சியையும் அன்பு வறட்சியையும் தெரிவிக்கும்.

*இரும்பல் மெல்லணை ஒழியக் கரும்பின்*
*வேல்போல் வெண்முகை பிரியத் தீண்டி*
*முதுக்குறைக் குரீஇ முயன்றுசெய் குடம்பை*
*மூங்கில் அங்கழை தூங்க ஒற்றும்*
*வடபுல வாடைக்குப் பிரிவோர்*
*மடவர் வாழியிவ் வுலகத் தானே*

நற்: 366:7-12

மணமற்ற கரும்பின் முகையை வாடை தீண்டும் என்றது தலைவன் நிலையில்லாத பொருளை விரும்பி முயல்கிறான் என்பதை உணர்த்தும். இங்கு கரும்பின் பூ பொருள் வறட்சியைக் குறிக்கும் குறியீடாகிறது.

தலைவன் மீது அன்பில்லாத பரத்தையைக் குறிக்க வேழம் குறியீடாக்கப்பட்டுள்ளது.

*கரைசேர் வேழம் கரும்பின் பூக்கும்*
*துறைகேழ் ஊரன் கொடுமை நன்றும்*

ஐங்: 12:1-2

கரும்பின் பூவைப்போன்று வெண்ணிறமாகவும் மணமற்றும் பூக்கும் வேழம், (நாணல்) தலைவனின் பொருள் மீது விருப்பங்காட்டி அவன் மீது அன்பற்று இருக்கும் பரத்தையைச் சுட்ட வந்த குறியீடாகும்.

பூத்த கரும்பும் காய்த்த நெல்லும் முறையே பரத்தையையும் தலைவியையும் சுட்டும் குறியீடுகளாக வருகின்றன.

*பூத்த கரும்பின் காய்த்த நெல்லின்*
*கழனி ஊரன் மார்பு*

ஐங்: 4:4

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலில் காய்த்துப் பயன்தரும் நெல்லையும், பூத்துப் பயன்படாத கரும்பையும், முறையே மக்களையீன்று தரும் கற்புடைய மாதரையும், அச்சிறப்பில்லாத விலை மகளிரையும் ஒப்பக் கருதி வாழ்கிறான் தலைவன் என்பதைக் குறிப்பிடுகிறது. இங்கு பூத்த கரும்பு பரத்தையையும், காய்த்த நெல் தலைவியையும் சுட்டும் குறியீடாகின்றன.

தலைவன் வரைவு நீட்டித்தலால் தலைவி அலர் அச்சம் கொண்டு மனம் சோர்ந்திருத்தலை நெய்தல் பூ கூம்பியிருத்தலைக் கொண்டு காட்டுகிறார் குன்றியனார்.

*பெருங்கடல் முழங்கக் கானல் மலர*
*இருங்கழி ஓதம் இல்லிறந்து மலிர*
*வள்ளிதழ் **நெய்தல் கூம்பப்** புள்ளுடன்*
*கமழ்பூம் பொதும்பர்க் கட்சி சேரச்*
*செல்சுடர் மழுங்கச் சிவந்துவாங்கு மண்டிலம்*
…….. ……… ……. …….
*அன்னர் உன்னார் கழியிற் பன்னாள்*
*வாழலேன் வாழி தோழி யென்கண்*
*பிணிபிறிது ஆகக் கூறுவர்*
*பழிபிறிது ஆதல் பண்புமார் அன்றே*

நற்: 117:1-5:8-11

என்ற நற்றிணையடிகள் காட்டுகின்றன.

பகற்குறி வந்த தலைவன் மீண்டு போகும் போது அவன் பிரிவை எண்ணி வருந்தி புலம்புகிறாள் தலைவி. இதனை

*நெய்தல் கூம்ப நிழழ்குணக்கு ஒழுகக்*
*கல்சேர் மண்டிலஞ் சிவந்துநிலந் தணியப்*
*பல்பூங் கானலும் அல்கின் றன்றே*

நற்: 187:1-3

என்ற அடிகள் காட்டுகின்றன. மீண்டு சென்ற தலைவனை நினைந்து வருந்தியதற்கு இங்கு நெய்தல் பூ கூம்புதல் காட்டப்பட்டுள்ளது. தலைவனை முயங்கியிருந்த சோலையும் பொலிவற்றுத் தோன்றுவதாக அவள் கூறுகிறாள்.

பெருமழையில் மலர் குழைதல், பனியால் கரிதல் போன்றவை மனத்தின் ஆற்றாமையைக் குறிக்கும். தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி அவனது பிரிவை ஆற்றாது வாடையை விளித்துக் கூறும்போது

*விண்ணதிர்பு தலைஇய விரவுமலர் குழையத்*
*தண்மழை பொழிந்த தாழ்பெயற் கடைநாள்*
*எமிய மாகத் துனியுளங் கூரச்*
*சென்றோ ருள்ளிச் சிலவனை நெகிழப்*
*பெருநசை யுள்ளமொடு வருதிசை நோக்கி*
*விளியு மெவ்வமொ டளிய னென்னாது*
*களிறுயிர்த் தன்ன கண்ணழி துவலை*
***முளரி கரியும் முன்பனிப் பானாட்***
*குன்றுநெகிழ்ப் பன்ன குளிர்கொள் வாடை*

அகம்: 163:1-9

என்று கூறுகிறாள். இங்கு பல்வேறு வகைப்பட்ட மலர்களும் பெருமழையால் குழைதலும், கல்லையும் நெகிழ்விக்கும் குளிர் பனியால் தாமரைமலர் கரிந்து போதலும் தலைவியின் ஆற்றாமையைக் காட்டும் குறியீடுகளாகின்றன.

மலர்வாடுதல் என்பது புறக்கணிப்பினால் மனம் வாடுதலைக் காட்டும்.

*ஞெகிழ்தோட் கலுழ்ந்த கண்ணர்*
*மலர்தீய்ந்து அனையர் நின்நயந் தோரே*

நற்: 315:11:12

என்ற பாடலடிகள் பரத்தையை விட்டுத் தலைவன் தலைவியிடம் சென்றபோது அவளது (பரத்தை) மனநிலையைக் காட்டியது.

மலர் நசுங்குதல் என்பது மனம் புண்ணுறுதலைக் குறிக்கும். தலைவன் வந்து சென்றதை அவனுடைய தேர் கால்கள் நெய்தல் மலர்களை நசுக்கிச் சென்றிருப்பதன் மூலம் காண முடிகிறது. தலைவன் வந்தும் தலைவி எதிர்நோக்கியிருந்தும் குறி வாய்ப்பாக அமையாமலேயே தலைவன் மீண்டு சென்றிருக்கிறான். பூக்கள் நசுங்கியது தலைவியின் மனம் வருந்தியதைக் காட்டுகிறது.

*வாண்முகந் துமிப்ப வள்ளிதழ் குறைந்த*
*கூழை நெய்தலு முடைத்திவண்*

குறுந்: 227:2-3

என்ற குறுந்தொகைப் பாடலடிகள் குறிதவறியதால் மீண்ட தலைவனை எண்ணி வருந்திய தலைவியைக் காட்டுகிறது. இது போன்ற நிகழ்வுகள் இன்றைய சில திரைப்படங்களிலும் பதிவு செய்யப்பட்டுள்ளன. 'காதலர் தினம்' எனும் திரைப்படத்தின் தலைவன் கொடுத்த ரோஜாப் பூ தண்டவாளத்தில் விழுந்துவிடுகிறது. புகைவண்டி அதனை நசுக்கி விடுகிறது. அப்பொழுது பூவையும் தலைவனையும் மாற்றி மாற்றி காண்பிக்கும் போது அவனின் உணர்வைப் பூவின் மூலம் காட்டியிருக்கிறார் இயக்குநர்.

தலைவனின் வருகையைக் கண்டு அயலார் தூற்றும் பழிச்சொல்லுக்கு அஞ்சி தலைவனை இரவுக்குறி மறுக்கிறாள் தோழி.

*சிறுநா வொண்மணி விளரி யார்ப்பக்*
*கடுமா நெடுந்தேர் நேமி போகிய*
*இருங்கழி நெய்தல் போல*
*வருந்தின ளியணீ பிரிந்திசி னோளே*

குறுந்: 336:3-6

தேரின் மணி ஒலி ஆர்ப்ப என்பது களவு வெளிப்பட்டதற்கும்; தலைவி தேரின் சக்கரம் நெய்தல் பூவின்மேல் சென்று சிதைந்தது, அலர் காரணமாக மனம் குழைந்து வருந்தினாள் என்பதற்கும் குறியீடாக்கப்பட்டுள்ளன.

களவொழுக்கத்தையே பெரிதும் விரும்பி வரைதலின் கருத்தின்றித் திரியும் தலைவனை வரைவு முடுக்கும் பொருட்டுத் தலைவி அவள் படும் துன்பத்தை யானை மூலமாகத் தலைவனுக்கு கூறுகிறாள்.

*இடம்படு பறியா வலம்படு வேட்டத்து*
*வாள்வரி நடுங்கப் புகல்வந் தாளி*
*உயர்நுதல் யானைப் புகர்முகத் தொற்றி*
*வெண்கோடு புய்க்குந் தண்கமழ் சோலைப்*
*பெருவரை யடுக்கத் தொருவேல் ஏந்தி*
*தனியன் வருதல் அவனும் அஞ்சான்*

அகம்: 252:1-6

என்ற இவ்வகநானூற்றுப் பாடலில் யானைக்கு ஒரு பக்கத்தே புலியும் மற்றொரு பக்கத்தே ஆளியும் இருந்து துன்புறுத்தும் காட்சி தலைவியைக் குறிக்கும் குறியீடாகிறது. தலைவன் வரும் வழியின் கொடுமையும் மற்றொரு பக்கம் அவன் வாராமையால் உறும் துன்பத்தையும் குறிப்பிடுகிறது.

வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்கள், பாத்திரங்கள் நிகழ்ச்சிகள் ஆகியவை குறியீடாதல் சங்க இலக்கியத்தில் காணப்படுகிறது. நல்ல குணம் கொண்ட மாந்தரைத் தொன்மத்தின் சிறந்த பாத்திரங்களுடனோ வரலாற்று மாந்தருடனோ ஒப்புமைபடுத்தி இனங்காண்பது சமுதாய வழக்கமாகும்.

தலைவியின் இணையற்ற நலம் குறிக்க வரலாற்றுப் புகழ்மிக்க நகரங்களை உவமிக்கும் மரபு அக இலக்கியத்தில் விரவிக் காணப்படுகிறது.

*துறைகெழு மரந்தை யன்ன விவள்நலம்*

நற்: 35:7

*குட்டுவன் மாந்தை யன்னவெங்*
*குழல்விளங் காய்நுதற் கிழவனு மவனே*

குறுந்: 34:5-6

*ஒண்டொடி மகளிர் வண்ட லயரும்*
*தொண்டி யன்னவென் நலந்தந்து*

குறுந்: 238:3-4

*அழிசி ஆர்க்கா டன்ன விவள்*
*பழிதீர் மாணலந் தொலைதல் கண்டே*

குறுந்: 258:7-8

*வளங்கெழு தொண்டி யன்ன விவள் நலனே*

அகம்: 10:13

*திண்டேர் பொறையன் தொண்டி யன்னஎம்*
*ஒண்டொடி ஞெமுக்கா தீமோ தெய்ய*

அகம்: 60:7-8

*ஓம்பரண் கடந்த அடுபோர்ச் செழியன்*
*பெரும்பெயர்க் கூடல் அன்னநின்*
*கரும்புடைத் தோளும் ஊடையவா லணங்கே*

நற்: 39:9-11

*அரியலங் கழனி ஆர்க்கா டன்ன*
*காமர் பணைத்தோள்*

நற்: 190:6-7

*வெல்போர்ச் சோழ ராமு ரன்னவிவள்*
*நலம்பெறு சுடர் நுதல்*

ஐங்: 56:2-3

*கைவண் விராஅன் இருப்பை யன்ன*
*இவளணங் குற்றனை போறி*

ஐங்: 58:2-3

*மாவண் கடலன் விளங்கில் அன்னவெம்*
*மையெழில் உண்கண் கலுழ*

அகம்: 81:13-14

புகழ் வாய்ந்த நகரைப் பெண்ணுக்கு உவமையாக்கும்போது வெறும் அழகுமட்டும் ஒப்புமையாக அமையவில்லை. வளம் எல்லாம் தரும் நலன், கட்டுக்கோப்பு, காவல், அடைதற்கருமை நாகரிகப் பண்புடைமை, இன்னபிற நலங்கள் அனைத்தும் ஒப்புமைக்குரிய பொதுப் பண்புகளாகக் காட்டப்படுகின்றன. மேலும், உரிய தன் தலைவனுக்கேயன்றி வேறு எவருக்கும் வசப்படாத கற்புநிலையையும் சிறப்பு ஒப்புமையாகக் காணலாம்.

இவை அனைத்தையும் குறிக்கும் வகையில் நகரம் பெண்ணிற்குக் குறியீடாக அக இலக்கியத்தில் ஆளப்படுகிறது.

மகளிர்தம் மார்பகம் அவர்தம் தலைவர்க்கே உரிமையுடையது.

*நறவுமகிழ் இருக்கை நன்னன் வேண்மான்*
*வயலை வேலி வியலூர் அன்ன நின்*
*அலர்முலை ஆகம் புலம்ப*

அகம்: 97:12-14

*முழவுறழ் திணிதோள் நெடுவே ளாவி*
*பொன்னுடை நெடுநகர்ப் பொதினி அன்னநின்*
*ஒண்கேழ் வனமுலை*

அகம்: 61:15-17

என்று மார்பகம் சிறப்பிக்கப்படுகிறது. நன்னன், ஆவி ஆகியோரால் ஆளப்பட்ட வியலூரும் பொதினியும் பகைவரால் கைப்பற்ற எண்ணவும் படாதவாறு அவர்க்கே உரிமையுடையவனாய் இருந்தமை கொண்டு உடலாலும், உயிராலும் தலைவனுக்கே உரிமை பூண்ட தலைவியின் காதல் உறுதி இப்பாடல்களில் குறிப்பாகச் சுட்டப்படுகிறது.

தலைவன் தலைவியை மெய்யுற்றுப் புணர்ந்ததையும் பிரிவில் அவளது புணர்ச்சியின்பம் அவன் நினைவுகளில் மேலோங்கி நிற்றலையும் நாகரிகமாகக் குறிப்பிடவும் நறுமணத்தைக் குறியீடாகப் பயன்படுத்துவர். நறுமணத்திற்கு உவமையாக்கப்படும் காந்தள், முல்லை, குவளை போன்ற மலர்களை மாண்புடை மன்னர்தம் மலை, காடு, சுனை இவற்றில் பூத்தவை என உரைத்துப் பாடியிருப்பதையும் காணமுடிகிறது.

*பெறுவ தியையா தாயினும் உறுவதொன்*
*றுண்டுமென் வாழிய நெஞ்சே திண்டேர்க்*
*கைவள் ளோரி கானந் தீண்டி*
*எறிவளி கமழு நெறிபடு கூந்தல்*

குறுந்: 199:1-4

தலைவியின் கூந்தல் ஓரியினது கானத்தின் மணம் போன்று கமழ்ந்தது என பாராட்டுகிறான்.

*கழல்தொடி ஆஅய் மழைதவழ் பொதியில்*
*வேங்கையும் காந்தளும் நாறி*
*ஆம்பல் மலரினும் தாந்தண் ணியனே*

குறுந்: 84:3-5

என்ற இக்குறுந்தொகைப் பாடலடிகள் மகட்போக்கிய செவிலி, தலைவி மேனியில் புணர்ச்சியால் எழுந்த நறுமணம் கொண்டு முன்பே அவள் காதலை அறிந்தேனில்லையே என வருந்துகிறாள். இங்கு களவில் புணர்ந்ததை உணர்த்த நறுமணம் குறியீடாகியது.

**கோசர்**

கோசர் படைப்பயிற்சியிலும் சூழ்ச்சித்திறத்திலும் வல்லவர். முதிய ஆலின் கீழமர்ந்து நியாயம் வழங்கியிருக்கின்றனர். எனவே காதல் துறையில் சொல் பிறழாமை, கொண்டதுவிடாப் பற்று, நட்பு, எண்ணியது முடிக்கும் நுட்பதிட்பம், நேர்மை ஆகியவற்றுக்கு வரலாற்றுக் குறியீடாகக் கோசர் இடம் பெற்றிருக்கிறார்கள்.

*பறைபடப் பணிலம் ஆர்ப்ப இறைகொள்பு*
*தொன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய*
*நாலூர்க் கோசர் நன்மொழி போல*

*வாயா கின்றே தோழி ஆய்கழற்*
*சேயிலை வெள்வேல் விடலையொடு*
*தொகுவளை முன்கை மடந்தையொடு நட்பே*

குறுந்: 15:1-6

உடன் போய் மகட்பிரிந்த செவிலி நற்றாயிடம் தன் காதலனோடு தலைவி பூண்ட நட்பு கோசர் நன்மொழிபோல உண்மையாகிவிட்டது என்கிறாள்.

## ஆட்டனத்தி ஆதிமந்தி

சேரன் ஆட்டனத்தி, சோழன் மகளான தன் மனைவி ஆதிமந்தியுடன் கழார்த் துறையில் காவிரிப் புதுப்புனலாடினான். அவனை வெள்ளம் கொண்டு சென்று கடலில் தள்ளியது. கரை நெடுகக் கணவனைத் தேடிக் கலங்கி சென்றாள் ஆதிமந்தி. அவனைக் காத்து மனைவியிடம் சேர்த்துத் தான் உயிர்துறந்தாள் அவனது முன்னாள் காதலி மருதி. இவ்வரலாறு பிரிவால் வருந்தும் தலைவியின் துயரைச் சுட்டும் வகையில் அதனை ஆதி மந்தியின் துயர்கொண்டு குறியீடாக்கியுள்ளனர்.

துலைவனைத் தலைவியிடமிருந்து பிரிக்கும் பரத்தையொழுக்கம் காவிரி வெள்ளத்தோடு ஒப்புமை கொள்கின்றது.

*ஆட்ட னத்தியை காணீ ரோவென*
*நாட்டின் நாட்டின் ஊரின் ஊரிற்*
*கடல் கொண்டன்றெனப் புனலொளித் தன்றெனக்*
*கலுழ்ந்த கண்ணள் காதலற் கெடுத்த*
*ஆதிமந்தி போல*
*ஏதஞ் சொல்லிப் பேதுபெரி துறலே*

அகம்: 236:16-21

என்ற அகநானூற்றுப் பாடலடிகள் பரத்தை ஒழுக்கம் கொண்ட தலைவன் மீது ஊடி இருந்த தலைவி தலைவன் வந்த பொழுது ஊடாது அவனொடு மகிழ்ந்திருந்ததற்குக் காரணம் தோழியிடம் கூறுகிறாள். நான் தலைவனின் காமத்தையும் பெருமையையும் அறியாது ஊடியேயிருந்தால் “நான் தவறு செய்தவள் ஆகியிருப்பேன். பின் ஆதி மந்தி போல யானும் ஏதம் சொல்லி பேதுற்றுறிருப்பேன்” என்று கூறுகிறாள்.

## பெண்கொலை புரிந்த நன்னன்

தனக்குரிய மாமரத்தின் பசுங்காயை நீராடுகையில் கண்டெடுத்து உண்டதற்காக ஒரு பெண்ணைக் கொலை செய்தவன் நன்னன். அவள் தந்தை எண்பத்தொரு யானைகளையும் அவளது நிறைகொண்ட பசும்பொன் பாவையையும் ஈடாகத் தர ஒப்பியும் அவன் மனமிரங்கவில்லை. எனவே அவன் நிரையம் புகுதற்கே உரியவன் என்று சான்றோர் உலகம் அவனை இகழ்ந்தது.

*மண்ணிய சென்ற ஒண்ணுத லரிவை*
*புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்*
*கொன்பதிற் றென்பது களிற்றொ டவணிறை*
*பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்*
*பெண்கொலை புரிந்த நன்னன் போல*
*வரையா நிரையத்துச் செலீஇயரோ அன்னை*
*ஒருநாள் நகைமுக விருந்தினன் வந்தெனப்*
*பகைமுக ஊரின் துஞ்சலோ இலளே*

குறுந்: 292

தலைவன் ஒருநாள் விருந்தாக வந்ததைக் கண்ட அன்னை அன்று தொடங்கி இரவெல்லாம் துயிலாதிருந்து தலைவியை புறம் போகாது காவல் செய்து தலைவிக்கு இன்னாமை செய்தவளாயினள். இது தலைவிக்கு கொல்வதைப் போன்ற துன்பம் தந்தது. எனவே தன் அன்னையை நன்னன் போல மீளாத் தீ நரகம் புகுவாயாக என்று பழிக்கிறாள்.

## கையுறை ஏற்றலும் மறுத்தலும்

அகப்பாடல்களில மலர்தருதல் என்பது நெகிழ்ந்த மனத்தின் அன்பினைத் தருதலையுணர்த்தும். கொடுக்கும் மலர் அல்லது தழையுடையை (கையுறை) ஏற்றுக் கொள்வது அன்பினை ஏற்பதற்கு அடையாளமாகும். தலைவன் தன் அன்பின் அடையாளமாகத் கொடுத்த பூமாலையை, கையுறையை ஏற்க மறுப்பது தலைவனை ஏற்றுக்கொள்ளாததற்குக் குறியீடாகும்.

*சிலம்பின் மேய்ந்த சிறுகோட்டுச் சேதா*
*அலங்குகுலை காந்தள் தீண்டித் தாதுகக்*
*கன்றுதாய் மருளுங் குன்ற நாடன்*
*உடுக்குந் தழைதந் தனனே அவையாம்*
*உருப்பின் யாயஞ் சுதுமே கொடுப்பின்*
*கேளுடைக் கேடஞ் சுதுமே ஆயிடை*
*வாடல கொல்லோ தாமே.....*

நற்: 359:1-7

என்ற நற்றிணைப்பாடலில் மகரந்தத் தாதால் மூடப்பட்டக் கன்றைப் பார்த்துத் தாய்ப்பசு மருண்டது என்பது தழையாடை அணிந்த தலைவியைக் கண்டு அன்னை சினந்ததைக் குறிப்பிடுகிறது. தலைவன் கொடுத்த தழையாடையை ஏற்று உடுத்திக்கொண்டால் அன்னை சினம்கொள்வாள், அன்னைக்கு அஞ்சி

அதனை உடுக்காமலிருந்தால் அவன் தன்னை தலைவி ஏற்றுக்கொள்ளவில்லை என ஆற்றாமைக் கொள்வான். இப்பொழுது என் செய்வது எனத் தோழி புலம்புவதிலிருந்து இக்குறியீட்டுப் பொருண்மையைக் காண முடியும். இதில் சேதா அன்னையையும் கன்று தலைவியையும் சுட்டும் குறியீடுகளாகின்றன. மகரந்தத்தூள் படிந்த கன்று நிறம் மாறி இருத்தல் என்பது தழையாடை அணிந்த தலைவியைச் சுட்டும்.

தலைவன் தன் அன்பின் அடையாளமாகத் தொடுத்த பூமாலையை ஏற்க மறுப்பது தலைவனை ஏற்காததற்கு குறியீடாகும்.

*நொதுமலாளர் கொள்ளார் இவையே*
*எம்மொடு வந்து கடல்ஆடு மகளிரும்*
*நெய்தல் அம்பகைத் தழைப்பாவை புனையார்*
*உடலகம் கொள்வார் இன்மையின்*
*தொடலைக்கு உற்ற சில பூவினரே*

ஐங்: 187

என்ற இப்பாடல் தலைவனின் அன்பினை ஏற்க மறுக்கும் தோழி யாவராலும் விரும்பப்படாததும், கடல் விளையாட்டயரும் இளம்பெண்கள் தம் விளையாட்டுப் பொம்மைக்குக் கூட அணிய விரும்பாததுமான இப்பூக்கள் எமக்குப் பயன்படாது என்று கூறுகிறாள். இங்கு கையுறை ஏற்காதது தலைவனை ஏற்காததற்கு குறியீடாகும்.

## முருகக் கடவுள் குறியீடாதல்

தலைவனுடன் போகிய தன்மகளுக்குத் தலைவனின் அன்பு கிடைக்கவேண்டும் என்று வாழ்த்தும் தாய் அதை வெளிப்படக் கூறாது

*மள்ளர் கொட்டின் மஞ்ஞை ஆலும்*
*உயர் நெடுங்குன்றம் படுமழை தலைஇச்*
***சுரம்நனி இனிய ஆகுகதில்ல***

ஐங்: 371:1-3

என்கிறாள். பறைமுழக்கை இடியெனப் பிறழ வுணர்ந்து மழை வந்ததென மயிலாடும் சுரத்தில் மழை பெய்வதாகுக என்று கூறுகிறாள். மேலும் முருகன் என்னும் சொல் அழகு எனப் பொருள்படும். நெடுவேல் கொண்டு அவுணரை வென்ற முருகன் தமிழ் மரபில் ஆண்மையின் குறியீடாக இருந்திருக்கின்றான். பழங்காலத்தில் தமிழ்மரபில் முருகனே வீரம், காதல் இரண்டிற்கும் தெய்வமாகத் திகழ்ந்திருக்கிறான். வேடனாக வந்து குறிஞ்சி நிலத்து வள்ளியை அவன் களவில் மணந்தமை போன்ற தொன்மம் இதை உணர்த்தும். மேலும் ஓர் ஆண்மகன் கன்னியைத் தொட்டதால் ஏற்பட்ட உடல் வேறுபாடானது முருகன் தொட்டதால் வந்தது எனக் காணும் சமூக மரபை வெறியாட்டு வலியுறுத்துகிறது.

இரவுக்குறி வந்து மெய்மலி உவகையுடன் தலைவியின் மனையகம் புகும் தலைவனை அன்னை பார்த்துவிட்டாள். அவனது வருகையை முருகன்தான் அருள் வழங்க வந்திருக்கிறான் என்று நினைந்து அவன் வந்த திசையை வணங்கி நின்றாள்.

*முருகென உணர்ந்து முகமன் கூறி*
*நெடுவேட் பரவும்................*

அகம்: 272:13-15

என்ற நிகழ்ச்சி அகநானூற்றில் கூறப்பட்டிருக்கிறது. தலைவன் தலைவியைத் தொட்ட உறவைக் காட்ட முருகவேள் இங்கு சமயக்குறியீடாக வந்துள்ளது.

*முருக னன்ன சீற்றத்துக் கடுந்திற*
*லெந்தையு மில்ல னாக*

அகம்: 158:16-17

தலைவியினுடைய தந்தையின் சினத்திற்கு முருகக்கடவுளின் சினம் குறியீடாக்கப்பட்டுள்ளது.

*மிகிழ்நன் மார்பே வெய்யை யானீ*
*அழியல் வாழி தோழி நன்னன்*
*நறுமா கொன்று நாட்டிற் போக்கிய*
*ஒன்றுமொழிக் கோசர் போல*
*வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமாற் சிறிதே*

குறுந்: 73

தோழி பகற்குறி வந்த தலைவனை இரவுக்குறி வரக்கூறி பிறகு இரவுக்குறியும் மறுத்தாள். அவ்வாறு குறி மறுத்தால் ஒழிய தலைவியை மணம் புரிய மாட்டான் என்றே அவள் இவ்வாறு குறி மறுத்தாள். தோழியின் இச்செயலானது நன்னனது மாமரத்தை அழித்து நாட்டிற் போட்டற்கு கோசர் செய்த சூழ்ச்சிக்கு குறியீடாகியது.

காதலுக்குத் தடை எழும் சூழலில் பெண்கொலை புரிந்த நன்னன் சிறந்த வரலாற்றுக் குறியீடாக இடம் பெற்றிருக்கிறது.

## 4.8 வினைக் குறியீடு

பழந்தமிழர் வினைப்பயன் மீது நம்பிக்கைக் கொண்டிருந்தனர். நல்வினை இன்பம் தருவதாகவும், தீவினை துன்பத்தை அளிப்பதாகவும். நம்பினர். இப்பிறப்பில் நன்மை செய்வதால் சொர்க்கம் செல்வதாகவும் தீவினையின் பயனாய் கொடிய நரகத்திற்கும் தள்ளப்படுவர் என்றும்

நம்பிக்கை இருந்திருக்கின்றது. இன்றையச் சூழலிலும் துன்பத்தை அனுபவிக்கும் போது நரக வேதனையாக இருக்கிறது என்று கூறுவதைக் காணமுடிகிறது.

**நல்வினை, தீ வினை**

முற்பிறவிச் செயல்களின் பயன் இப்பிறப்பில் தொடர்வதாக ஒரு நம்பிக்கை இருந்திருக்கின்றது. முன் நல்வினை செய்திருந்தால் இன்பமும் தீவினையின் பயனாகத் துன்பமும் வந்தெய்தும் என்ற நம்பிக்கையைச் சங்கப் பாடல்களில் காணமுடிகின்றது.

*பின்னுவிடு கதுப்பின் மின்னிழை மகளிர்*
*இளையரு மடவரும் உளரே*
*அலையாத் தாயரொடு நற்பா லோரே*

குறுந்: 246:6-8

என்ற பாடலில் தலைவனின் வருகையை அன்னை அறிந்து கொண்டாள் என்பதை உணர்ந்த தலைவி தம் போன்று பன்னீராட்டை அகவையுடையோர் எல்லாம் அவரவர் தாயாரால் அலைத்திலர் அவர்கள் எல்லாம் நல்வினை செய்தவரோ என்று தோழியிடம் புலம்புகிறாள்.

*....................புலிவழங்கு அத்தஞ்*
*சென்ற காதலர் வழிவழிப் பட்ட*
*நெஞ்சே நல்வினைப் பாற்றே ஈண்டொழிந்து*
*ஆனாக் கௌவை மலைந்த*
*யானே தோழி நோய்ப்பா லேனே*

நற்: 107:6-10

என்ற பாடலில் பொருள் வயிற் பிரிந்த தலைவனின் பின் சென்ற நெஞ்சம் நல்வினையின் பயனை எய்தியது. இங்கு தங்கிய யான் ஊரார் தூற்றும் பழிச்சொல்லால் நோயுடையேன் ஆனேன் என்கிறாள் தலைவி.

*யாஞ்செய் தொல்வினைக்கு எவன்பேது உற்றனை*
*வருந்தல் வாழி தோழி யாஞ்சென்று*
*உரைத்தனம் வருகம் எழுமதி புணர்திரைக்*
*கடல்விளை அமுதம் பெயற்கேற் றாஅங்கு*
*உருகி உகுதல் அஞ்சுவல் உதுக்காண்*
*தம்மோன் கொடுமை நம்வயின் ஏற்றி*
*கண்ணீர் அருவியாக*
*அழுமே தோழிஅவர் பழமுதிர் குன்றே*

நற்: 88:1-9

என்ற நற்றிணைப் பாடலில் தோழி, “தலைவன் இன்னும் வரையாமல் இருப்பதற்கு நம்முடைய முன்னை வினையே காரணமாகும் என்று கூறுகிறாள். அதனால்தான் நாம் இன்று துன்பத்தை அனுபவிப்பவர்களாக இருக்கிறோம்” என்று கூறுகிறாள்.

## சொர்க்க நரகத் தொன்மங்கள்

நன்மை புரிந்தவர் நலங்களனைத்தும் நிறைந்த இனிய துறக்க (சொர்க்கம்) உலகமெய்துவர், தீமை புரிந்தவர் நிரையம் என்ற நரகத்தை எய்துவர் என்ற நம்பிக்கைகளால் அவ்வுலகங்கள் எப்படி இருக்கும் என்ற கற்பனைகள் மக்களுள்ளத்தில் தொன்மக் காட்சிகளாகப் படிந்துள்ளன. சொர்க்கம், நரகம் என்பது துறக்கம், நிரையம் என்னும் சொற்களால் உணர்த்தப்படலாயின. அறத்தொடு நின்றபின் வரைவு முயற்சியை ஏற்றுக் கொண்ட செவிலியை

*அரும்பெறல் அமிழ்தம் ஆர்பதம் ஆகப்*
*பெரும்பெயர் உலகம் பெறீஇயரோ அன்னை*

குறுந்: 83:1-2

என வாழ்த்தும் மொழியில் சொர்க்கத் தொன்மம் பயின்று வருகிறது.

*பெண்கொலை புரிந்த நன்னன் போல*
*வரையா நிரையத்துச் செலீஇயரோ அன்னை*

குறுந்: 292:5-6

என்று இரவுக் குறியில் காதல் செய்யத் தடையாகக் காவல் செய்யும் செவிலியைத் தோழி பழிக்கிறாள்.

*நோயுங் கைம்மிகப் பெரிதே மெய்யுந்*
*தீயுமிழ் தெறலின் வெய்தாகின்றே*
*ஒய்யெனச் சிறிதாங்கு உயரிய பையென*
*முன்றிற் கொளினே ந்துவள் பெரிதென*
*நிரையநெஞ்சத் தன்னைக் குய்த்தாண்டு*
*உரையினி வாழி*

நற்: 236:1-6

என்ற நற்றிணைப் பாடலடியில் அன்னையின் நெஞ்சம் கொடிய நரகம் போன்றது என்று தலைவி அன்னையைப் பழிக்கிறாள். கொடுமைக்கு நரகம் குறியீடாயிற்று.

## 4.9 நிமித்தக் குறியீடு

நிமித்தம் என்பது வாழ்வில் பின் நிகழ இருக்கும் நன்மை தீமைகளைச் சில குறியீடுகளின் வாயிலாக முன்னுணர்த்துவதாகும். பறவைகளில் சிறப்பாகக் காக்கை விருந்து வருவதுரைக்கும் ஆற்றல் கொண்டது எனப் பண்டைத் தமிழர் நம்பினர்.

*மறுகில் தூவிச் சிறுகருங் காக்கை*
*அன்புடை மரபின் கிளையோடு ஆரப்*
*பச்சூன் பெய்த பைந்நிண வல்சி*
*பொலம் புனை கலத்தில் தருகுவென் மாதோ*

ஐங்: 391:1-4

என்ற இப்பாடலில் உடன்போக்கு மேற்கொண்ட மகள் திரும்பிவருமாறு கரைந்தால் ஊன் உணவைப் பொன்கலத்தில் தருவேன் என்று தாய் காக்கையை வேண்டுவதைக் காட்டுகிறது.

*திண்டேர் நள்ளி கானக தண்டர்*
*பல்லாப் பயந்த நெய்யிற் றொண்டி*
*முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோ*
*றெழுகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி*
*பெருந்தோ ணெகிழ்த்த செல்லற்கு*
*விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே*

குறுந்: 210

தலைவிக்கு விருந்து வரக்கரைந்த காக்கைக்குக் கைம்மாறாகத் தொண்டி நகரத்தின் வயல்களில் விளைந்த வெண்ணெல்லாற் சமைத்த இனிய உணவில் நள்ளியென்னும் வள்ளலின் நாட்டிலுள்ள ஆயர்களின் பல ஆக்கள் தந்த அனைத்து நெய்யையும் சேர்த்து ஏழு கலங்களில் அளித்தாலும் அது செய்த உதவிக்கு அது சிறிய பலியே என்கிறார் நச்செள்ளையார் படைத்த தோழி. இக்காக்கை நிமித்தக் குறியீட்டைச் சிறக்கப் பயன்படுத்தியதால் நச்செள்ளையர் காக்கைப் பாடினி ஆனார்.

காக்கை கரைவது நல்ல நிமித்தமாக நம்பப்பட்டது போலவே கூகையின் குழறல் தீ நிமித்தமாகக் கருதப்பட்டது. தலைவன் வரும் இரவு

நேரத்தில் கூவாதிருந்தால் அதற்கு கைமாறாக ஆந்தைக்கு உணவு தருவதாகக் கூறுவதும் உண்டு. இதனைப் பெருந்தேவனார் பாடிய

*எம்மூர் வாயில் ஒண்டுறைத் தடைஇய*
*கடவுள் முதுமரத்து உடனுறை பழகிய*
*தேயா வளைவாய்த் தெண்கண் கூருகிர்*
*வாய்ப்பறை அசாஅம் வலிமுந்து கூகை*
*மையூன் தெரிந்த நெய்வெண் புழுக்கள்*
*எலிவான் சூட்டொடு மலியப் பேணுதும்*
*எஞ்சாக் கொள்கைஎங் காதலர் வரல்நசைஇத்*
*துஞ்சாது அலமரு பொழுதின்*
*அஞ்சு வரக் கடுக்குரல் பயிற்றா தீமே*

நற்: 83

என்ற நற்றிணைப் பாடலின் வழி அறிய முடிகின்றது. கூகையைக் கிராமப் புறங்களில் சாவுக்குருவி என்று கூறுவதுண்டு. கூகை நிமித்தம் கூறும் பல பாடல்கள் அக இலக்கியத்தில் காணப்படுகின்றன.

## பல்லி

பல்லியினது ஒலி நன்னிமித்தம், தீநிமித்தம் ஆகிய இரண்டையும் கூறும் குறியீடாக அகப்பாடல்களில் மிகுதியும் ஆளப்பட்டுள்ளது. பொருள்வயிற் பிரிதலாலே வருந்திய தலைமகளைத் தோழி பல்லி ஒலித்தலால் காதலர் இன்றே வந்து நின்னை முயங்குவர் என்று கூறி வற்புறுத்துகிறாள்.

*அரும்பொருட்கு அகன்ற காதலர் முயக்கெதிர்ந்து*
*திருந்திழைப் பணைத்தோள் பெறுநர் போலும்*
*நீங்குக மாதோநின் அவலம் ஓங்குமிசை*
*உயர்புகழ் நல்லில் ஒண்சுவர்ப் பொருந்தி*

*நயவரு குரல பல்லி*
*நள்ளென் யாமத்து உள்ளதொறும் படுமே*

நற்: 333:7-12

இங்கு பல்லியின் ஒலி நன்னிமித்தக் குறியீடாகக் காட்டப்பட்டுள்ளது. இதே கருத்துடைய நன்னிமித்தக் குறியீடாக

இடூஉ ஊங்கண் இனிய படூஉம்
நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கின் தேற்றும்
மனைமர நொச்சி மீமிசை மாச்சினை
வினைமாண் இருங்குயில் பயிற்றலும் பயிற்றும்

நற்: 246:1-4

என்ற நற்றிணைப் பாடலில் வருவதைக் காணலாம். இது தலைவியின் நம்பிக்கைக்குக் குறியீடாகும்.

*முன்னியது முடித்தனம் ஆயின் நன்னுதல்*
*வருவம் என்னும் பருவரல் தீரப்*
*படுங்கொல் வாழி நெடுஞ்சுவர்ப் பல்லி*

நற்: 169:1-3

என்ற நற்றிணைப் பாடலடிகள் வினைமுடித்து மீளுந்தலைவன் நெஞ்சை நெருங்கி யாம் பிரிந்ததாலுண்டாகிய தலைவியினது துன்பந் தீரும் வண்ணம் இப்பொழுது நாம் வருவதனை நம்முடைய மாளிகையின் சுவரின் கண்ணுற்ற பல்லி இயம்பி அறிவுறுத்துமோ எனக் கருதி நிற்பதாகும். இது தலைவி இல்லிருக்கும் மாண்புக்குக் குறியீடாகியது எனலாம்.

தினை மேய வந்த பன்றி பல்லி நிமித்தம் கேட்டு பொறியிருப்பதறிந்து பின் வாங்கியதைக் காட்டுகிறது.

*எய்முள் அன்ன பரூஉ மயிர் எருத்தின்*
*செய்ய்ம்ம் மேவல் சிறுகட் பன்றி*
*ஓங்குமலை வியன்புனம் படீஇயர் வீங்குபொறி*
*நூழை நுழையும் பொழுதின் தாழாது*
*பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென*
*மெல்ல மெல்லப் பிறக்கே பெயர்ந்துதன்*
*கல்லளைப் பள்ளி வதியும் நாடன்*

நற்: 98:1-7

இப்பாடலில் பல்லியின் நிமித்தம் தீநிமித்தமாகச் சுட்டப்படுகிறது.

## 4.10 சூழல் குறியீடு

சிந்தனை என்பது அனைவருக்கும் பொதுவான ஒன்றாகும். எத்துறையினராயினும் புதியதைக் கண்டு அதைப் பொதுவாக்கிச் சமுதாயத்திற்களிப்பது தனியொருவரின் முயற்சியாகும். கற்பனை ஆற்றலும், படைப்புத் திறமையும் உடைய புலவர்கள் குறியீடுகளைப் படைத்தளிப்பதில் வல்லவராய் இருந்திருக்கின்றனர். இலக்கியத்தில் இடம் பெறும் குறியீடுகள் பொது மரபைச் சாராது தனி ஒருவரால் படைக்கப்படும் போது சூழலாலும் சொந்தமாகவும் குறியீடுகளைப் படைத்தளித்திருக்கின்றனர்.

ஒரு சொல்லோ, தொடரோ ஓர் அனுபவமோ பொருளோ அது அமைந்திருக்கும் இடத்தினைப் பொறுத்து பிறிதொன்றைச் சுட்டி நிற்கும் போது இவ்வகையான குறியீடுகள் பிறக்கின்றன. ஒவ்வொரு சொல்லும் சூழலில் வெவ்வேறு வகையில் பொருள் தரும் என்ற மொழியியல் அறிஞர்களின் கருத்தை எடுத்துக்காட்டுகிறார் அப்துல் ரகுமான் (2006:102). கவிதையில் சில பொருள்கள் அல்லது சொற்கள் இடம்பெறும் சூழலுக்கேற்ப பொருள் தந்து குறியீடுகள் ஆகிவிடுகின்றன.

## தேனும் பாலும்

தேன் உயர்ந்தோர் நட்புக்கு ஒப்புமை காட்டும் சிறப்புடையது. தேன் கலந்த பால் செல்வ வளமிக்க வாழ்க்கையின் குறியீடாகச் சங்க அகப்பாட்டு மரபில் அமைந்துள்ளது.

*பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்*
*விரிகதிர்ப் பொற்கலத்து ஒருகை ஏந்திப்*
*புடைப்பின் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்*
*உண்ணென்று ஓக்குபு புடைப்பத் தெண்ணீர்*
***முத்தரிப் பொன் சிலம்பு ஒலிப்பத் தத்துற்று***
*அரிநரைக் கூந்தல் செம்முது செவிலியர்*
*பரிமெலிந் தொழியப் பந்தர்ஓடி*
*ஏவல் மறுக்குஞ் சிறுவிளை யாட்டி*

நற்: 110

அத்தகைய செல்வ வளமிக்க மனையில் வளர்ந்த தலைவி வறிய கணவன் மனையில் பொழுது மறுத்துண்ணும் சிறிய மனத்திண்மை வன்மை பெற்றதை, அறிவும் ஒழுக்கமும் உணர்ந்ததைத் தாய் வியக்கிறாள். இப்பாடலில் தலைவனின் காதல் தேன் கலந்த பாலைவிட இனிப்பதைக் குறிப்பாகப் புலப்படுத்தினார் புலவர்.

## கபிலரின் ஐங்குறுநூற்றுத் தலைவி

*அன்னாய் வாழி வேண்டன்னை நம்படப்பைத்*
*தேன்மயங்கு பாலினும் இனிய அவர்நாட்டு*
*உவலைக் கூவற் கீழ*
*மானுண்டு எஞ்சிய கலுழி நீரே*

ஐங்: 203

என்றுரைப்பதிலும் உயர்நிலைச் செல்வக் குறியீடாகத் தேனும் பாலும் உள்ளன. ஆயினும் அவர் நாட்டில் இலைச் சருகுகள் அழுகிய சின்னீரையுடைய கூவலின் ஊற்றுநீரை மான்கள் உண்டு எஞ்சிய சிறிதளவே யாயினும் தேன்மயங்கு பாலினும் இனியது என்று கூறுகிறாள் தலைவி. இதனால் தலைவன் அன்பு நெஞ்சில் ஊறும் காதலின் முன் இத்தேனும் பாலும் வளமைக்குக் தரம் தாழ்ந்து நிற்கின்றன என்பது சுட்டப்பட்டது. செல்வ வளம் குறிக்கப்பட்ட தேன் வேறொரு சூழலில் உயர் காதலின் குறியீடாக வந்துள்ளது.

*நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று*
*நீரினும் ஆரள வின்றே சாரல்*
*கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு*
*பெருந்தேன் இழைக்கும் நாடானொடு நட்பே*

குறுந்: 3

என்னும் தேவகுலத்தாரின் குறுந்தொகைப் பாடலில் தலைவன் தலைவியரின் காதலுக்கு தேனைக் குறியீடாகக் காட்டுகிறது. ஓரிடத்தில் செல்வத்தின் குறியீடாகக் காட்டப்பட்ட தேன் கவிதையின் சூழலால் இங்கு காதலைச் சுட்டும் குறியீடாகக வந்துள்ளமை பெறப்படும்.

**யானை**

பெருமிதத் தோற்றமும் கம்பீர நடையும் கொண்ட யானை சங்க இலக்கியத்தில் மிகுதியாகப் பாடப்பட்டுள்ளது. யானை பல பாடல்களில் தலைவனைச் சுட்டும் குறியீடாக ஆளப்பட்டுள்ளது. ஒரு சில இடங்களில் யானை தலைவியைச் சுட்டும் குறியீடாக வந்துள்ளது.

களவின்பத்தை விரும்பி வரைதலில் நாட்டமின்றி இருக்கும் தலைவனை வரைவு முடுக்குகிறாள் தோழி

*ஏனலஞ் சிறுதினை காக்கும் சேணோன்*
*ஞெகிழியிற் பெயர்ந்த நெடுநல் யானை*
*மீன்படு சுடரொளி வெரூஉம்*

குறுந்: 357:5-8

ஞெகிழிக்கு அஞ்சிய யானை மீன்படு சுடரை வெறூஉம் என்றது களவின் கண்ணே நந்தமர்க்கு அஞ்சிய தலைவன் அவர்பால் வரைவுடன் சேறற்கும் அஞ்சி வரைவு நீட்டிப்பான் என்பதாகும். இங்கு யானை தலைவனைச் சுட்டும் குறியீடாக வந்துள்ளது. இதே சூழலில் யானை வேறொரு பாடலில் தலைவியைச் சுட்டும் குறியீடாக வந்துள்ளது.

*இடம்படு பறியா வலம்படு வேட்டத்து*
*வாள்வரி நடுங்கப் பகல்வந் தாளி*
*உயர்நுதல் யானைப் புகர்முகத் தொற்றி*
*வெண்கோடு புய்க்குந் தண்கமழ் சோலைப்*
*பெருவரை யடுக்கத் தொருவலே ஏந்தி*
*தனியன் வருதல் அவனும் அஞ்சான்*

அகம்: 252:1-6

என்ற இவ்வகநானூற்றுப் பாடலில் யானைக்கு ஒரு பக்கத்தே புலியும் மற்றொரு பக்கத்தே ஆளியும் இருந்து துன்புறுத்தும் காட்சியில் யானை தலைவியைக் குறிக்கும் குறியீடாகிறது. தலைவிக்குத் தலைவன் வரும் வழியின் கொடுமையைக் கண்டு அஞ்சுவது ஒரு புறமும் அவன் வாராமையால் படும் துன்பம் மற்றொரு புறமும் இருந்து வருத்துவது

யானைபடும் துன்பத்தை ஒத்துள்ளதால் இங்கு யானை தலைவியைச் சுட்டும் குறியீடாகிறது.

**நெல்-கரும்பு-வாழை**

*வாழி ஆதன் வாழி அவினி*
*பகைவர் புல்வர் பார்ப்பார் ஓதுக*
*என வேட்டோளே யாயே - யாமே*
*பூத்த கரும்பின் காய்த்த நெல்லின்*
*கழனி ஊரன் மார்பு*
*பழனம் ஆகற்க என வேட்டேமே*

ஐங்: 4

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடலில் மருத நிலத்துக் கருப்பொருளாகிய பூத்த கரும்பும் காய்த்த நெல்லும் குறிப்பிடப்படுகின்றன. இங்கு பூத்த கரும்பு என்பது காம இன்பம் மட்டும் வழங்கும் பரத்தையையும் காய்த்த நெல் என்பது குடிக்கு விளக்காகும் மக்களை ஈன்று தரும் கற்புடைய தலைவியையும் குறிக்கின்றன. இதே நெல், நற்றிணைப் பாடலில் வேறொரு பொருளைச் குறிக்கும் குறியீடாகிறது.

*வாழைமென் தோடு வார்புறுபு ஊக்கும்*
*நெல்விளை கழனி நேர்கண் செறுவின்*
*அரிவனர் இட்ட சூட்டயல் பெரிய*
*இருஞ்சுவல் வாளை பிறழும் ஊர*

நற்: 400:1-4

எனவரும் அடிகளில் வாழை தலைவியையும் அறுத்துப்போட்ட நெற்சூடு பரத்தையையும் அதில் புரளும் வாளை பரத்தைமையுடைய தலைவனையும் சுட்டிய குறியீடுகளாயின. நெல்லின் குறியீட்டுப் பொருள் இக்கவிதைச் சூழலில் மாறிவந்துள்ளது.

**நண்டு**

*மாரி ஆம்ப லன்ன கொக்கின்*
*பார்வல் அஞ்சிய பருவரல் ஈர்ஞெண்டு*
*கண்டல் வேரளைச் செலிஇயர் அண்டர்*
*கயிறரி யெருத்திற் கதழுந் துறைவன்*
*வாரா தமையினும் அமைக*
*சிறியவும் உளவீண்டு விலைஞர்கை வளையே*

குறுந்: 117

என்ற குறுந்தொகைப் பாடலடிகளில் வரும் நண்டு கொக்கின் பார்வைக்கு அஞ்சி வளைபுகும் என்று நண்டின் செயலைக் குறிப்பிடுகிறது. இது களவு மேற்கொண்ட தலைவன் வரைவு மேற்கொள்ளாததால் அதனை அறிந்து அயலோர் அலர் தூற்றுவதற்கு முன் தலைவனின் இல்லத்தே புக விழையும் தலைவியைச் சுட்டிய குறியீடாக நண்டு குறிப்பிடப்படுகிறது. நண்டு தலைவனைச் சுட்டும் குறியீடாகவும் வந்துள்ளது.

*வேப்புநனை யன்ன நெடுங்க ணீர்ஞெண்டு*
*இரைதேர் வெண்குரு கஞ்சி யயலது*
*ஒலித்த பகன்றை யிருஞ்சேற் றள்ளல்*
*திதலையின் வரிப்ப வோடி விரைந்துதன்*
*ஈர்மலி மண்ணளை செறியும் ஊர*

அகம்: 176:8-12

என்ற அகநானூற்றுப் பாடல் நண்டானது நாரைக்கு அஞ்சி சேற்றில் வரிகள் ஏற்பட ஓடி மண் வளையில் மறையும் என்று கூறுகிறது. இது பரத்தையர் சேரியில் அவர்களின் நலத்தினை நுகர்ந்திருந்த தலைவன் பழி ஏற்படுவதை அஞ்சி தன் வீட்டிற்கு விரைந்து செல்லுதலைச் சுட்டியது. எனவே நண்டு

என்ற ஒரே விலங்கு சூழலுக்கேற்ப இருவேறு மாந்தர்க்குக் குறியீடாகி வந்துள்ளது.

**பழையனின் வேல்**

உடன்போக்கின் போது தோழி தலைவியைத் தலைவன்பாற் சேர்த்துவிட்டு இவளை முதுமையெய்தினும் கைவிடாது பாதுகாப்பாயாக என்று கூறுகிறாள். அப்போது

*அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்*
*பொன்னேர் மேனி மணியிற் றாழ்ந்த*
*நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்*
*நீத்த லோம்புமதி பூக்கே ழூர*
*இன்கடுங் கள்ளி னிழையணி நெடுந்தேர்க்*
*கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்*
*வெண்கோட் டியானைப் பேஎர் கிழவோன்*
*பழையன் வேல்வாயத் தன்னநின்*
*பிழையா நன்மொழி தேறிய இவட்கே*

நற்: 10

என்று சூள்பொய்யாது தலைவியைத் தன் துணை ஆக்கிக் கொண்ட தலைவனின் வாய்மைக்குப் பழையன் வேலை குறியீடாக்கிக் காட்டுகிறாள்.

குறிக்கோள் தப்பாமைக்குக் குறி தப்பாத பழையனின் வேல் குறியீடானது.

பரணரின் அகநானூற்றுப் பாடலில்

*..........வெண்வேல்*
*இழையணி யானைச் சோழன் மறவன்*

*கழையளந் தறியாக் காவிரிப் படப்பைப்*
*புனன்மலி புதவிற் போஓர் கிழவோன*
*பழையன் ஒக்கிய வெல்போற்*
*பிழையல கண்ணவள் நோக்கியோர் திறத்தே*

அகம்: 326:8-13

என்ற இப்பாடலில் வரும் பழையனின் வேல், ஒருவனைக் குறி வைத்தால் வீழ்த்தத் தவறாத பரத்தையின் விழியைக் குறித்த குறியீடாக ஆளப்படுகிறது. கவிதையில் இடம் பெற்ற சூழலால் இப்பொருண்மை மாறி வந்துள்ளது.

## 4.11 சொந்தக் குறியீடு

சங்க இலக்கியப் புலவர்களில் சிலர் தமக்கே உரிய குறியீடுகளைத் தங்கள் பாக்களில் ஆள்கின்றனர். இவ்வாறு ஒரு புலவரால் ஆளப்படும் குறியீடு சொந்தக் குறியீடு எனப்படும்.

### கபிலர்

சங்க இலக்கியத்தில் மிகுதியான பாடல்களைப் பாடிய புலவர் கபிலர் ஆவார். குறிஞ்சித் திணையில் வல்லவரென்பதற்கு அவரது பாக்கள் சான்று கூறுகின்றன.

*வேரல் வேலி வேர்கோட் பலவின்*
*சாரல் நாட செவ்வியை ஆகுமதி*
*யார.ஃ தறிந்திசி னோரே சாரல்*
*சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்*
*உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே*

குறுந்: 18

என்ற குறுந்தொகைப் பாடலில் பலாவின் பெரும்பழத்தைத் தாங்க முடியாது தொங்கும் சிறு கிளையாகத் தலைவியின் உயிரைப் பாடி காதலின் குறியீடான கனியைப் புதிய கோணத்தில் ஆண்டுள்ளது அவரது தனித்தன்மையாகும்.

*கோழிலை வாழைக் கோண்மிகு பெருங்குழை*
*யூழுறு தீங்கனி யுண்ணுநர்த் தடுத்த*
*சாரற் பலவின் சுளையொ டூழ்படு*
*பாறை நெடுஞ்சுனை விளைந்த தேற*
*லறியா துண்ட கடுவ னயலது*
*கறிவளர் சாந்த மேறல்செல் லாது*
*நறுவீ யடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்குந்*

அகம்: 2:1-7

என்ற அகநானூற்றுப்பாடலில் வாழை, பலா ஆகிய கனிகள் விளைந்து வெடித்துச் சிந்திய தேறலை அறியாதுண்டு கடுவன் நறுவீ அடுக்கத்து மகிழ்ந்து கண் உறங்கும் காட்சியால் தலைவனது களவின்ப மயக்கத்தைச் சுட்டுகிறார்.

**பரணர்**

பரணர் வரலாற்றுக் குறீயிடுகளை மிகுதியாகப் பாடியுள்ளார். மருதத்திணையில் தலைவனின் பிரிவுக் கொடுமையில் வாடும் தலைவியின் வருத்தம் உரைத்தற்கு ஆட்டனத்தியைப் பிரிந்த ஆதிமந்தியின் துயரத்தை வரலாற்றுக் குறியீடாகச் சிறப்பாக ஆண்டவர் ஆவார்.

*ஆட்ட னத்தியைக் காணீ ரோவென*
*நாட்டின் நாட்டின் ஊரின் ஊரிற்*
*கடல்கொண் டன்றெனப் புனலொளித் தன்றெனக்*

*கலுழ்ந்த கண்ணன் காதலற் கெடுத்த*
*ஆதிமந்தி போல*
*ஏதஞ் சொல்லிப் பேதுபெரி துறலே*

அகம்: 236:16-21

**காக்கைப்பாடினியார்**

காக்கை கரைந்தால் விருந்துவரும் என்பது வழக்கில் உள்ள நம்பிக்கை. காக்கை சகுனத்தை தலைவனிடம் பேசும் தலைவி கூற்றில் வைத்துச் சிறக்கப் பாடியதால் இப்பெயர் பெற்றார்.

*திண்டேர் நள்ளி கானத் தண்டர்*
*பல்லாப் பயந்த நெய்யிற் றொண்டி*
*முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோ*
*றெழுகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி*
*பெருந்தோ ணெகிழ்த்த செல்லற்கு*
*விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே*

குறுந்: 210

**செம்புலப் பெயல்நீரார்**

பாலது ஆணையால் உள்ளப் புணர்ச்சியுற்ற தலைவன் தலைவியை வற்புறுத்திப் பிரிந்தபோது, முன் எவ்வகையிலும் அறிமுகமற்ற இருவரும் காதலில் இணைந்ததை

*யாயும் ஞாயும் யாரா கியரோ*
*எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்*
*யானும் நீயும் எவ்வழி யறிதும்*
*செம்புலப் பெயனீர் போல*
*அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே*

குறுந்: 40

என்ற குறுந்தொகைப் பாடலில் தலைவியை மண்ணாகவும் தலைவனை மழையாகவும் குறியீடாக்கியுள்ளனர். மழை மண்ணோடு கலந்த பாங்கை இப்புலவர் ஓர் அழகிய தொடரில் அமைத்துப் பாடியுள்ளார்.

## ஓரேருழவனார்

தலைவியைக் காணுதற்கு விரையும் தன் நெஞ்சுக்கு, ஒரு தலைவன் ஈரம்பட்ட செவ்வியம்புனத்து ஓரேருழவனைக் குறியீடாக்கினார்.

*ஆடமை புரையும் வனப்பிற் பணைக்தோள்*
*பேரமர்க் கண்ணி யிருந்த ஊரே*
*நெடுஞ்சேண் ஆரிடை யதுவே நெஞ்சே*
*ஈரம்பட்ட செவ்விப் பைம் புனத்து*
*ஓரேர் உழவன் போலப்*
*பெருவிதுப் புற்றன்றால் நோகா யானே*

குறுந்: 131

ஏர் என்ற இந்த செயற்கைப் பொருள் பாலுறவைக் குறிக்கும் ஒரு குறியீட்டுக் கருவியாக இவர் பாடலில் இடம் பெற்றுள்ளது.

## குப்பைக் கோழியார்

காப்பின் மிகுதியால் தலைவி படும் துன்பத்தைக் குப்பைக்கோழிகள் வாயிலாகக் காட்டுகிறார் புலவர்.

*கண்தர வந்த காம ஒள்ளெரி*
*என்புற நலியினும் அவரொடு பேணிச்*
*சென்றுநாம் முயங்கற் கருங்காட் சியமே*
*வந்தஞர் களைதலை அவராற் றலரே*
*உய்த்தனர் விடாஅர் பிரித்திடை களையார்*
*குப்பைக் கோழித் தனிப்போர் போல*

*விளிவாங்கு விளியி னல்லது*
*களைவோர் இலையா முற்ற நோயே*

குறுந்: 305

உய்ப்பாரும் விலக்குவாரும் காண்பாரும் இன்றிக் குப்பை மேட்டில் கோழிகளிரண்டு போர் செய்தாற்போலத் தன் நோய் தானாகத் தணிந்தால்தான் உண்டு களைபவர் இல்லை என அறத்தோடு நிற்கக் குறிப்பாகச் சுட்டுகிறாள் இவரது தலைவி.

**கல்பொரு சிறுநுரையார்**

தாங்க மாட்டாத காமத்தால் தன் உயிர் நலிவதற்குக் கல்பொரு சிறுநுரை மெல்லமெல்ல இல்லாதாகலைக் குறியீடாக்கினார்.

*காமந் தாங்குமதி யென்போர் தாம.'.*
*தறியலர் கொல்லோ அனைமது கையர்கொல்*
*யாமெங் காதலர்க் காணே மாயிற்*
*செறிதுனி பெருகிய நெஞ்சமொடு பெருநீர்க்*
*கல்பொரு சிறுநுரை போல*
*மெல்ல மெல்ல இல்லா துகுமே*

குறுந்: 290:1-6

வெள்ளம் கட்டுக்கடங்காத காமம் சுட்டும் குறியீடாகும். தலைவியின் காமப் பெரு வெள்ளம், பெண்மையின் உயிரினும் சிறந்த நாணம் முதலிய பெருங்குணங்களால் அணையிடும் போது தன் உயிர் மெல்ல மெல்ல போகும் நிலையைச் சுட்டக் கல்பொரு சிறு நுரையைப் புலவர் குறிப்பிட்டார்.

## 4.12 முடிவுரை

அகப்பாடல்களில் குறியீடுகள் என்ற நான்காவது இயலில் கண்டறியப்பட்ட ஆய்வு முடிவுகள் இங்கு தொகுக்கப்படுகிறது. புணர்ச்சி,

அலர், வரைவு, பிரிவு, அகமாந்தரின் பண்புநிலை, வினைப்பயன் ஆகியவற்றிற்கான குறியீடுகள் அகப்பாடல்களின்வழி கண்டறியப்பட்டு விளக்கப்பட்டுள்ளன.

உண்ணுதல், அருவியாடல், ஊஞ்சலாடுதல், உழுதல் போன்ற செயல்கள் புணர்ச்சியைச் சுட்டும் குறியீடுகள் என்பது விளக்கப்பட்டுள்ளது. இதில் விலங்குகள் கனி, ஊன், தினை, பூ போன்றவற்றை உண்ணுதல் காட்டப்படுவதன் வாயிலாக தலைவன் தலைவியின் தன்மைகள் விலங்குகளின் இயல்புக்கும் அதன் தன்மைக்கும் எவ்வாறு பொருந்தி நிற்கிறது என்பது விளக்கப்படுகிறது.

பூவின் மணம், கனியின் மணம், மீனின் நாற்றம் ஆகியவை அலரைக் காட்டும் குறியீடுகள். புலவு நாற்றத்தை மலர்மணம் போக்குதல் அலர்நீக்கி வரைந்து கொள்ளுதலைக் காட்டுகிறது. திருமணச் சடங்கின் போது பயன்படுத்தப்படும் பூக்கள், நெல், அருகங்கிழங்கு ஆகியவை கருவளம், காதல் உணர்வு, இனவிருத்தி ஆகியவற்றைக் குறிப்பிடும் குறியீடு என்பது விளக்கப்பட்டுள்ளது.

மணமாகாத மகளிர் பூவினை வெளிப்படையாக அணிய அஞ்சியதை சங்க இலக்கிய பாடல்களின் வழி காண முடிகிறது. இச்சான்றுகளின் வாயிலாக மணமான பிறகே மகளிர் மலரணிந்திருக்கக் கூடும் என்பது பெறப்பட்டுள்ளது. எனவே மலரணிந்த மகளிர் மணமானவர் என்பதைக்காட்டும் குறியீடாகும் என்பது சுட்டப்பட்டுள்ளது.

அகமாந்தரின் ஒவ்வொரு சூழலிலும் அவர்களுடைய பண்பையும் நிலையையும் விளக்க மலை, அருவி, இருள், ஒளி, தொன்மம், வரலாறு,

சமயம் போன்றன குறியீடுகளாயிருப்பது விளக்கப்பட்டுள்ளது. பெண்களின் காதல் வாழ்க்கை நிலைகளைப் பூக்களின் பருவ நிலைகளைக் கொண்டு மிக நுண்மையாகக் காட்டியுள்ளனர்.

வாழ்க்கையில் நன்மையும் தீமையும் அவரவரின் நல்வினை தீவினை கொண்டு நிகழ்வது என்பது காட்டப்பட்டுள்ளது. ஒரே குறியீட்டுப் பொருள் சூழலுக்கு ஏற்றவாறு வெவ்வேறு பொருள் தரும் தன்மை சூழல் குறியீடு என்ற நிலையில் விளக்கப்பட்டுள்ளது. தனி ஒருவரால் மட்டும் ஆளப்பட்ட குறியீடு சொந்தக் குறியீடு என்று விளக்கப்படுகிறது.

# முதன்மைத் தரவு நூல்கள்


1. அகநானூறு (1954) களிற்றியானை நிரை, வேங்கடசாமிநாட்டார் ந.மு., கழக வெளியீடு, சென்னை.
2. அகநானூறு (1970) களிற்றியானை நிரை, சோமசுந்தரனார் பொ.வே., கழக வெளியீடு, சென்னை.
3. அகநானூறு (1949) மணிமிடைப்பவளம், வேங்கடசாமிநாட்டார் ந.மு., கழக வெளியீடு, சென்னை.
4. அகநானூறு (1969) நித்திலக்கோவை, வேங்கடசாமிநாட்டார் ந.மு., கழக வெளியீடு, சென்னை.
5. அகநானூறு (1970) மணிமிடைப்பவளம், நித்திலக்கோவை பொ.வே. சோமசுந்தரனார் உரை, கழக வெளியீடு, சென்னை.
6. ஐங்குறுநூறு (1949) சாமிநாத ஐயர் உ.வே. கழக வெளியீடு, சென்னை.
7. கலித்தொகை (1973) நச்சினார்க்கினியர் உரை, கழகவெளியீடு, சென்னை.
8. குறுந்தொகை (1972) சோமசுந்தரனார் பொ.வே., கழக வெளியீடு, சென்னை.
9. குறுந்தொகை (1955) சாமிநாத ஐயர் உ.வே. கழக வெளியீடு, சென்னை.
10. நற்றிணை (1962) நாராயணசாமி, பின்னத்தூர், கழகவெளியீடு, சென்னை.
11. நற்றிணை (2004) பாலசுப்பிரமணியன், கு.வெ., நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி) லிட்., சென்னை.

## துணைநின்ற நூல்கள்

12. அப்துல் ரகுமான் (2006) புதுக்கவிதையில் குறியீடு, அன்னம் வெளியீடு, நிர்மலா நகர், தஞ்சாவூர்.

13. அப்துல் ரகுமான் (1974) பால்வீதி, அன்னம் வெளியீடு, சிவகங்கை.

14. அழகப்பன் (1990) நன்னூல் விருத்தியுரை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சிதம்பரம்.

15. அறவாணன், க.ப. (1998) தொல்காப்பியக் களவியல் - ஒரு சமுதாயவியற் பார்வை, (தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள்), உலகத் தமிழாராய்ச்சி நிலையம், சென்னை.

16. ஆரார் (1982) சிம்பலிசம், அறிவரங்க வெளியீடு, திருப்பத்தூர்.

17. இளம்பரிதி, மொ. (2006) குறியியல் ஒரு சங்கப்பார்வை, காவ்யா பதிப்பகம், சென்னை.

18. இளம்பூரணர் (2001) தொல்காப்பியம் பொருளதிகாரம், கழக வெளியீடு, சென்னை.

19. இரவி, ந.ம.வீ. (1992) குறியியலும் அரங்கக்குறியியலும், கயல்பதிப்பகம், நெல்லியேந்தல் பட்டி, மதுரை.

20. இராதாசெல்லப்பன் (2006) கலைச்சொல்லியல், தாமரைப் பப்ளிகெசன்ஸ் (பி) லிட்., சென்னை.

21. கிருஷ்ணமூர்த்தி, கு.வி. (2007) தமிழரும் தாவரமும், பாரதிதாசன் பல்கலைக்கழக வெளியீடு, திருச்சிராப்பள்ளி.

22. குருசாமி, மா.ரா.போ. (1980) தமிழ் நூல்களில் குறிப்புப்பொருள், நரேந்திரசிவம் பதிப்பகம், கோவை.

23. குளோரியா சுந்தரமதி (1998) தொல்காப்பியத்தின் ஒளியில் தகுதிக்கோட்பாடு, (*தொல்காப்பிய இலக்கிய கோட்பாடுகள்*), உலகத் தமிழாராய்ச்சி நிலையம், சென்னை.

24. கைலாசபதி, க. (1979) சமூகமும் உளவியலும், நியூசெஞ்சுரி புக்கவுஸ் பி. லிட்., சென்னை.

25. கோவிந்தராச முதலியார், கா.ரா. (1992) அகப்பொருள் விளக்கம், கழகவெளியீடு, சென்னை.

26. சச்சிதானந்தன், வை. (1983) மேலை இக்கியச் சொல்லகராதி, மேக்மில்லன் இந்தியா லிட்., சென்னை.

27. மனோன்மணி சண்முகதாஸ் (2000) குறுந்தொகை ஒரு நுண்ணாய்வு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், வெள்ளி விழா வெளியீடு, சென்னை.

28. சம்பத், இரா. (1992) புதுக்கவிதையில் இலக்கிய இயக்கம், உமா பதிப்பகம், தேங்காய்த் திட்டு, புதுவை.

29. சரளா இராஜகோபாலன் (1995) இலக்கியத்தின் நோக்கமும் பயனும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், வெள்ளி விழா வெளியீடு, சென்னை.

30. சாமி, பி. எல். (1967) சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், கழக வெளியீடு, சென்னை.

31. சிவராஜ், து. (1994) சங்க இலக்கியத்தில் உளவியல், சிவம் பதிப்பகம், வேலூர்.

32. சீதா, இரா. (1995) உள்ளுறை & இறைச்சி (*தொல்காப்பிய இலக்கிய கோட்பாடுகள்*), உலகத் தமிழாராய்ச்சி நிலையம், சென்னை.

33. சீநிவாசன் (1987) சங்க இலக்கியத் தாவரங்கள், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

34. சுப்பிரமணியன், ஏ. வி. (1983) புதியகோணங்களில் சங்க இலக்கியம், வானதி பதிப்பகம், சென்னை.

35. சுப்பிரமணிய ஐயர், ஏ.வி. (1959) தமிழாராய்ச்சியின் வளர்ச்சி, பாரிநிலையம், சென்னை.

36. சுப்புரெட்டியார், ந. (1998) அகத்திணைக் கோட்பாடுகள், (*தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள்*), உலகத்தமிழாராய்ச்சி நிலையம், சென்னை.

37. செண்பகம் ராமசாமி (2006) படிமமும் குறியீடும், (*இலக்கிய இஸங்கள்*), அகரம் வெளியீடு, தஞ்சாவூர்.

38. செயராமன், நா. (1976) முல்லைப் பாடல்கள், குமரன் பதிப்பகம், மதுரை.

39. ஞானக்கூத்தன் (1973) அன்று வேறுகிழமை, சென்னை இலக்கியச் சங்கம், சென்னை.

40. ஞானசம்பந்தன், அ.ச. (1984) இலக்கியக் கலை, கழக வெளியீடு, சென்னை.

41. தமிழண்ணல் (2003) சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கியக் கொள்கைகள், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.

42. தமிழண்ணல் (2005) சங்க இலக்கிய ஒப்பீடு இலக்கிய வகைகள், மீனாட்சி புத்தகநிலையம் மதுரை.

43. தமிழண்ணல் (1986) தொல்காப்பியரின் இலக்கியக் கொள்கைகள் - உள்ளுறை, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.

44. தமிழண்ணல் (1986) தொல்காப்பியரின் இலக்கியக் கொள்கைகள் - இறைச்சி, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.

45. தமிழவன் (1992) தமிழும் குறியியலும்., உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

46. தனஞ்செயன் (1996) குலக்குறியியலும் மீனவர் வழக்காறுகளும், அபிதா பப்ளிகேசன்ஸ், பாளையங்கோட்டை.

47. துரைசாமிப்பிள்ளை, ஔவை. (1972) குறுந்தொகைச் சொற்பொழிவுகள், கழக வெளியீடு, சென்னை.

48. நச்சினார்க்கினியர் (1971) தொல்காப்பியம் பொருளதிகாரம், கழக வெளியீடு, சென்னை.

49. நடராஜன், தி.சு. (2006) திறனாய்வுக் கலை, நியூ செஞ்சுரி புக்கவுஸ், சென்னை.

50. பரிமேலழகர் (1994) திருக்குறள், பாரதி பதிப்பகம், சென்னை.

51. பவுன்துரை, இராசு. (2006), பண்டைத் தமிழக வரைவுகளும் குறியீடுகளும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

52. பாரதிதாசன் கவிதைகள் (2002), மணிவாசகர் பதிப்பகம், சென்னை.

53. பாரதியார் கவிதைகள் (2005), நியூ செஞ்சுரி புக்கவுஸ், சென்னை.

54. பாலா கவிஞர், (2006) புதுக்கவிதை ஒரு புதுப்பார்வை, அகரம் வெளியீடு, தஞ்சாவூர்.

55. பிள்ளை, கே.கே. (1974) பழந்தமிழ் இலக்கியம் காட்டும் சமூக வரலாறு, சென்னைப்பல்கலைக் கழகம். சென்னை.

56. பொன்மணி வரமுத்து (2002) சங்க இலக்கியத்தில் புதுக்கவிதைக் கூறுகள், சூர்யா வெளியீடு, டிரஸ்ட் புரம், சென்னை.

57. மாணிக்கம், வ.சுப. (1962) தமிழ்க் காதல், பாரிநிலையம், சென்னை.

58. மீனாட்சி சுந்தரம். தெ.பொ. (**1981**) தமிழ் இலக்கிய வரலாறு, சர்வோதய இலக்கியப்பண்ணை, மதுரை.

59. முத்துகுமாரசாமி, எம்.டி. (**1988**) பிற்கால அமைப்பியலும் குறியியலும், தமிழ்த்துறை ஆய்வுமையம், தூய சவேரியார் கல்லூரி, பாளையங்கோட்டை.

60. முத்துசாமி, க. (**1994**) தொல்காப்பியத்தில் குறிப்புப் பொருள், அன்னம் வெளியீடு, சிவகங்கை.

61. முத்துசாமி, க. (**2006**) சங்கத்தமிழ் குறிப்புப் பொருள், அன்னம் வெளியீடு, தஞ்சாவூர்.

62. வரதராசனார், மு.வ. (**1958**) மொழிநூல், கழகவெளியீடு, சென்னை.

63. வரதராசன், மு.வ. (**1979**) பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பாரிநிலையம், சென்னை.

64. வேலுப்பிள்ளை, ஆ. (**1978**) தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், பாரி புத்தகப் பண்ணை, சென்னை.

65. ஜகந்நாத ராஜா, மு.கு. (**2006**) தொனிக்கோட்பாடு, (*இலக்கிய இஸங்கள்*), அகரம் வெளியீடு, தஞ்சாவூர்.

66. அண்ணாமலை, க. (**1977**) சங்க இலக்கியத்தில் முல்லைத்திணை (முனைவர் பட்ட ஆய்வேடு) சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை.

67. Adler, Mortimer J. (**1977**) Encyclopaedia of Brittanica, Chicago.

68. Chadwic Charles (**1971**) Symbolism, Methuen, London.

69. Chettair, A.C. (**1965**) English - Tamil Dictionary, University of Madras, Chennai.

70. Cuddon, J.A. (**1977**) A Dictionary of Literary Terms, London.

71. Eugene Carnie, Wikipaedia Online Encyclopedia.

72. Graham Hought (**1967**) Literary Modernism, Gawcat World Library, New York.

73. Keir Elam (**1980**) Semiotics of Theatre and Drama, Rouldge, London.

74. Peirce, Wikipedia Online Encyclopedia.

75. Saussure, Wikipedia Online Encyclopedia.

76. Terence Hawkes, (**1977**) Structuralism and Semiotics, Methuen, London.

77. Wellek, Rene and Warren, Austin (**1954**), Theory of Literature, Jonathan Cape, London.